# சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்

காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழக முனைவர் (Ph.D)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

திருமதி: **ப.சு. செல்வமீனா**

(பதிவு எண் : **691)**

நெறியாளர்

முனைவர். **மு. பாண்டி**

தமிழ்த்துறைத்தலைவர்,

தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 3.






தமிழ்த்துறை

**அழகப்பா பல்கலைக் கழகம்**

காரைக்குடி - 3.

ஜூலை - 2006.

முனைவர் மு. பாண்டி, எம்.ஏ.,(தமிழ்), எம்.ஏ.,(இதழியல்), எம்.ஃபில்., பிஎச்.டி.,
துறைத்தலைவர், தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 21. 7. 04

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்"** என்னும் தலைப்பில் திருமதி ப.சு.செல்வமீனா அவர்கள் முனைவர் **(Ph.D.,)** பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப் பெறவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

(முனைவர்.மு. பாண்டி)
நெறியாளர்

**துறைத்தலைவர்**
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003

ப.சு. செல்வமீனா, எம்.ஏ., எம்.ஃபி ல்,.
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி-630 003.

நாள்: 3.7.06

# ஆய்வாளர் உறுதிமொழி

"***சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்***" என்னும் தலைப்பில் முனைவர் (**Ph.D.,**) பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

செல்வமீனா.
(ப.சு. செல்வமீனா)
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

முனைவர் மு. பாண்டி, எம்.ஏ.,(தமிழ்), எம்.ஏ.,(இதழியல்), எம்.ஃபில்., பிஎச்.டி.,
தமிழ்த்துறைத் தலைவர்,
அழகப்பா பல்கலைக் கழகம்,
காரைக்குடி-630 003.

# நன்றியுரை

**சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்** என்னும் தலைப்பில் ஆய்வினைச் செய்ய எனக்கு அனுமதியளித்த அழகப்பா பல்கலைக்கழகத்திற்கும், தமிழ்த்துறைக்கும் என் நன்றியினைக் கூற கடமைப்பட்டுள்ளேன்.

என் ஆய்விற்குப் பல வழிகளில் உதவிய **பதிவாளர் முனைவர் இரெ.தண்டபாணி** அவர்களுக்கும், இத்தலைப்பைத் தந்ததுடன் பல்வேறு உதவிகள் செய்த முன்னாள் தமிழ்த்துறைத் தலைவர் **பேராசிரியர் முனைவர் தே.சொக்கலிங்கம்** அவர்களுக்கும் நன்றி.

தமிழ்த்துறைத் தலைவராக இருந்து தற்போது பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் தேர்வுக்கட்டுப்பாட்டு அதிகாரியாகப் பணிபுரிந்து வரும் **முனைவர் இரா.பாலசுப்பிரமணியன்** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

படிப்பிற்கு நல்ல வழிகாட்டி அமைவது இறைவன் கொடுத்த வரம் என்பதற்கேற்ப என்னை முதுகலைப்பட்டம், ஆய்வியல் நிறைஞர்ப்பட்டம் முனைவர்பட்டம் முதலானவற்றிற்கு நல்முறையில் நெறிப்படுத்திய எனது உடன்பிறவாத சகோதரர் போன்ற நெறியாளரும், **தமிழ்த்துறைத்தலைவருமான முனைவர் மு.பாண்டி, திருமதி பா.பிருந்தாரமணி, செல்வன் பா.விஜயாலயன்** ஆகியோருக்கும் என் நன்றி மலர்களைக் காணிக்கையாக்குகிறேன்.

ஆய்விற்கு மட்டுமல்லாது நான் படித்து முன்னேறுவதற்குப் பல்வேறு நூல்கள் கொடுத்துதவிய இணைப்பேராசிரியர்கள் **முனைவர் சே.செந்தமிழ்ப்பாவை, முனைவர் சு.இராசாராம்,** விரிவுரையாளர் **திரு.மு.நடேசன், முனைவர் மு.சுதா** முதலானோர்க்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

நான் ஆய்வினை விரைந்து முடிக்கத் தூண்டிய அழகப்பா அரசு கலைக்கல்லூரியின் தமிழ்த்துறைத்தலைவர் **பேராசிரியர் ம.கார்மேகம், முனைவர் க.காந்தி, பேராசிரியர் ம.துரை, முனைவர் கே.கண்ணாத்தாள், முனைவர் ச.முருகேசன், முனைவர் இரா.குமார், விரிவுரையாளர்கள் சி.பரமேஸ்வரி, சோ.முத்தமிழ்ச்செல்வன், க.சொல்லேருழவன், க.சுப்பிரமணியன், கு.கலைவாணி,** வரலாற்றுத்துறை விரிவுரையாளர் **திரு.லட்சுமிநாராயணன்** முதலானோர்க்கும் எனது நன்றிகள்.

நான் ஆய்வு செய்ய அனைத்து நூல்களையும் நல்கியுதவிய அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகத்தாருக்கும், சகோதரர் **திரு.க.பழனியப்பன்** அவர்களுக்கும், அழகப்பா பல்கலைக்கழக அலுவலர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"தந்தை மகற்காற்றும் உதவி," 'ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும்' என்னும் குறள்கள் வழி நின்று என்னை இந்நல்நிலைக்கு உயர்த்திய எனது **ஆருயிர்ப் பெற்றோர் ப.சுப்பிரமணியன், ப.சு.செல்லம்மாள்** மற்றும் **பெரியப்பா பரமசிவம், பெரியம்மா இலட்சுமி** ஆகியோருக்கும் என் நன்றி மலர்களைச் சமர்ப்பிக்கின்றேன்.

நான் சோர்வுற்ற பொழுதெல்லாம் எனக்கு ஊக்கமும் ஆக்கமும் கொடுத்து ஆய்வுப்பணியை விரைந்து முடிக்கத் தூண்டிய எனது கணவர்

திரு.மு.முத்துக்குமரன், மகள் மு.செ.தாரிகாஸ்ரீ, மாமனார் க.முத்துராமலிங்கம், மாமியார் மு.இராஜாமணி, மு.ராம்குமார், ரா.புஷ்பவள்ளி, மு.காமராஜ், உ.நாகமணி, வெற்றிச்செல்வம், வெ.தாமரைச்செல்வி, செல்லம்மாள் முதலானோர்க்கு என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்விற்கு உதவிய எனது சகோதரிகள் அவர்தம் கணவர்கள், குழந்தைகள் முறையே ப.தமிழ்ச்செல்வி, சு.முத்துக்கிருஷ்ணன், மு.ரேவதி, மு.பிரியங்கா, ப.சொர்ணலதா, பா.பாண்டியராஜ், பா.அபிநயா, பா.தீபிகா, ப.சு.வானதி, சு.சந்தான கிருஷ்ணமூர்த்தி, ச.நவீனா, ச.நந்தகுமார், ப.சு.மேகலா, உ.இளஞ்செழியன், இள.முகிலன், இள.விமலன் ஆகியோருக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குதவிய எனது சகோதரர்கள் ப.சு.செல்வக்குமார், வை.இராமராஜபாண்டியன், ம.பால்வண்ணன், த.கண்ணன், மு.பழனித்துரை, இராம. தேவணன், ப.இராம்பிரபு, கு.சாமிநாதன், மு.பாலு முதலானோர்க்கும் என் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் படிப்பதற்கு நூல்கள் தந்துதவிய முனைவர் இரமேஷ் சாமியப்பா, திரு.இரா.விமலன் ஆகியோருக்கும் என் மனமார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

எனக்குப் பல்லாற்றானும் துணைபுரிந்த வே.ஆண்டாள், வே.தேவி, பா.ஜோதிலெட்சுமி, து.சிவசக்தி, ப.சாந்தி, ம.சித்ராகண்ணு, இர.தாமரைச்செல்வி, மு.கண்ணகி, அ.விமலா, கரு.சமத்துவம், மு.பஞ்சவர்ணம், இரா.ரேணுகா காந்தி, சொ.அழகுமாலா,

கரு.மணிமேகலை, பொ.முத்துமாரி, நா.புவனேசுவரி, அ.சங்கர்தாஸ், ஆறு.முத்துக்கருப்பன், து.இரவிக்குமார், ச.கணேஷ்குமார், சு.கார்த்திக்கேயன் மற்றுமுள்ள ஆய்வாளர் நண்பர்களுக்கும் என் நன்றிகளைக் கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

அமெரிக்காவில் இருந்துகொண்டே என்னைப் படிக்கத் தூண்டிய சகோதரி வை.தீபா அவர்களுக்கு என் நன்றி.

சட்ட நூல்கள் கொடுத்துதவிய வழக்கறிஞர் திரு.கே.வேல்முருகன் அவர்களுக்கும், திரு.இராஜேஷ்குமார், கே. முத்துக்குமார், எம்.பூமிபாலமுருகன் ஆகியோருக்கும் என் நன்றிகள்.

இவ்வாய்வேட்டைச் செம்மையாகவும், நேர்த்தியாகவும் கணினியில் அச்சாக்கம் செய்த காரைக்குடி நிதிஷ்பிரபா கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தாருக்கும், கட்டமைப்புச் செய்த ரவி அச்சகத்தாருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

ப.சு. செல்வமீனா

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா. | - | அகநானூறு |
| அகநா.கட.வாழ். | - | அகநானூறு கடவுள் வாழ்த்து |
| ஆ.இ. | - | ஆண்டு இல்லை |
| உ.ஆ. | - | உரையாசிரியர் |
| கலித். | - | கலித்தொகை |
| குறிஞ்சிப். | - | குறிஞ்சிப்பாட்டு |
| சிறுபா. | - | சிறுபாணாற்றுப்படை |
| திருமுருக. | - | திருமுருகாற்றுப்படை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| தொ.ஆ. | - | தொகுப்பாசிரியர் |
| நற். | - | நற்றிணை |
| நற்.கட.வாழ். | - | நற்றிணை கடவுள் வாழ்த்து |
| நெடுநல். | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| பட்டினப். | - | பட்டினப்பாலை |

| | | |
|---|---|---|
| பதி. | - | பதிற்றுப்பத்து |
| பதிற்.பதி. | - | பதிற்றுப்பத்து பதிகம் |
| பதி(II). | - | பதிற்றுப்பத்து இரண்டாம்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பரி.செவ். | - | பரிபாடல் செவ்வேள் |
| பரி.திரு.வாழ். | - | பரிபாடல் திருமால் வாழ்த்து |
| பரி.வையை. | - | பரிபாடல் வையை |
| புறநா. | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| மதுரைக். | - | மதுரைக்காஞ்சி |
| மலைபடு. | - | மலைபடுகடாம் |
| முல்லைப். | - | முல்லைப்பாட்டு |
| மேலது. | - | மேலே காட்டியது |

# பொருளடக்கம்

1. முன்னுரை

2. ஆய்வுத் தலைப்பு

3. ஆய்வு நோக்கம்

4. கருதுகோள்

5. சான்றாதாரங்கள்

6. அணுகுமுறைகள்

7. ஆய்வு முன்னோடிகள்

8. ஆய்வுப் பகுப்பு

8.1 குற்றம் தண்டனை வரையறையும் விளக்கமும்

8.2 சங்ககால அறமன்றங்களும் அவற்றின் செயல்பாடுகளும்

8.3 சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்

8.4 சங்ககாலம் தற்காலம் ‘குற்றங்கள் தண்டனைகள்’ ஓர் ஒப்பீடு

9. முடிவுரை

## 1. முன்னுரை

சங்க இலக்கியங்கள் பண்டைத் தமிழ்மக்களின் நாகரிகத்தையும், தொன்மை, பெருமை முதலியவற்றையும் சித்தரிக்கும் கருத்துக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. இவை மனித உறவுகள், உணர்வுகள் சமூக இணக்கங்கள், அற விழுமியங்கள் ஆகியவற்றை எக்காலத்திற்கும் பொருந்தும் வகையில் மொழிகின்றன. இவற்றின் பாடுபொருள்கள் காதலும் வீரமும் ஆகும். இவ்விரண்டைப் பற்றிக் கூறும் பாடல்களில் அறநெறிக் கருத்துக்களும், நல்லொழுக்க வலியுறுத்தல்களும் இடம்பெற்றுள்ளன. மேலும் அக்காலத்து அரசுமுறை, ஆட்சிச்சிறப்பு, அரசியல் நடைமுறைகள் எனப் பல்வேறு செய்திகளையும் தன்னுள் கொண்டுள்ளன. அக்கால மக்கள் புரிந்த குற்றங்களையும் அவற்றிற்கு வழங்கப்பெற்ற நீதி முறைகளையும் தண்டனைகளையும் எடுத்தியம்பும் வகையில் இவ்வாய்வு அமைகின்றது.

## 2. ஆய்வுத் தலைப்பு

சங்கம் மருவிய காலம்போல சங்க காலத்தில் நீதியைத் தனித்துக் கூறும் நூல்கள் கிடைக்கப்பெறவில்லை. அக்காலத்தில் நிகழ்ந்த குற்றங்களையும் அவற்றிற்கு வழங்கப்பட்ட தண்டனைகளையும் காணும் முகமாக **"சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்"** என்பது ஆய்வுப் பொருளாக எடுத்துக் கொள்ளப் பெற்றது.

## 3. ஆய்வு நோக்கம்

குற்றங்கள் புரிவது மனித இயல்பு. மனிதர்கள் செய்யும்

குற்றங்களுக்கு அவ்வவ்காலச் சமூக இயக்கம் மற்றும் அரசியல் நிலைகளுக்கேற்ப தண்டனைகள் வழங்கப் பெற்றுள்ளன. சங்ககால மக்களின் வாழ்வியலை அறியப் பெரிதும் துணைபுரியும் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள குற்றங்களையும் அவற்றிற்கு நீதி அமைப்புகளால் வழங்கப்பெற்ற தண்டனைகளையும் தனித்துக் காண்பது இவ்வாய்வின் நோக்கமாகும்.

### 4. கருதுகோள்

இலக்கியங்கள், அவை தோன்றும் காலம் மற்றும் சமூகத்தின் பிரதிகள் ஆகும். அச்சமூகத்தில் வாழ்ந்த மக்களின் பலதரப்பட்ட செயற்பாடுகளைத் தன்னுள் கொண்டவை எனும் நிலையில் தமிழில் கிடைக்கும் தொன்மையான சங்க இலக்கியங்கள் அக்கால மக்கள் புரிந்த குற்றங்களையும் அவற்றிற்குக் கொடுக்கப்பெற்ற தண்டனைகளையும் அவற்றை வழங்கிய அமைப்புக்களையும் எங்ஙனம் வெளிப்படுத்துகின்றன என்பதைக் காண்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### 5. சான்றாதாரங்கள்

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியவை இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. சங்க இலக்கியத் திறனாய்வு நூல்கள், அகராதிகள், களஞ்சியங்கள், கட்டுரைகள், மலர்கள், ஆய்வேடுகள் போன்றவை துணைமைச் சான்றாதாரங்களாகத் திகழ்கின்றன.

## 6. அணுகுமுறைகள்

மக்கள் வாழ்க்கையில் நிகழ்ந்த குற்றங்களுக்கு வழங்கப்பட்ட தண்டனைகளை விளக்குவதற்கு விளக்கவியல் அணுகுமுறையும், மக்களின் வாழ்வியலைக் காணும் நிலையில் சமுதாயவியல் அணுகுமுறையும், குற்றங்கள், தண்டனைகள் முதலானவற்றைப் பகுத்துக் கூறுவதால் பகுப்பாய்வு அணுகுமுறையும், சங்ககாலத்தைத் தற்காலத்துடன் ஒப்பிடுவதால் ஒப்பீட்டு அணுகுமுறையும் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

## 7. ஆய்வு முன்னோடிகள்

இத்தலைப்பு தொடர்பாக இதுகாறும் முனைவர்பட்ட ஆய்வுகள் நிகழ்ந்ததற்குச் சான்றுகள் இல்லை. சங்ககாலத்துக் குற்றங்கள், தண்டனைகளை ஆய்வுப் பொருளாக்கி செந்துறை முத்துவின் 'தமிழ்நீதி', தேவநேயப்பாவாணரின் 'பழந்தமிழாட்சி', மு.முத்துவேலின் 'சங்கத்தமிழ் கூறும் சட்டநெறி', மா.சண்முகசுப்பிரமணியனின் 'சட்டத்தமிழ்' முதலான நூல்களும், பெ. வேணுகோபாலின் 'சங்ககாலச் சமூகநீதி', அ.விசுவநாதனின் 'ஊர்ச்சபை' முதலான கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. இவை ஆய்விற்கு முன்னோடிகளாக அமைந்துள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

**"சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்"** என்னும் இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது. அவை,

1. குற்றம் தண்டனை வரையறையும் விளக்கமும்

2. சங்ககால அறமன்றங்களும் அவற்றின் செயல்பாடுகளும்

3. சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்

4. சங்ககாலம், தற்காலம் 'குற்றங்கள் தண்டனைகள்' ஓர் ஒப்பீடு என்பனவாகும்.

முன்னுரையில் ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், கருதுகோள், சான்றாதாரங்கள், அணுகுமுறைகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வுப்பகுப்பு ஆகியவை இடம்பெற்றுள்ளன.

**8.1 "குற்றம் தண்டனை வரையறையும் விளக்கமும்"** என்னும் இவ்வியலில் குற்றம் என்பதன் பொருள் குறித்த அறிஞர்களின் கூற்றுக்கள், குற்றத்தின் வகைகள், குற்றம் என்ற சொல்லாட்சியைக் குறிக்கும் சொற்கள் சங்க இலக்கியத்தில் இடம்பெறும் இடங்கள் சுட்டப் பெற்றுள்ளன. தண்டனை விளக்கம், வகைகள், தண்டனை என்ற பொருள் தரும் 'ஒறுப்பு' என்ற சொல்லாட்சி இலக்கியத்தில் பயின்று வந்துள்ள இடங்களும் விளக்கப் பெற்றுள்ளன.

**8.2 "சங்ககால அறமன்றங்களும் அவற்றின் செயல்பாடுகளும்"** என்னும் இவ்வியலில், சங்ககாலத்தில் அவை, அவையம், அவைக்களம், அறங்கூறவையம், நாளவை போன்ற அமைப்புகள் செயல்பட்டமையும் அவை சங்க இலக்கியத்தில் இடம்பெற்றமையும் விளக்கப்பட்டுள்ளன. ஊரவை அமைப்புகளான மன்றம், பொதியில், அம்பலம் முதலானவை நாள்தோறும் கூடி வழக்குகளை விசாரித்தமை, இவை இலக்கியத்தில் இடம்பெறும் விதம், பிற பயன்பாட்டிற்குப் பயன்பட்டமை முதலானவை குறிப்பிடப்படுகின்றன.

**8.3 "சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்"** என்னும் மூன்றாமியலில் சங்ககாலத்தில் குற்றங்களுக்குத் தண்டனைகள் வழங்கப்பட்ட விதங்களும் அவற்றின் பாகுபாடுகளும் விளக்கப்பட்டுள்ளன.

**8.4 "சங்ககாலம் தற்காலம் 'குற்றங்கள் தண்டனைகள்' ஓர் ஒப்பீடு"** என்னும் இவ்வியலில் சங்ககால குற்றங்களும் தண்டனைகளும் தற்காலத்துடன் ஒப்பிட்டுக் காணப்பட்டுள்ளன. சங்ககாலத்திலிருந்த ஒரு சில குற்றங்கள் தற்காலத்துடன் ஒன்றுபட்டும், வேறுபட்டும் வருவதை இவ்வியல் விளக்குகிறது.

**9. *முடிவுரை***

முடிவுரையில் நான்கு இயல்களிலிருந்தும் பெறப்பட்ட செய்திகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. இவ்வாய்விற்குப் பயன்பெற்ற நூல்கள், அகராதிகள், களஞ்சியங்கள், கட்டுரைகள், மலர்கள், ஆய்வேடுகள் ஆகியன துணைநூற்பட்டியலில் அகரவரிசைப்படி இடம் பெற்றுள்ளன. பின்னிணைப்பில் 'குற்றம்' 'ஒறுப்பு' என்ற பொருள் தரும் சொற்கள், சங்ககால அறமன்றங்கள் குறித்த அட்டவணைகள் கொடுக்கப் பெற்றுள்ளன.

1.1 முன்னுரை

1.2 குற்றம் - வரையறை

1.2.1 குற்றத்தின் வகைகள்

1.2.2 குற்றம் என்ற சொல்லாட்சி

1.2.3 குற்றம் என்ற பொருள்தரும் பிற சொற்கள்

1.2.3.1 அரலை

1.2.3.2 ஆசு

1.2.3.3 கசடு

1.2.3.4 கறை

1.2.3.5 செயிர்

1.2.3.6 தா

1.2.3.6.1 பிற பொருள்களில் தா

1.2.3.7 தீது

1.2.3.7.1 பிற பொருள்களில் தீது

1.2.3.8 துகள்

1.2.3.9 நவை

12.3.10 பழி

1.2.3.11 பழுது

## 1.1 முன்னுரை

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் வாழ்ந்த மக்களின் குடும்பம், சமூகம், பொருளாதாரம் போன்ற காரணிகள் அவர்களின் வாழ்வியலைத் தீர்மானிக்கின்றன. இரண்டாயிரமாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர்களாகக் கருதப்படும் சங்ககால மக்களின் வாழ்க்கையில் நிகழ்ந்த குற்றங்களையும் அவற்றிற்கு வழங்கப்பட்ட தண்டனைகளையும் அறிதற்கு முன் குற்றம், தண்டனை எனும் இரு சொற்களுக்கும் இலக்கண வரையறை செய்வது ஆய்வில் இன்றியமையாததாகும். சங்க இலக்கியங்களில் பயின்று வரும் குற்றம், தண்டனை என்னும் பொருள் தரும் சொற்கள், என்னென்ன பொருள்களில் பயின்று வருகின்றன என்பதைக் கண்டறிவதும் இன்றியமையாதது எனும் நிலையில் இவ்விரு சொற்களையும் விளக்கிக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## 1.2 குற்றம் - வரையறை

இனக்குழுக்களாக வாழ்ந்த மக்கள் தங்கள் இன ஒருமைப்பாட்டிற்கென எழுதாத சில நடைமுறைகளைக் கடைபிடித்துள்ளனர். சமுதாய ஒழுங்கமைப்பைக் குழைக்கும் செயல்களைக் குற்றம் எனக் கருதினர். இதற்கு அறிஞர் பெருமக்கள் பல்வேறு கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர். "அவ்வப்போது நடைமுறையிலுள்ள சட்டத்தின்படி தண்டிப்பதற்குரிய எந்தச் செய்கையைச் செய்தாலும் (Crime) குற்றம் எனப்படும். ஒருவரது செயல் அல்லது நடத்தையைக் குற்றமென்று கண்டறிவதற்குப் பின்வரும் தன்மைகள் அதில் அடங்கியிருத்தல் வேண்டும். அவை. 1.சமுதாயத்திற்குத் தீங்கு பயப்பனவாய் இருத்தல் வேண்டும். 2. அரசால் தடை

செய்யப்பட்டனவாயிருத்தல் வேண்டும். 3. தண்டனைக்குரியனவாய் இருத்தல் வேண்டும்"[1] என்று வாழ்வியற் களஞ்சியம் குறிப்பிடுகிறது.

சர் ஜேம்ஸ் ஸ்டீபன் அவர்கள் குற்றம் என்பதற்கு "ஒரு செயலைச் செய்தோ அல்லது செய்யாமலிருந்தோ ஒரு நபர் தவறிழைத்து, அதற்காக அவருக்குச் சட்டப்படி தண்டனை வழங்கப்படலாமெனில் அச்செயல் அல்லது அச்செயல் தவிர்க்கை ஒரு குற்றமாகும்"[2] என்று கூறியுள்ளார்.

வாழ்வியற் களஞ்சியம் குற்றம் என்பதற்கு பல்வேறு அறிஞர்களின் விளக்கங்களைத் தொகுத்துக் கூறுகிறது. "குற்றம் என்பதைப் பேராசிரியர் குட்கார்ட் (Good heart) சட்டத்தால் தண்டனை விதித்துத் தடுக்கப்படும் நடத்தை அல்லது அரசால் தண்டிக்கப்படும் செயல் என்றும்; ஆல்சுபரி (Halsbury) சட்ட முரணான செய்கை அல்லது தவறுகை என்றும்; பொங்கர் (Bongar)சமுதாயத்திற்கு எதிரான ஒரு செய்கை என்றும்; மைக்கேல் (Micheal)ஆல்டர்(Alder)ஆகியோர் குற்றவியல் சட்டத்தால் தடை செய்யப்பட்ட நடத்தை என்றும்; பி.ஏ. உரோட்லே (B.A.Wrotely) சட்டம், ஒழுங்கு (Morality) சமுதாய சக உறுப்பினர் நலன் ஆகியவற்றிற்கு எதிரான தீங்கிழைப்பு என்றும்; இரசல் (Russel) மனித நடத்தையின் விளைவு"[3] என்றும் குறிப்பர்.

சங்ககால வாழ்வியல் "எடுத்தோதப்பட்ட (நிறுவப்பட்ட) சமுதாய ஒழுங்கினைப் புரட்டும் முயற்சி யாவையும் அடிப்படையான குற்றம்"[4] என்று கூறுகிறது.

சர் வில்லியம் பிளாக்ஸ்டோன் "பொதுச் சட்டத்தினை மீறி அதனால் தடை விதிக்கப்பட்ட செயலைச் செய்வதோ அல்லது செய்ய வேண்டிய செயலைச் செய்யாமலிருப்பதோ குற்றமாகும்"[5] என்று வரையறுத்து உணர்த்தியுள்ளார்.

குற்றம் என்பதன் விளக்கமாக "சமுதாய ஒழுங்கு முறையின்மைக்கான ஒரு அறிகுறி"(6) என்று குற்றவியல் அறிஞர்கள் எட்வின் & சதர்லாண்டு கூறியுள்ளனர்.

மேற்கூறிய அறிஞர்கள் அனைவரும் சமுதாயத்தை அடிப்படையாக வைத்துக் குற்றம் என்ற சொல்லுக்கு வரையறை தந்துள்ளனர். சமுதாயம் முன்னேறாமல் இருப்பதற்குக் குற்றச் செயல்களே காரணம் என்பதும் சமுதாயம் முன்னேற குற்றத்தைத் தடுக்க வேண்டும் என்பதும் வலியுறுத்தப் பெற்றுள்ளது. குற்றத்தைச் சமுதாயத்திற்கு எதிரானது ஒழுக்கக்கேடானது என்று வரையறுத்துக் கூறினாலும் டபிள்யூ பால் தாப்பன் என்னும் அறிஞர் குற்றம் என்பது சமூகத்தோடு மட்டுமல்ல சட்டத்தோடு நெருங்கிய தொடர்புடையது என்று கருதி அதற்கு வரையறை கூறியுள்ளார். அவர் "குற்றச் சட்டத்தை மீறிய வகையிலும், தற்காப்பு அல்லது நியாயப்படுத்தும் சூழல் ஆகிய இரண்டும் இல்லாத நிலையில் புரியப்பட்டதும் சட்டத்தால் ஒரு பெருங்குற்றமாகவோ, அல்லது சிறு குற்றமாகவோ தண்டிக்கப்படத்தக்கதுமான, கருத்துடன் கூடிய ஒரு செயல் அல்லது செயல் தவிர்க்கையே குற்றமாகும்"(7) என்கிறார்.

குற்றம் என்ற சொல் சமுதாயத்திற்கு, சட்டத்திற்கு முரணான செயல் அல்லது செயலின்மை என்ற பொருளைத் தருகின்றது.

இக்கருத்தையே ஆர்.எம்.கிருஷ்ணராஜு அவர்கள் "சட்டத்தால் தண்டிக்கத்தக்க செயல்களும், செயலின்மைகளும் குற்றங்களாகும்"(8) என்று குறிப்பிடுவர். குற்றம் என்ற சொல்லிற்கு சட்டத்திற்குப் புறம்பான செயல்"(9) என்றும் சட்டத்தினால் கடுமையாகத் தண்டிக்கப்படக் கூடிய

செயல்"[10] என்றும் ஆங்கில ஆக்சுபோர்டு அட்வான்சுடு அகராதி பொருள் கூறுகின்றது.

மேற்கூறிய விளக்கங்களின் மூலம் குற்றம் என்பது சமூகத்தில் அரசு அமல் நடத்தும் நீதி நெறிகளையும் சட்டதிட்டங்களையும் மீறுவதாகும். "குற்றம் என்பது நாட்டின் சட்டப்படி தடை செய்யப்பட்ட செயலாகும். மேலும் அச்செயல் தண்டனை வழங்கும் அளவு கடுமையானதெனக் கருதப்படுவதாகும்"[11].

### 1.2.1 குற்றத்தின் வகைகள்

குற்றங்களின் தன்மைகளைக் கொண்டு அவற்றை வகைப்படுத்துவது சரியானதாக அமையும். சங்க காலத்தில் குற்றங்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை.

1. அறநூலுக்கு மாறானவை
2. அரசியலுக்கு மாறானவை
3. தெய்வத்திற்கு மாறானவை

என்பனவாகும். சங்ககாலத்தில் குற்றங்கள் இன்றிருப்பது போல் குற்றத்தின் தன்மையைப் பொறுத்துப் பிரிக்கப்படவில்லை. தற்போது குற்றம் இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை,

1. உரிமையியல் சார் குற்றம் (Civil)
2. குற்றவியல்சார் குற்றம் (Criminal)

முதலானவை.

"ஒருவர் மற்றவரின் உடைமைக்கும் உரிமைக்கும் பாதிப்பை ஏற்படுத்தும் போது உரிமையியல் சார் குற்றமாகிறது"(12) என்று மு.முத்துவேலு குறிப்பிட்டுள்ளார். இவர், "ஒருவரது உடலை இன்னொருவர் தாக்கிக் காயம் விளைவித்தால் அல்லது இன்னொருவரின் உயிர் நீக்குமாறு அவரைத் தாக்கியிருந்தால் அது குற்றவியல் சார் குற்றமாகக் கருதப்படுகிறது"(13) என்றும் கூறுகிறார்.

பேராசிரியர் பாங்கர் என்பவர் குற்றம் என்பதனைக் குற்றவாளிகளின் உள்நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு நான்கு வகையாகப் பிரித்துள்ளார்.

1. பொருளாதாரக் குற்றம் ( Economics Crimes)

2. அரசியல் குற்றம் ( Political Crimes)

3. பால் உணர்ச்சிக் குற்றம் ( Sexual Crimes)

4. மற்ற குற்றங்கள் ( Miscellaneous Crimes)அதாவது பழிக்குப் பழி என்ற நோக்கத்திற்காகக் குற்றங்கள் புரிதல்"(14) ஆகியவையாகும்.

இந்திய தண்டனைச் சட்டம் குற்றத்தை ஏழு வகையாகப் பகுத்துள்ளது. அவை,

"1. நபருக்கெதிரான குற்றங்கள்

2. சொத்துக்கெதிரான குற்றங்கள்

3. ஆவணங்கள் சம்பந்தமான குற்றங்கள்

4. உளவியல் ஒழுக்கத்தைப் பாதிக்கும் குற்றங்கள்

5. பொது அமைதிக்கெதிரான குற்றங்கள்

6. அரசுக்கெதிரான குற்றங்கள்

7. பொது ஊழியர்கள் சம்பந்தமான குற்றங்கள்"(15)

என்பனவாகும்.

மேற்கூறிய வகைப்பாடு பகுத்தறிவுக்கு உட்பட்டதாவும், தெளிவானதாகவும், விரிவானதாகவும் உள்ளது. ஆனால் சங்ககாலத்தில் இந்தப் பகுப்புமுறை காணப்படவில்லை.

### 1.2.2 குற்றம் என்ற சொல்லாட்சி

தொல்காப்பியத்தில் எழுத்து, சொல், அதிகாரங்களில் குற்றம் என்ற சொல்லாட்சி இடம் பெறவில்லை. பொருளதிகாரத்தில் இச்சொல்லாட்சி (986:2, 1048:9, 1092:7, 1092:21, 1156:2, 1598:3) இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் கலித்தொகை மட்டுமே குற்றம் என்ற சொல்லாட்சியைப் பதிவு செய்துள்ளது. கலித்தொகையில் மூன்று இடங்களில் குற்றம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

"இருவர்கட் குற்றமும் இல்லையால் என்று"(16)

என்ற கலித்தொகை அடியில் குற்றம் என்ற சொற்றொடர் இடம்பெற்றுள்ளது.

பிறர் குற்றத்தைக் கூறுதலை அறியாதவன் தலைவன் என்பதை,

"மாறுகொண் டாற்றா ரெனினும் பிறர் குற்றங்
கூறுதல் தேற்றாதோன் குன்று"(17)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதில் குற்றம் என்ற சொல் இடம் பெற்றுள்ளது.

தலைவன் தலைவியைப் புணர்ந்து கைவிட்டதால் அவனது குடிக்குப் பெரிய குற்றம் ஏற்பட்டுவிடும் என்பதை,

"குடிமைக்கண் பெரியதோர் குற்றமாய்க் கிடவாதோ"(18)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. இதிலும் குற்றம் என்ற சொல் பயின்று வந்துள்ளது.

இம்மூன்றிலும் **குற்றம்** என்ற சொல் **பிழை** என்னும் பொருளில் கையாளப் பெற்றுள்ளது.

### 1.2.3 குற்றம் என்ற பொருள் தரும் பிற சொற்கள்

சமுதாய, மானிடத் தவறுகளைக் குற்றம் என்ற சொல் குறிப்பிடுகின்றது. காலந்தோறும் குற்றம் என்ற பொருள் தரும் சொற்கள் பல பதிவு பெற்றுள்ளன. தொல்காப்பியம் தொடங்கி சங்க இலக்கியம் முதல் இன்றைய காலக்கட்டம் வரை பல சொற்கள் குற்றம் என்ற பொருளில் ஆளப் பெற்றுள்ளன.

சங்க இலக்கியத்தில் குற்றம் என்ற பொருள் தரும் சொற்கள் பல உள்ளன. அவை, 1. அரலை, 2. ஆசு, 3.கசடு, 4. கறை, 5. செயிர், 6.தா, 7.தீது 8.துகள், 9.நவை, 10.பழி, 11.பழுது, 12.புகர், 13.புரை, 14.போக்கு, 15.மறு, 16. மாசு, 17.மை, 18.வசை, 19.வடு, 20.வேய்வை என்பனவாகும்.

#### 1.2.3.1 அரலை

"சங்க இலக்கியத்தில் அரலை என்ற சொல் ஒருவகை மலர்,

கொடிமுறுக்கு, விதை மற்றும் குற்றம் என்ற பொருள்களில் பயின்று வருகின்றது"[19] . இதனை,

"விரல்விசை தவிர்க்கு மரலையில் பாணியின்"[20]

என்ற அடி சுட்டும். அரலை என்ற சொல் குற்றம் எனும் பொருளில் கையாளப் பெற்றுள்ளது.

"விரலால் நொடிக்கும் நொடி விசையின் மேம்பட்ட அரலை - குற்றம் இல்லாத தாளத்தோடு கூடிய பாட்டால் வறுமை நீக்க முடியாதெனக் கிணைவன் வருந்தினான். அரலை என்ற சொல் தற்போது வழக்கிலில்லை.

### 1.2.3.2 ஆசு

ஆசு என்ற சொல் குற்றம் என்ற பொருளைத் தரும். கழகத் தமிழகராதி ஆசு என்பதற்கு "அல்லி மொக்கு, ஆசுகவி, ஆணவமலம், இலக்கு, உவர், கவசம், கார்காலத்திலே விரைவில் விளையும் ஒருவகை நெல், குற்றம், கைக்கவசம், தூசி, பற்றாசு, பற்று, விரைந்து இயற்றும் பாட்டு, விரைவு"[21] என்று பல பொருள்களைச் சுட்டுகிறது. சங்க இலக்கியத்தில் இச்சொல் குறிஞ்சிப்பாட்டு, குறுந்தொகை, சிறுபாணாற்றுப்படை, புறநானூறு ஆகியவற்றில் இடம்பெற்றுள்ளது. குறிஞ்சிப்பாட்டு,

"சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொல்மருங்கு அறிஞர்"[22]

எனக் கூறும்.

குற்றமற்ற அறிவினையுடைய சான்றோர்க்கும், தம் சால்பு, மேம்பாடு,

ஒழுக்கம் கெடுமாயின் அதனால் தோன்றிய பழியை நீக்கிப் புகழை நிலைநிறுத்துதல் எளிமையானதன்று.

கார்கால மாலைப் பொழுதில் முல்லை நில வருணனையைக் குறிக்குமிடத்து, முல்லை மலர்கள் குற்றமில்லாத வெண்ணிற மலர்கள் அந்திவானின் செக்கர் வானத்தின் அழகைக் கொண்டன"(23) என்று குறுந்தொகை '**ஆசு**' என்ற சொல்லைக் குறிப்பிடும். மேலும்,

"ஆசுஇல் தெருவின் நாய்இல் வியன்கடை
செந்நெல் அமலை வெண்மை வெள்இழுது
ஓர்இல் பிச்சை ஆரமாந்தி"(24)

என்று குறிப்பிடும்.

முக்காலத்தையும் அறிந்து உரைக்கவல்ல துறவோர், குற்றமற்ற நாய் அற்ற அகன்ற தெருவிலுள்ள ஒரு வீட்டில் பிச்சை பெற்று உண்ணும் இயல்பினராவர் என்பது பொருளாகும்.

சிறுபாணாற்றுப்படையில்,

"வருமுலை அன்ன வண்முகை உடைந்து
திருமுகம் அவிழ்ந்த தெய்வத் தாமரை
ஆசில் அங்கை அரக்குத்தோய்ந் தன்ன
சேயிதழ் பொதிந்த செம்பொற் கொட்டை"(25)

என்று தாமரை மலரின் குற்றமற்ற இதழ்களைக் குறிப்பிடும். புறநானூற்றில் '**ஆசு**' என்ற சொல்,

"ஆசில் கம்மியன் மாசறப் புனைந்த
பொலஞ்செய் பல்கா சணிந்த வல்குல்"(26)

என இடம்பெற்றுள்ளது. குற்றமற்ற பொற்கொல்லன் பழுதறச் செய்த பொன்னாலாகிய பல மணிகளால் இயன்ற மேகலை என்று பொற்கொல்லன் குண மேம்பாட்டையும், அவனால் புனையப் பெற்ற அணிகலனின் தன்மையையும் இச்சொல் உணர்த்தி நிற்கிறது.

ஆசு என்ற சொல், ஒரு பொருளின், ஒருவரின் இயல்பான பண்பை, தன்மையை உணர்த்தி நிற்பதாக அமைந்துள்ளது.

ஆசறு என்ற சொல் இரு இடங்களிலும், ஆசில் என்ற சொல் மூன்று இடங்களிலும் பயின்று வந்துள்ளது. இச்செயல் குற்றமற்ற பண்பைக் குறிக்க வந்துள்ளது. தற்போது இச்சொல் வழக்கிலில்லை.

### 1.2.3.3 கசடு

இச்சொல்லும் பல பொருள்களுடன் குற்றம் என்ற பொருளையும் தருகிறது. இச்சொல்லுக்குக் கழகத்தமிழகராதி "அடிமண்டி, ஐயம், கீழ்மை, குறைவு, குற்றம், தழும்பு, மாசு, வடு, அழுக்குக்கறை"(27) என்னும் பல பொருள்களைக் குறிப்பிடுகிறது. நர்மதாவின் தமிழகராதியும் "அழுக்கு, குற்றம், வடு, எண்ணெய் போன்றவற்றில் அடியில் கரிய நிறத்தில் படிந்திருப்பது"(28) என்று சுட்டுகிறது.

"சங்க இலக்கியத்தில் 'கசடு' என்ற இச்சொல் குற்றம், வடு என்ற பொருள்களில் பயின்று வந்துள்ளது."(29) பதிற்றுப்பத்து, புறநானூறு, பொருநராற்றுப்படை ஆகிய இலக்கியங்களில் இச்சொல் இடம்பெற்றுள்ளது. பதிற்றுப்பத்தில் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனின் உயர்ந்த உள்ளத்தினை,

"கசடுஇல் நெஞ்சத்து"(30)

என்ற அடி சுட்டும். கனவிலும் பிறரை இரந்து தனக்குற்ற இடுக்கண் களைக என வேண்டியறியாத கசடு இல்லாத நெஞ்சினையும், பெருமித நடையினையும் உடையவன் கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்று இடம்பெற்றுள்ளது.

பொருநராற்றுப்படை,

"பைத்த பாம்பின் துத்தி யேய்ப்பக்
கைக்கச டிருந்தவென் கண்ணகன் தடாரி"[31]

என்று குறிப்பிடும். படம் விரித்த பாம்பின் பொறிபோன்ற கையினது கிடந்தது கண்ணகன்ற தடாரி என்று தடாரியின் நடுவில் வடுபட்டுக் கிடக்கும் நடுப்பகுதியைக் கசடு என்ற சொல் குறிப்பிடுகிறது. கசடு என்பது அழுக்கு என்னும் பொருளில் தற்போது வழங்கப்பட்டு வருகிறது.

### 1.2.3.4 கறை

இச்சொல்லுக்கு நர்மதாவின் தமிழகராதி "மாசு, குற்றம், கருமை, இருள், வரி, விஷம், மாதவிடாய்"[32] என்ற பொருள்களைச் சுட்டுகிறது. சங்க இலக்கியத்தில் "கறுப்பு, அழுக்கு, உரல், குற்றம் என்ற பொருள்களில் கறை என்ற சொல் இடம்பெற்றுள்ளது."[33]

பரிபாடலில் கறை என்ற சொல் குற்றம் என்ற பொருளில் இரு இடங்களில் பயின்று வந்துள்ளது இதனை,

"அருங்கறை அறையிசை வயிரியர் உரிமை
ஒருங்கமர் ஆயமொடு ஏந்தினர் தொழவே"[34]

என்ற அடிகள் சுட்டுகின்றன. இதன் பொருள் வையைப் புனலுக்கு விருந்தயரும் கூடலிடத்து குற்றமின்றி இசைக்கும் இசைப்பாடலுக்கு

உரிமையுடைய பாணரும் கூத்தரும் ஒருங்கு சென்று தொழுதேத்தினர் என்பதாகும். மேலும்,

"கறையில் கார்மழை பொங்கி யன்ன
நறையின் நறும்புகை நனியமர்ந் தோயே"(35)

எனச் சித்தரிக்கின்றது. குற்றமில்லாத கார்காலத்து வெண்மேகங்கள் பொங்கி எழுந்தாற்போல எழுகின்ற நறுமணப் பொருள்களின் நறும்புகையினைச் செவ்வேளாகிய முருகன் மிகவும் விரும்புகின்றான். கறை என்ற சொல் மேற்கண்ட பாடலடிகளில் குற்றம் என்ற பொருளில் எடுத்தாளப் பெற்றுள்ளது. தற்போது இச்சொல் மாசு என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

### 1.2.3.5 *செயிர்*

கழகத் தமிழகராதி செயிர் என்பதற்கு "ஊனம், குற்றம், சினம், கோபம், துன்பம், நோய், செயிரென்னேவல் என்கிறது."(36) நர்மதாவின் தமிழகராதியும் "கோபம், குற்றம், போர், வருந்துதல்"(37) என்பனவற்றைத் தருகிறது. செயிர் என்னும் சொல் தொல்காப்பியத்தில் இரு இடங்களிலும், சங்க இலக்கியத்திலும் குற்றம் என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது. தொல்காப்பியம் தலைவி, தோழி, செவிலி, நற்றாய், நால்வருக்கும் குற்றமற்ற சிறப்பினையுடைய உயிர், நாணம், மடன் இம்மூன்றும் உரியது. மேலும் உயிரினும் சிறந்தது நாணம், அந்நாணத்திலும் சிறந்தது குற்றமற்ற கற்பு. ஆகவே, களவொழுக்கம் ஒழுகிய தலைவி, அதே தலைவனுடன் கற்பு ஒழுக்கம் ஒழுகுவதற்கு உயிர், நாணம், இதனை விடுத்துக் குற்றமற்ற கற்பின் வழி நிற்பாள் என்பதனை,

"உயிரும் நாணும் மடனும் என்றிவை

செயிர்தீர் சிறப்பின் நால்வருக்கும் உரிய"[38]

"செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று"[39]

என்ற நூற்பாக்கள் விளக்குகின்றன.

"செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்

சிறுவர்ப் பயந்த செம்மலோர்"[40]

என்ற அடிகள் விளக்கும்.

பகைவரும் விரும்பும் குற்றமற்ற அழகினையுடைய சிறுவர்களைப் பெற்ற தலைமையினை உடையோர், இவ்வுலகத்தே புகழோடும் விளக்கமுறுவர் எனச் சுட்டுகின்றன. மேலும்,

". . . . . . . . . . . . . . . . . . நல்நுதல்

செயிர்தீர் கொள்கை, சில்மொழி துவர்வாய்

அவிர்தொடி முன்கை, ஆய்இழை மகளிர்"[41]

என்ற அடிகள் நல்ல அழகிய நெற்றியினையும் குற்றமற்ற கொள்கையினையும், சிலவாகிய சொற்களையும், பவள வாயினையும் விளங்கும் வளையணிந்த முன்கையினையும் உடையவர்கள் மகளிர்கள் எனச் சுட்டுகின்றன.

சேற்றோடு கூடிய ஈரமுடைய வழியிலுள்ள, அத்தடங்கள் குற்றமற்ற நாவினரான கூத்தர்களது பின்புறத்தே கிடந்து தொங்குகின்ற, மார்ச்சனை பூசிய முழவின் கண்ணிடத்திலே விரல்களை ஊன்றியதனால் ஏற்பட்ட வடுவினைப் போலத் தோன்றும். இதனை,

". . . . செதும்பல் ஈர்வழி
செயிர்தீர் நாவின் வயிரியர் பின்றை
மண்ஆர் முழவின் கண்ணகத்து அசைத்த
விரலூன்று வடுவில் தோன்றும்"(42)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. இதனைப் போலவே,

"உயிர்கலந்து ஒன்றிய தொன்றுபடு நட்பின்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போலத்
தையல்! நின்வயின் பிரியலம் யாம் என"(43)

என்ற அகநானூற்றுப் பாடலடிகளில் உயிர்கள் ஒன்று கலந்து இணைந்த, பழமையாக வரும் தொடர்ந்த நட்பினாலே, குற்றமற்ற காதல் நெஞ்சத்துடனே நம்மோடு இணைந்திருந்தவர் போலப் பெண்ணே! நின்னிடத்தே இருந்து யாம் என்றும் பிரியோம் என தலையளி செய்தான் என்று குற்றமற்ற உள்ளம் என்ற பொருளில் பயின்று வந்துள்ளதை அறியக்கூடும்.

பொருள்களின் நிறையினைத் தெரிதற்கு உதவும் துலாக்கோலை ஒத்தன குற்றமற்ற செம்மையான சொற்கள் என்பதை

". . . . . . . . . . . . . . . ஞெமன்ன்
தெரிகோல் அன்ன செயிர்தீர் செம்மொழி"(44)

என்ற அடிகள் உணர்த்தும்.

அழகிய முலையினைப் பொருந்தப் புல்லுந்தோறும் உயிர் குழைவது போலும் மென்மை வாய்ந்த செயிர் தீர்ந்த இனிய துணைவரைக் கூடியிருப்பவருக்கு, புல்லென்னும் மாலையும் இனிது என்பதை,

"புல்லென் மாலையும் இனிது மன்றம்ம
நல்லக வனமுலை அடையப் புல்லுதொறும்
உயிர்குழைப் பன்ன சாயற்
செயிர்தீர் இன்துணைப் புணர்ந்திசி னோர்க்கே"(45)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

ஐங்குறுநூற்றில்,

இளவேனிற் காலத்தில் தலைவன், தலைவியை அழைத்துக் கொண்டு கானகம் சென்றான். தலைவன், அங்குள்ள மாக்களைக் காட்டி ஈருடலின் ஓருயிர் கலந்தொன்றிய குற்றம் நீங்கிய அன்பினையும் பிரிந்துறுவதறியாது புதுவதாய்க் கலந்திட்டு நம்மைப் போல் விருப்பம் வரப் புணர்ந்தன என்று கூறியதை,

"உயிர்கலந் தொன்றிய செயிர்தீர் கேண்மைப்
பிரிந்துற லறியா விருந்து கவவி
நம்போ னயவரப் புணர்ந்தன"(46)

என்ற அடிகள் விளக்குகின்றன.

கலித்தொகை, பல உணவுகளையும், விளைவித்துக் கொடுத்த எல்லாரையும் நுகர்விக்கும் பயனையுடைய நிலம், ஈரம் அறும்படி ஞாயிறு குற்றத்தைச் செய்யும் சினத்தோடு தன்னிடத்தினின்றுஞ் செல்கின்ற கதிர்களைச் சொரிந்தது என்பதனை,

"பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறு செயிர்சினஞ் சொரிதலிற்"(47)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

அழகினையுடைத்தாகிய வகுப்பையுடைய அவ்வேறுகளின் மேலே பாய்கைக்குச் சேர ஆர்ப்பரித்து ஏறுகளின் எதிரே யெதிரே பலருஞ் சென்றார். அப்பொழுது அவ்வேறுகள் கொலைத் தொழிலின் மிக்க சிலை செறிந்த குற்றத்தைச் செய்யுஞ் சினமிக்கு வெவ்விதா யெழுந்து அவர் மேலே ஓடின என்பதை,

"தகைவகை மிசைமிசைப் பாயியர் ஆர்த்துடன்
எதிரெதிர் சென்றார் பலர்:
கொலைமலி சிலைசெறி செயிரயர் சினஞ்சிறந்
துருத்தெழுந் தோடின்று மேல்"(48)

என்ற அடிகள் விளக்குகின்றன.

ஆயர்கள் எருதுகளை புகவிட்ட இடத்து, கார்காலத்தில் தம்மிடையே எழுந்த கலிப்பினை உடைய உருமின் கடிய ஓசை போலப் பல்வேறு இசைக் கருவிகள் முழுங்கின. உயர்ந்து எழுகின்ற அசைதலையுடைய மேகம் போலத் திசைகள் தோறும் புகைப்படலமும் எழுந்தது. மணமுடைய இதழாற் கட்டின மாலையை அணிந்த ஆயமகளிர் வரிசை வரிகையாய் நின்றனர். குற்றமில்லாத சிறப்பு மிக்க, சினமுடைய பொதுவர் ஆரவாரித்தனர். வேகத்துடன் வருகின்றமையின் எழுகின்ற தூசி வானத்தையே மூடும்படியாக ஆரவாரத்துடன் தொழுவினுள் ஒருசேரப் பாய்ந்தனர் என்பதனை,

"காரெதிர் . . . . . . . . . . . . . . . . . .

சீர்கெழு சிலைநிலைச் செயிரிகன் மிகுதியிற் சினப்பொதுவர்"(49)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

தொழுவினுள் மாடுகள், தழுவுவாரைக் கோட்டிடத்தே சாகும்படி

குத்திப் பின்பு சென்று தழுவுவாரைப் பெறாமல் நின்ற நிறத்தையுடைய சிவந்த ஏறு உயிர் குறைகின்ற நாளிடத்தே அவர் பின்னே சென்று குற்றத்தைச் செய்து துகைத்து உயிரை யுண்ணுங் கூற்றுவனைப் போலும் என்பதனை,

"கொள்வாரைக் கொள்வாரைக் கோட்டுவாய்ச் சாக்குத்திக்
கொள்வார்ப் பெறாஅக் குரூஉச்செகில் காணிகா
செயிரிற் குறைநாளாற் பின்சென்று சாடி
உயிருண்ணும் கூற்றமும் போன்ம்"(50)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

சூரர மகளிரை வருணனை செய்யுமிடத்து அவரது மேனியை,

"சேண்இகந்து விளங்கும் செயிர்தீர் மேனி"(51)

என்ற அடியில் செயிர்தீர் என்பது குற்றமற்ற மேனி என்ற பொருளில் இடம் பெற்றுள்ளது.

நற்றிணையில்,

உயிர் ஒன்றாயிருந்தாலொத்த குற்றமற்ற நட்பினையுடைய நினக்கு யான் மறைப்பதானது எவ்வளவு பெரிய மானக்கேடாயிரா நின்றது என்பதனை,

"யுயிரோ ரன்ன செயிர்தீர் நட்பின்"(52)

என்ற அடி உணர்த்துகின்றது.

என் மனங்கொள்ளுமாறு குறையாத கடுஞ்சூள் பலவுங்கூறி மேகந்தவழும் வெற்பாகிய மலைகள் பலவற்றைக் கடந்து பொருளீட்டு

வண்ணஞ் சென்ற யாதொரு குற்றமுமில்லாத நமது காதலர். இதனை,

"மைசூழ் வெற்பின் மலைபல விறந்து
செய்பொருட் ககன்ற செயிர்தீர் காதலர்
கேளார் கொல்லோ தோழி . . . . "(53)

தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்து சென்ற நிலையில், தோழி தலைவன் விடுத்த வாயில்களிடம் தலைவியின் குற்றமற்ற சிறந்த இயல்புகளை எடுத்துக் கூறுமிடத்து அழகிய எயிற்றினின்றொழுகிய விருப்பமுற்ற மாட்சிமைப்பட்ட நகையையும் குற்றமற்ற கோட்பாட்டினையுமுடைய நம்முயிர் போன்ற விருப்பமிக்க காதலியினது அழகிய முகத்திலே உலாவுகின்ற கண்கள் துன்பமெய்தி நாள்தோறும் பெரிய மரத்தைச் சுற்றிய வள்ளிக் கொடியைப் போல் நம்மைப் பிணிக்கும் இதனை,

"வவ்வெயி றொழுகிய வெவ்வாய் மாணகைச்
செயிர்தீர் கொள்கைநம் முயிர்வெங் காதலி"(54)

என்ற அடிகள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

குற்றமற்ற மழைக்காலத்தில் பிரிந்தோரின் உயிர் உடனே உடலைவிட்டு நீங்கும்படி மாரிக்காலமானது விரைந்து வந்தது. இதனை,

"உயிர்செலத் துனைதரு மாலை
செயிர்தீர் மாரியொ டொருங்குதலை வரினே"(55)

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன.

பட்டினப்பாலை, திருமாவளவனின் வெற்றிச் செயல்களைக் குறிப்பிடும் பொழுது, ஒளிநாட்டார், அருவாளர், வடவர், குடவர்,

தென்னவன் ஆகியோர் தம் வீரம் கெடும்படி குற்றமற்ற தமது கண்களால் விழித்துப் பார்த்தான். இவனைக் கண்டு முல்லை நில வேந்தர் கெட்டழிந்தனர்; இருங்கோவேள் தன் சுற்றத்தோடு அழிந்தான் என்பதை,

"தென்னவன் திறல்கெடச் சீறி மன்னவர்
மன்எயில் கதுவும் மதனுடை நோன்தாள்
மாத்தானை மறமொய்ம்பின்
செங்கண்ணால் செயிர்த்து நோக்கிப்
புன்பொதுவர் வழிபொன்ற
இருங்கோவேள் மருங்கு சாய"(56)

என்ற அடிகள் விளக்குகின்றன.

பதிற்றுப்பத்தின் நான்காம்பத்து, களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரலின் குணநலன்களைப் பகைவருக்கு நிரம்பவும் துன்பத்தைச் செய்து, பாணர் முதலானோர்க்கு நிரம்பவும் நல்ல கலன்களை வழங்கி, நற்குணங்களால் நிறைந்து பணிய வேண்டும் உயர்ந்தோரிடத்துப் பணிந்து ஐம்புலனும் அடங்கிய குற்றமில்லாத தலைவனே! என்று புகழ்ந்துரைக்கிறது. இதனை,

"பகைவ ராரப் பழங்க ணருளி
நகைவ ரார நன்கலஞ் சிதறி
ஆன்றவிந் தடங்கிய செயிர்தீர் செம்மால்"(57)

என்ற அடிகள் விளக்குகின்றன.

பதிற்றுப்பத்தின் ஆறாம்பத்து ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வீரத்தை, மேகங்கள் தவழும் பெரிய குன்றுகளில் வாழும் குற்றமாகிய நஞ்சினையுடைய அரவுகளின் வலிமையை அழித்துவிடும் முழக்கமும்

ஒளியும் கொண்ட இடியேற்றினை ஒப்பவன் எனக் கூறுகிறது. இதனை,

"மழைதவழும் பெருங்குன்றத்துச்
செயிருடைய வரவெறிந்து
கடுஞ்சினத்த மிடறபுகுக்கும்
பெருஞ்சினப்புய லேறனையை"(58)

என்ற அடிகள் புகழ்ந்துரைக்கின்றன.

பரிபாடலில் திருமால் வாழ்த்துப் பகுதி நின்னை எதிர்த்துப் போரிடுவோம் எனக்கூறி எதிர்த்து வந்தாரது செருக்கழிய, அவரை அழித்து வெற்றி கொண்டோனே! போர்க் களத்தே பகைவரினும் மேம்பட்டோனாக விளங்கும் குற்றமற்ற தலைவனே! என்று கூறுகிறது. இதனை,

"பொருவேம் என்றவர் மதம்தபக் கடந்து
செருமேம் பட்ட செயிர்தீர் அண்ணல்"(59)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

திருமாலின் மேனியை வருணனை செய்யுமிடத்து, பகைவரின் உடலோடு மாறுபட்டு, அதனை அழிக்கச் செல்லும் சக்கரப்படையை உடையோனே! குற்றம் தீர்த்த சிவந்த கண்களைக் கொண்ட செல்வனே! என ஏத்துகிறது. இதனை,

"நோனார் உயிரொடு முரணிய நேமியை
செயிர்தீர் செங்கண் செல்வ"(60)

என்ற அடிகள் விளக்குகின்றன.

புறநானூற்றில் பாண்டியன் கருங்கையொள்வாட் பெரும்பெயர் வழுதியை, இரும்பிடர்த் தலையார், புகழ்ந்துரைக்கும் பொழுதில், ஒழியாத வண்மையினையுமுடைய பாண்டியர் மரபினுள்ளாய், குற்றமற்ற கற்பினையுடைய சேயிழைக்குத் தலைவ! என்று கூறுகிறார். இதனை,

"தவிரா ஈகைக் கவுரியர் மருக
செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ"(61)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

பெருங்குன்றூர் கிழார், தன்மனைவியின் பண்பை உரைக்குமிடத்து, பொருளின்மை கருதி என் மனைவி என்னை வெறுப்பவள் அல்லள். அவட்கு என் உயிரே பொருள். பொருளை உயிராகக் கருதும் புன்மை என்மனைவிபாலும் கிடையாது என்றும், குற்றந்தீர்ந்த கற்பினையுடையளாய் எம்மை விரும்பிய காதலி என்றும் புகழ்ந்துரைக்கிறார். இதனை,

"செயிர்தீர் கொள்கை யெம்வெங் காதலி"(62)

என்ற அடி விளக்குகிறது. இச்சொல் தற்போது வழக்கிலில்லை.

### 1.2.3.6 தா

தா என்னும் சொல்லிற்குக் குற்றம் என்னும் பொருளுடன் கழகத் தமிழகராதி "அழிவு, ஓர் எழுத்து, குற்றம், கேடு, கொடியன், தாண்டுதல், தாவென்னேவல், பாய்தல், பகை, நான்முகன், வலி, வருத்தம், வியாழம், வலிமை, குறை, பரப்பு, நாசன், தண்டுகை, கொடு, பெறு, படை"(63) என்று பல பொருள்களைத் தருகிறது. நர்மதாவின் தமிழகராதி "வலிமை, வருத்தம், கேடு, பாய்தல், குற்றம், குறை, கொடு"(64) என்ற பொருள்களைத்

தருகிறது. சங்க இலக்கியத்தில் தா என்ற சொல் "வலி, குறைவு, வருத்தம், கெடுதி, அழிவு, பரத்தல், தாவுதல்"(65) என்ற பொருள்களில் கையாளப் பெற்றுள்ளது.

தொல்காப்பியத்தில் 'தா' என்ற சொல்லாட்சி, வலி, வருத்தம் இரக்கும் கிளவி, குற்றம், குறைவு, வருத்தம் என்ற பொருள்களில் இடம்பெற்றுள்ளது.

"தாவே வலியும் வருத்தமும் ஆகும்"(66)

தா என்ற உரிச்சொல் வலிமை, வருத்தம் என்ற இருபொருள்களைத் தரும். மேலும் இரப்பின் கிளவி என்பதும்,

"தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே"(67)

"ஈதாகொடு எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைத்தே"(68)

ஆகிய நூற்பாக்களால் உணர்த்தப்படுகின்றன.

வலியும் வருத்தமும் இன்றி, இயல்பாகிய ஒழுக்கத்தானே, தம்முடைய கூறுபாடுகளை, இருவகைப்பட மிகுதிப்படுத்தல் என்பதனை,

"தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப"(69)

என்ற நூற்பா விளக்குகிறது.

குறையாத புகழையுடைய அரசர் துயில் கொண்டபோது அவர்கள் எழ, நின்று ஏத்துவாராகிய சூதர் பாடும் திருப்பள்ளி எழுச்சியும் என்பதனை,

"தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்

சூதர் ஏத்திய துயிலெடை நிலையும்"(70)

என்ற நூற்பாவடிகளால் அறியப் பெறுகிறது.

தொல்காப்பியம் களவியலில், களவுக்குரிய தலைவியின் கூற்றுக்குரிய பொருள்களைக் கூறுமிடத்து வருத்தம் இல்லாத நற்சொற்களைத் தலைவி பிறரிடம் சொல்லும்போது அவை களவுப் பொருளாகும் என்கிறது. இதனை,

"தாவில் நன்மொழி கிழவி கிளப்பினும்

ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே"(71)

என்ற அடிகள் விளக்குகின்றன.

தலைவன் தலைவி அன்பு வாழ்க்கைக்குத் துணை நிற்பவர்களுள் வாயில்களும் ஒருவர். வாயில்கள் பன்னிருவர் ஆவர். இவர்கள் வெளிப்படையாகக் கூறும் சொற்கள் பழுதின்றி அமைதலுக்கு உரியன என்பது,

"வாயிற்கிளவி வெளிப்படக் கிளத்தல்

தாவின்று உரிய தத்தம் கூற்றே"(72)

என்ற நூற்பாவால் உணர்த்தப் பெறுகிறது.

அகநானூற்றில் குற்றமில்லாத தூய பொன்னால் செய்யப் பெற்ற பாவை என்று இடம்பெற்றுள்ளது. இதனை,

"தாஇல் நன்பொன் தைஇய பாவை"(73)

என்ற அடி விளக்குகிறது.

பதிற்றுப்பத்தில், குற்றமின்மையால் அழகிய மணிகளோடு மாறுபட்டு ஒலிவிடும் பசும்பொன் என்று இடம்பெற்றுள்ளது. இதனை,

"பாய லுய்யுமோ தோன்ற தாவின்று
திருமணி பொருத திகழ்விடு பசும்பொன்"(74)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

மதுரைக்காஞ்சியில் "தாஅற விளங்கிய அழகிய பொன்னாலே செய்த பூண்களை யுடையவர் மகளிர்"(75) என்று கூறப்பட்டுள்ளது.

திருமுருகாற்றுப்படையில் திருச்செந்தூர் தலம் பற்றிக் கூறுகையில், தவத்தொழிலை முடிப்பவர் குற்றமில்லாத நோன்புகளை உடைய தமது தவத் தொழிலை முடிப்பாருடைய நெஞ்சிலே பொருந்தித் தோன்றுகின்ற ஒளிமிக்க நிறத்தையுடைய திருமுகங்களிலே என்று இடம்பெற்றுள்ளது. இதனை,

"தாஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன்நேர்பு எழுதரு வாள்நிற முகனே"(76)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

பிரமன் பற்றிப் புகழ்ந்துரைக்கும் பொழுது, திருமாலுடைய திருவுந்தித் தாமரை பெற்ற குற்றமற்ற ஊழிகளையுடைய நான்முகத்தையுடைய ஒருவனைப் பழைய நிலையிலே நிறுத்தலைக் கருதி, என்று கூறப்பெற்றுள்ளது. இதனை,

"தாமரை பயந்த தாஇல் ஊழி
நான்முக ஒருவற் சுட்டி, காண்வர"(77)

என்ற அடிகள் விளக்குகின்றன.

தெய்வயானையைப் புகழ்ந்து கூறுமிடத்து, குற்றமற்ற அறக்கற்பினையுடைய தெய்வயானையாருடன், சிலநாள் திருவாவினன்குடி என்னும் ஊரிலே இருத்தலும் உரியன். இதனை,

"தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்
ஆவினன்குடி அசைதலும் உரியன் அதாஅன்று"(78)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

### 1.2.3.6.1 பிற பொருள்களில் தா

சங்க இலக்கியத்தில் தா என்னும் சொல் குற்றம் என்ற பொருளில் மட்டுமல்லாது வலி, வருத்தம், அழிவு, குறைவு, பரத்தல், தாவுதல் என்ற பொருள்களிலும் கையாளப் பெற்றுள்ளது.

தூற்றாத பொலியினின்றும் முகந்த நெற்பொலியினைத் தூற்றலின் வலிமையில்லாத கூலங்கள் (பதர்கள் (அ) கருக்காய்) மேகம் போலத் திசையெங்கும் பரந்தன. இதனை,

"பொங்கழி முகந்த தாஇல் நுண்துகள்
மங்குல் வானின், மாதிரம் மறைப்ப"(79)

என்ற அடிகள் விளக்குகின்றன.

நற்றிணையில், மகட்போக்கிய நற்றாய், "முன்னமே, என்னுயிரைக் கொண்டு போகாது இப்போது ஏதிலான் பின்சென்ற என் மகளைப் பின் சென்று தேடி, அலர் கூறுதலை யான் கேட்டிருக்குமாறு என்னை இதுகாறும் கைவிட்டொழிந்த கூற்றமானது வலிமை அழிந்து தாழியிலிட்டுக் கவிழ்க்கும்படி இறந்தொழிவதாக"(80) என்று கூறுகிறாள்.

பதிற்றுப்பத்தில் இளஞ்சேரலிரும்பொறையிடம் பெருங்குன்றூர் கிழார், "நின் வலியொடு மாறுபட்டுப் பின் எதிர்க்கப் பெறாத வலிமை (தா) இல்லாத வீரரோடு தூங்காத பகையரசரும் தூங்க வேண்டியும் நின் தேவியைக் காண வேண்டியும் நினது தேர் குதிரைகளைப் பூண்பனவாகுக"(81) என்றுரைக்கிறார்.

புறநானூற்றில் "வல்வில்ஓரி தன் மலையில் பிறந்த தா-வலி-இல்லாத நல்ல பொன்னைப் பல மணித்திரளோடு கலந்து இரவலர்க்குக் கொடுத்தான்"(82) என்று கூறப்பெற்றுள்ளது.

மேற்கண்ட பாடலடிகளில் தா என்ற சொல் வலி என்ற பொருளில் ஆளப் பெற்றுள்ளது.

புறநானூற்றில் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் நண்பர்களுக்குக் குறைவில்லாது உதவும் நற்பண்பு உடையவன் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. இதனை,

"பகைவர் புகழ்ந்த வாண்மை நகைவர்க்குத்
தாவின் றுதவும் பண்பிற் பேயொடு"(83)

என்று விளக்கப் பெற்றுள்ளது. "நற்றிணையில் நடுயாமத்தில் குறைவில்லாத பெருமழை பெய்தது."(84) இவற்றில் தா என்ற சொல் குறைவு என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது.

மதுரைக்காஞ்சியில் மலர்ந்த அசோகம் பூம்பொழிலில் அந்திமாலைப் போதில் ஞாயிற்றின் இளங்கதிர் பரவுதல் போல பொன்னின் ஒளி தழுவப்பட்டு விளங்கும் தம் ஒளியைப் பரப்பி நிலத்தை விளக்கும் அணிகலன்களை, என்று சுட்டுகிறது. இதனை,

"ஒண்பூம் பிண்டி அவிழ்ந்த காவில்
சுடர்பொழிந்து ஏறிய விளங்குகதிர் ஞாயிற்று
இலங்குகதிர் இளவெயில் தோன்றி யன்ன
தமனியம் வளைஇய தாவில் விளங்கிழை
நிலம்விளக் குறுப்ப மேதகப் பொலிந்து"[85]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

பதிற்றுப்பத்தில், களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பற்றிக் கூறும் பொழுது,

"இனியவை பெறினே தனிதனி நுகர்கேம்
தருகென விழையாத் தாவினெஞ் சத்துப்
பகுத்தூண் டொகுத்த வாண்மை"[86]

என்று சுட்டுகிறார். இதில் நார்முடிச்சேரல் நுகர்தற்கு இனிய பல பொருள்களைப் பெற்ற வழி, அவற்றைத் தனித்தனியாக நுகருவேம் எம்பால் கொணர்க என்று விரும்பாத, கெடாத நெஞ்சத்தால், பிறருக்குப் பகுத்துண்ணும் உணவைத் தொகுத்தளித்த ஆண்மையுடைமையால், நீ பிறருக்குப் பயன் உண்டாக வாழ்கின்றா யாதலால் என்று சுட்டப் பெறுகிறது.

அகநானூற்றில் கடவுள் வாழ்த்துப் பகுதியில் மணிமிடற்றந் தணனாகிய இறைவனுடைய அழிதலில்லாத திருவடி நிழலில் உலகம் இடையூறின்றித் தங்கும் என்பதனை,

"யாழ்கெழு மணிமிடற்று அந்தணன்
தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்றால் உலகே"[87]

என்ற அடிகள் சுட்டுகின்றன.

கலித்தொகை, முல்லைக்கலியில் ஆயர்கள் ஏறு தழுவுங்காற் பிறர்க்குத் துன்பம் நிகழுமென்னும் வருத்தமில்லாத உள்ளத்தோடே நிறைந்து ஏறுகளை ஆராய்ந்து, தொழுவிடத்தே புகவிட்டனர். இதனை,

"வீவில் குடிப்பி னிருங்குடி யாயருந்
தாவி லுள்ளமொடு துவன்றி யாய்புடன்
. . . . . . . . . . . . . . . . .
உடங்கு கொட்பன போற் புகுத்தனர் தொழூஉ"(88)

என்ற அடிகள் மூலம் அறியமுடிகிறது. இச்சொல் தற்பொழுது பிறரிடமிருந்து ஒரு பொருளைக் கேட்பதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

### 1.2.3.7 தீது

தீது என்னும் சொல்லுக்கு கழகத்தமிழ் அகராதி, "குற்றம், தீமை, சாவு, தீயது, பொல்லாதது, பாவம், உடம்பு, தீவினை, பிறர் நெஞ்சு புகுதல்"(89) என்னும் பொருள்களைத் தருகிறது. நர்மதாவின் தமிழகராதியும் இச்சொல்லுக்கு "தீமை, குற்றம், துன்பம், உடம்பு"(90) என்ற பொருள்களைச் சுட்டுகிறது.

கலித்தொகை, இளவேனிற் பருவ வருணனையைக் கூறுமிடத்து, மலர்கள் மலர்ந்திருந்த தன்மையைக் கூறுகிறது. வெண்கடம்பு, செருந்தி, காஞ்சி, ஞாழல், இலவம் போன்ற ஐவகை மலர்கள் மலர்ந்திருந்தமை, தமக்குக் குற்றந் தீர்ந்த தலைமையினையுடைய ஐவர்களுடைய நிறத்தின் தன்மைபோல் அக்கரையிடத்துப் பூக்கள் விரிந்த பிற மரங்களோடு அழகுபெற இளவேனில் வந்துற்றது என்றும் பலதேவன், கதிரவன், மன்மதன், அவன் தம்பி சாமன், சிவன் ஆகிய ஐவரும் தீது தீர்ந்த சிறப்பினை உடையவர் என்பதனை,

"ஆனேற்றுக் கொடியோன்போல் எதிரியஇ லவமுமாங்கத்
தீதுதீர் சிறப்பின் ஐவர்கள் நிலைபோலப்
போதவிழ் மரத்தோடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக"(91)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

தலைவனை நோக்கி, நீ நாங்கள் வெறுக்கத்தக்க பரத்தமை ஒழுக்கம் கொண்டவன் என்று பழிக்கமாட்டோம். என்றெண்ணி, குற்றமற்றவன் என்று தெளிவிக்க வருகிறாய். ஆனால் நின் கண்ணி உனக்கு உட்பகையாய் வந்து நின் பரத்தமையை எமக்கு உரைக்கின்றது. இதனை கலித்தொகையில்,

"நோதக்காய் எனநின்னை நொந்தீவார் இல்வழித்
தீதிலேன் யானெனத் தேற்றிய வருதிமன்"(92)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

தலைமகன் பரத்தமையொழுக்கம் ஒழுகி வீட்டிற்கு வந்தபொழுது, தலைவி ஊடல் கொண்டு வாயில் மறுக்கிறாள். அதுகேட்ட தலைவன், 'யாந் தீங்குடையே மல்லேமென்று சூளுறவும், அச் சூளுறவைக் கைகடந்து எம்மிடத்துச் சிறிதுந் துனிந்த நிலைமை மீட்சியில்லையாயின், தன் கன்றைக் கட்டின இடத்தே கெடாத விருப்பத்தோடே செல்லும் பசு போல நாம் இனி நம்பாற் படர்தல் தரும்படி, மேம்பாடு தக்க எந்தை பெயரனை யாம் எடுத்துக் கொள்ளுவேம்' என்கிறான். இதனை,

"இனியெல்லா யாம், தீதிலேம் என்று தெளிப்பவுங் கைந்நீவி
யாதொன்றும் எங்கண் மறுத்தர இல்லாயின்
மேதக்க எந்தை பெயரனை யாங்கொள்வேம்"(93)

என்ற அடிகள் விளக்குகின்றன.

தலைவி தலைவனிடம் குறை கண்டு கூற, தலைவன், நீ கூறுகின்ற மெய்வேறுபாட்டையோ என்னிடத் துண்டாக ஓராதே கொள்! அங்ஙனம் ஓராதிருத்தல் நினக்குத் தக்கது; அதற்குக் காரணமென்னெனில் அத்தீது அதாவது குற்றம் என்கண் இல்லாமையை யான் நினக்குத் தெளிவிக்க நீ காணாய்; யான் இனித் தெளிவிப்பேனென்றான். இதனை,

"அதுதக்கது வேற்றுமை யென்கண்ணோ ஓராதி தீதின்மை
தேற்றக்கண் டியாய் தெளிக்கு;
இனித் தேற்றேம் யாம்"(94)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

தலைவன் தன் கொடுமையொழுக்கத்தை மறுக்கின்ற இடத்து, அணைபோலும் மெல்லிதாய தோளினையுடையாய்! இவன் நீங்கிற் பரத்தையரிடத் தல்லது நீங்கானென்று உட்கொண்டு அவ்வையத்தாலே யான் செய்யாத காரியங்களைச் சொல்லி, இவ்விடத்தே சினக்கின்ற குறை யாதுதான்? என்னிடத்துக் குற்றமில்லாமையைத் தெய்வத்தாலே நினக்குத் தெளிவிப்பேன். அதனைக் காண்பாய் என்றான். இதனை,

"அணைமென்றோளாய், செய்யாத சொல்லிச் சினவுவ தீங்கெவன்
ஐயத்தா லென்னைக் கதியாதி தீதின்மை
தெய்வத்தாற் கண்டீ தெளிக்கு"(95)

என்ற அடிகள் விளக்குகின்றன.

தலைவன் தன் குற்றமின்மையைத் தெளிவுறுத்த தலைவியிடம், யான் தெளிவித்ததனைக் கொண்டு நின் நெஞ்சைத் தெளிவியாயாய்க் கோபித்தாய்; யான் குற்றமற்றவன், குற்றமில்லாத் தன்மையை நின்னைத் தாழ்ந்து நெறியாலே நின் நெஞ்சிடத்தே நிறுத்துவேன்; என்பதனை,

"தெரியிழாய், தேற்றாய் சிவந்ததனை காண்பாய் நீ தீதின்மை
ஆற்றின் நிறுப்பல் பணிந்து"(96)

என்ற அடிகள் விளக்குகின்றன.

கலித்தொகை, முதிய குடியிற் பிறந்த மாறுபாடு மிகுகின்ற அச் செல்வனுக்குத் தீதின்றிப் பொலிவனவாக வென்று உட்கொண்டு தெய்வத்திற்குச் சிறப்புக்களைச் செய்தற்கு அவனுடைய கேடில்லாத குடியின் பின்பு தோன்றிய பெரிய குடியிற் பிறந்த ஆயரும் உவகையராய்ச் சேரக் கூடியிருந்தனர். இதனை,

"வார்கலி யுவகைய ரொருங்குடன் கூடித்
தீதின்று பொலிகெனத் தெய்வக் கடியயர்மார்"(97)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

குறுந்தொகை தலைவன் விடுத்த தூது கண்டு தலைவி, தோழியிடம், மலையிலுள்ள கற்களில் பற்றிப் படர்கின்ற புல்லிய விழுதையுடைய இற்றி மரத்தினது வெள்ளிய வேரானது மலையிலிருந்து விழுகின்ற அருவியைப் போலத் தோன்றும் நாட்டையுடைய தலைவன் குற்றமற்ற நெஞ்சினால் எண்ணிக் கூறிய சொற்களை உரைக்கும் தூது நம்மிடத்து வந்துள்ளது. என்பதனை,

"புல்வீழ் இற்றிக் கல்இவர் வெள்வேர்
வரைஇழி அருவியின் தோன்றும் நாடன்
தீதுஇல் நெஞ்சத்துக் கிளவி நம்வயின்
வந்தன்று வாழி தோழி"(98)

என்ற அடிகள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

திருமுருகாற்றுப்படையில் திருப்பரங்குன்றம் பற்றிக் கூறுமிடத்து அதன் சிறப்புக்களை உரைக்கும் முகத்தான், திருமகள் வருத்தமின்றி இருந்த குற்றந் தீர்ந்த அங்காடித் தெருவினையும், மாடங்கள் மிக்க ஏனைத் தெருக்களையும் உடைய மதுரையின் மேற்றிசையிடத்துள்ள குன்றம் என்ற பொருளில்,

"திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகில் கூடற் குடவயின்"(99)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

நற்றிணைக் கடவுள் வாழ்த்துப் பாடலில் திருமாலின் சக்கரம் பற்றிக் கூறுமிடத்து, எல்லாவுயிர்களிடத்தும் தான் பொருந்தியிருப்பதன்றி நிலமுதலாய் எல்லாப் பொருட்களையும் தன்னுறுப்பகத்தடக்கிய வேதத்தாற் கூறப்படு முதற்கடவுள் குற்றந்தீர விளங்கிய திகிரியையுடைய மாயோனோயென்று ஆன்றோர் கூறுவர். இதனை,

"பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக
வியன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேதமுதல்வ னென்ப
தீதற விளங்கிய திகிரி யோனே"(100)

என்ற அடிகள் விளக்குகின்றன.

நற்றிணையில், குறிஞ்சித்திணைப் பாட்டில் கொல்லிமலை வளம் பற்றிக் கூறுகையில், சிவந்த வேரையுடைய பலா மரங்களின் பழங்கள் பொருந்திய தெய்வத்தாலே பாதுகாக்கப்பட்டு வருகின்ற தீது தீர்ந்த நெடிய கொடுமுடியையும், அழகிய வெளிய அருவியையுமுடைய கொல்லிமலைச் சாரல் என்பதை,

"செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லித்

தெய்வங் காக்குந் தீதுதீர் நெடுங்கோட்

டவ்வெள் ளருவிக் குடவரை யகத்து"(101)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

நெடுநல்வாடை, அரண்மனைச் சிறப்புப் பற்றி, வெற்றி குறித்து உயர்த்திய கொடியோடே யானைகள் சென்று புகும்படி உயர்ந்த மலையை நடுவே வெளியாகத் திறந்தாற் போன்ற கோபுர வாயில்களையும், திருமகள் நிலைபெற்ற குற்றமற்ற தலைமையினையுடைய, கொண்டு வந்து பரப்பிய மணல் முன்றில் என்பதனை,

"வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்

குன்றுகுயின் றன்ன ஓங்குநிலை வாயில்

திருநிலை பெற்ற தீதுதீர் சிறப்பின்

தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து"(102)

என்ற அடிகள் விளக்குகின்றன.

பதிற்றுப்பத்து, ஞாயிறு பகையாகிய இருளைக் கெடுப்பான் விரும்பிச் செல்லும் குற்றமில்லாச் சிறப்பினையும் நீர் நிரம்பிக் கொண்டு திரண்டெழும் முகிற்கணம் பரவுமாறு மிக்க காற்று நிலவும் நல்ல பெரிய பரப்பினையுடைய எனச் சுட்டுகிறது. வானமானது ஞாயிறு, திங்கள், காற்று முதலியன இயங்குவதால் விசும்பு தீதின்றி விளங்கும். இதனை,

"ஞாயிறு புகன்ற தீதுதீர் சிறப்பின்

அமிழ்துதிகழ் கருவிய கணமழை தலைஇக்

கடுங்கால் கொட்கு நன்பெரும் பரப்பின்"(103)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

பரிபாடல் திருமால் வாழ்த்தில், திருமாலின் சிறப்புக்களாக, ஆற்றல்

மிகுந்த தூய சிறப்பை உடையவர்கள் அந்தணர்கள். அவர்கள் பேணிக் காக்கின்ற அடிவொழுக்கமும் நீயே! நின்பால் அன்பு உடையோருக்கு அவர்க்கருளும் அருளாக அமைந்து நின்று உதவுபவனும் நீயே, திறனற்றோரைத் திருத்திய, குற்றத்தின் நீங்கிய சிறப்பினையுடைய மறமாண்பு என்பதும் நீயே! நின்னைப் பகைத்தோர்க்குக் காட்சியளவாலேயே அச்சத்தை உண்டாக்கும் அணங்கும் நீயே! என்றும் திருமால் நன்னெறியிற் செலுத்திய தீது தீர்ந்த சிறப்பினையுடைய வீரமுமாகவும் விளங்குகிறார். இதனை,

"விறல்மிகு விழுச்சீர் அந்தணர் காக்கும்
அறனும் ஆர்வலர்க்கு அளியும் நீ
திறனிலோர்த் திருத்திய தீதுதீர் சிறப்பின்
மறனும், மாற்றலர்க்கு அணங்கும் நீ"(104)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

புறநானூற்றுள் அதியமான் பகைவரை வெற்றி பெற்று விழுப்புண் பெற்றமை கண்டு மகிழ்ந்த ஔவையார், போரில் இறக்காமல் நோயில் இறக்கும் வேந்தரை, வாட்படாத தீது-குற்றம் நீங்கத் தருப்பைப் புல்லில் கிடத்தி, வாளால் போழ்ந்து அடக்கம் செய்வர் என்கிறார். இதனை,

"திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றார் வெடிபட்
டோடன் மரீஇய பீடின் மன்னர்
நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇக்
காதன் மறந்தவர் தீது மருங் கறுமார்

அறம்புரி கொள்கை நான்மறை முதல்வர்"[105]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன், வடக்கிருத்தலைப் பற்றி நல்லவிதமாக எண்ணாதவர்களைப் பார்த்து, நல்வினை செய்தல் நல்லது என்றும், உயர்ந்தது உள்ளுவோர் வெற்றியும், சிறியது கருதுவோர் தோல்வியும் பெறுவர் என்கிறார். உயர்ந்ததாகிய வடக்கிருத்தலாகிய இத்தவத்தை மேற்கொண்டோர் தேவருலக துறக்கவுலக இன்பத்தைப் பெறுவர். அவ்வின்பம் சிறிதாயின் பேரின்ப வீட்டைப் பெறுவர். வீடு பெற்றோர் மீளப் பிறவார். இத்தவம் செய்வோர் மாறிப் பிறவாராயினும், தம் புகழை நிறுவி, குற்றமற்ற புகழுடம்பு கொண்டு நிலை பெறுவர் என்றும், இவ்வுலகில் ஒவ்வொருவரும் புகழை நிலைநிறுத்தித் தீது இல்லாத உடம்பொடு வாழ்ந்து இறத்தலே சிறந்தது என்றும் கூறியுள்ளார். இதனை,

"அதனால் உயர்ந்த வேட்டத் துயர்ந்திசி னோர்க்குச்
செய்வினை மருங்கி னெய்த லுண்டெனிற்
றொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்
றொய்யா வுலகத்து நுகர்ச்சி யில்லெனின்
மாறிப் பிறப்பி னின்மையுங் கூடும்
மாறிப் பிறவா ராயினு மிமயத்துக்
கோடுயர்ந் தன்ன தம்மிசை நட்டுத்
தீதில் யாக்கையொடு மாய்தறவத் தலையே"[106]

எனும் பாடல் புலப்படுத்துகிறது.

### 1.2.3.7.1 பிற பொருள்களில் தீது

தீமை, கொடுமை, கேடு என்ற பொருள்களிலும் தீது என்ற சொல்லாட்சி வந்துள்ளது.

கலித்தொகையில் வாயில்கள் தம்முள்ளே கூறும் கூற்று, கரைகாணாத நடுக்கடலில் மரக்கலங்கெட்டு அழுந்துகின்றவன் திரை கொண்டுவந்து தர ஒரு தெப்பத்தைப் பெற்றுப் பின்பு தீதில்லையாய்ப் பிழைத்தாற்போல இவள் காதலர் விரைந்து புகுதர இடும்பை யாவதும் விரைந்து போயிற்று; என்று கூறுகின்றனர். இதனை,

"கரைகாணாப் பௌவத்துக் கலஞ்சிதைந் தாழ்பவன்
திரைதரப் புணைபெற்று தீதின்றி யுய்ந்தாங்கு
விரைவனர் காதலர் புகுதர
நிரைதொடி துயரம் நீங்கின்றால் விரைந்தே"(107)

என்ற அடிகள் விளக்குகின்றன. இதில் தீமை என்ற பொருளில் வந்துள்ளது.

தலைவனை நினைத்து வருந்தும் தலைவி, அத்திகிரியிலே வீழ்கின்ற காலத்து மன்றத்தின் பனைமேலே தோன்றும் மலையிடத்து மாந்தளிர் போலும் நிறத்தையுடைய வெயிலே என் மென்றோளை மெலிவித்தானது வடிவழகின் தன்மை யான் விரும்பிக் காண்பதல்லது அவன் செய்த நல்லவை, தீயவை கூறுகின்ற பிறவற்றைக் காணேன். என்னையொழியப் பழையதாக இவ்வுலகத்து மகளிருந் தத்தங் கணவரைக் கண்டாற் கூடுவதன்றித் துனிந்திருந்தார் என்று கேட்டும் அறிவையோ என்று கூறினேன். இதனை,

"மன்றப் பனைமேல் மலைமாந் தளிரேநீ

தொன்றிவ் வுலகத்துக் கேட்டும் அறிதியோ

மென்தோள் ஞெகிழ்த்தான் தகையல்லால் யான் காணேன்

நன்றுதீ தென்று பிற."(108)

என்ற அடிகள் சுட்டுகின்றன. தீது-தீயவை என்ற பொருளில் வந்துள்ளது.

புறநானூற்றில் இளந்தத்தன் என்னும் புலவர் ஒற்று வந்தானென்று கருதி காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி கொல்லப் புக்குழிக் கோவூர் கிழார், தம்மைப் புரப்பாராற் பெறும் சிறப்பு ஏதுவாக வருந்தும் இப்பரிசிலான் வாழும் வாழ்க்கை, பிறருக்குச் செய்யும் கொடுமை (தா) யறிந்ததோ வெனின் இல்லை என்று கூறுகிறார். இதனை,

"வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை

பிறர்க்குத் தீதறிந் தன்றோ வின்றே"(109)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

கணியன் பூங்குன்றனார், வாழ்க்கையின் இன்றியமையாப் பண்புகளைக் கூறுமிடத்து, எமக்கு எல்லாம் ஊர், எல்லாரும் சுற்றத்தார், கேடும் ஆக்கமும் பிறர்தர வருவதில்லை என்று கூறுகிறார். இதனை,

"யாது மூரே யாவருங் கேளிர்

தீதும் நன்றும் பிறர்தர வாரா"(110)

என்ற அடிகள் விளக்குகின்றன. இதில் கேடு என்ற பொருளில் தீது என்ற சொல் வந்துள்ளது.

தீது என்னும் சொல் தீமை என்னும் பொருளில் தற்போது மக்களால் கையாளப் பெற்று வருகிறது.

### 1.2.3.8 துகள்

துகள் என்னும் சொல்லுக்குத் கழகத் தமிழகராதி "குற்றம், பராகம், புழுதி, பூந்தாது"(111) என்ற பொருள்களையும், நர்மதாவின் தமிழகராதி "புழுதி, குற்றம்"(112) என்னும் பொருள்களையும் தருகின்றன. தொல்காப்பியத்தில் வாகைத்திணைத் துறைகள் பற்றிக் கூறுமிடத்து,

"துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்"(113)

என்று துகள் என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. குற்றமில்லாத சீர்சால்புடைய பெரியோர் பக்கமும் வாகைத்துறையாகக் கருதப்பெறும்.

சங்க இலக்கியத்தில் துகள் என்ற சொல் குற்றம், அணு, தூளி, பொடி"(114) என்ற பொருள்களில் கையாளப் பெற்றுள்ளது. சங்ககாலத்தில் திருமணம், செய்ய நல்ல நாள் பார்த்துச் செய்தனர் என்பதனை, அழகிய இடமகன்ற பெரிய வானின்கண் விளங்கும். அந்தத் தெளிந்த ஒளியையுடைய திங்களை உரோகிணி கூடியதனால் எல்லாக் குற்றமும் நீங்கிய சுபநாட் சேர்க்கையில் திருமண வீட்டை அலங்கரித்துக் கடவுளைப் பேணி, மணத்தைத் தோற்றுவிக்கும் மணமுழவோடு பெரிய முரசம் ஒலித்தது. இதனை,

"அம்கண் இருவிசும்பு விளங்கத், திங்கட்
சகடம் மண்டிய துகள்தீர் கூட்டத்து"(115)

என்ற அடிகள் விளக்குகின்றன.

மாமூலனார் தம் பாடலில், ஆறலைக் கள்வர்தம் செயல்களைக் கூறுமிடத்து, எருதினைக் கொன்று, ஊனைத்தின்று, நீர்வேட்கைத் தீருமாறு குற்றமற்ற முதிர்ந்த தோப்பிக்கள்ளையும் குடிப்பார்கள் என்று கூறியுள்ளார்.

இதனை,

"அணங்கரு மரபின் பேஎய் போல
விளரூன் தின்ற வேட்கை நீங்கத்,
துகளற விளைந்த தோப்பி பருகித்
குலாஅ வல்வில் கொடுநோக்கு ஆடவர்"(116)

என்ற அடிகள் காட்டுகின்றன.

தலைவியின் கூந்தல் நலம் கூறுகையில் குற்றம் ஏதும் இல்லாமல், கொத்தோடு பூக்களை உதிர்த்து அணிந்த கூந்தலையும், அழகிய இனிதான பேச்சினையும் உடைய இவளுடைய தந்தையின் காவல் மிகுந்த பெருமனை என்று வந்துள்ளதை,

". . . .   . . . .   துகள் அறக்
கொங்தோடு உதிர்ந்த கதுப்பின்
அம்தீம் கிளவித் தந்தை காப்பே"(117)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

தலைவன், தலைவியின் முகஅழகை வருணிக்குமிடத்து குற்றமில்லாத ஒளியுடைய, பொலிவுற்ற முகம் என்கிறான். இதனை,

"துகளது வாண்முக மொப்ப மலர்ந்த"(118)

என்ற அடி விளக்குகிறது.

கலித்தொகை அவையத்தில் உறுப்பினராகவுள்ள சான்றோர் குற்றமற்று இருப்பர் என்பதனை,

"துகள்தபு காட்சி அவையத்தார் ஓலை
முகடுகாப் பியாத்துவிட் டாங்கு"(119)

என்ற அடிகளில் விளக்குகின்றது.

திருமுருகாற்றுப்படையில் சூரர மகளிரின் ஒப்பனைத் திறனில் தலையலங்காரம் பற்றிக் கூறுமிடத்து, திலகமிட்ட மணம் நாறுகின்ற அழகினையுடைய நெற்றியின் கண்ணே சுறாவினது அங்காந்த வாயாகப் பண்ணின தலைக்கோலம் தங்கச் செய்து, முற்ற முடித்த குற்றமறுகின்ற கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்பகப்பூவைச் செருகியிருந்தனர் என்பதனை,

"மகரப் பகுவாய் தாழமண்ணுறுத்துத்
துவர முடித்த துகளறு முச்சிப்
பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்டு"[120]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

நெடுநல்வாடையில் கட்டிலின் ஒப்பனைத்திறம் பற்றிக் கூறும் பொழுது, கச்சாலே நடுவுவெளியான இடம் மறையும்படி கோக்கப்பட்டுத் துகள் தேர்ந்து, தொழிற் குற்றஞ் சிறிதுமின்றி, கச்சுக்கட்டில் என்னும் பெயரையுடைய பாண்டில் செய்யப்பெற்றது என்பது,

"முத்துடைச் சாலேகம் நாற்றிக் குத்தறுத்துப்
புலிப்பொறிக் கொண்ட பூங்கேழ் தட்டத்துத்
தகடுகண் புதையக் கொளீஇத் துகள்தீர்ந்து
ஊட்டுறு பன்மயிர் விரைஇ வயமான்"[121]

என்ற அடிகளில் இடம்பெற்றுள்ளது.

புறநானூற்றில் கோப்பெருஞ்சோழனின் நடுகற்கண்டு பொத்தியார் பாடும் பொழுது, கோப்பெருஞ்சோழன் குற்றமற்ற கேள்வியையுடைய அந்தணர்க்குப் புகலிடமாக விளங்கியவன் என்ற பொருளில் பாடியுள்ளார். இது,

"துகளறு கேள்வி யுயர்ந்தோர் புக்கில்"(122)

என்று இடம்பெற்றுள்ளது.

கருங்குழலாதனார் என்னும் புலவர் சோழன் கரிகாற் பெருவளத்தானின் உரிமை மகளிர் பற்றிக் கூறுகையில், கற்பொழுக்கமாகிய கொள்கையையுடைய துகளற்றவர் குலமகளிர் என்று கூறுகிறார். இதனை,

"முறைநற் கறியுநர் முன்னுறப் புகழ்ந்த
தூவியற் கொள்கைத் துகளறு மகளிரொடு"(123)

என்ற அடிகள் காட்டுகின்றன.

பெரும்பாணாற்றுப்படையில் மருதநில குடியிருப்புப் பற்றிக் கூறும்பொழுது "கடா விட்டுப் போனபின்பு, துகள் நீங்கும்படி வைக்கோலையும், கூலத்தையும் நீக்கிக் கையாலே பொலிதூற்றினர் என்பதனை,

"பகடூர் பிழிந்த பின்றைத் துகடப
வையுந் துரும்பும் நீக்கிப் பைதறக்
குடகாற் றெறிந்த குப்பை வடபாற்
செம்பொன் மலையின் சிறப்பத் தோன்றும்"(124)

என்ற அடிகள் காட்டுகின்றன. இங்குத் துகள் என்பது மிகச்சிறியது என்னும் பொருளில் பயன்பட்டு வருகிறது.

### 1.2.3.9 நவை

நவை என்ற சொல்லுக்கு "இகழ்ச்சி, குற்றம், தண்டனை, இழிவு, அலட்சியம், குறைவு, நடுக்கம், அவமதி"(125) என்னும் பொருள்கள் உண்டு.

கலித்தொகையில், பாலைநிலத்தின் கொடுமையைக் கூறும் பொருட்டு, கொலைத் தொழிலையுடைய வேடர் வில்லால் கொல்லப்பட்டவருடைய உடல்களை வேலிபோல் இட்டு வைப்பர். உடல்கள் மறைக்கப்பட்ட இலைக்குவை நிரைத்துக் கிடக்கின்ற கடிய குற்றம் நிறைந்த வழியில் நீர் அறுங் கடுஞ்சுனையைச் சூழ்ந்து தண்ணீர் உண்டலை விரும்பி யானைகள் சூழ்ந்து நிற்கும். இதனை,

"இடுமு ணெடுவேலி போலக் கொலைவர்
கொடுமரந் தேய்த்தார் பதுக்கை நிரைத்த
கடுநவை யாராற் றறுசுனை முற்றி
யுடங்குநீர் வேட்ட வுடம்புயங் கியானை"(126)

என்ற அடிகள் விளக்குகின்றன. இச்சொல் இன்று வழக்கிலில்லை.

### 1.2.3.10 பழி

பழி என்னும் சொல்லுக்குக் கழகத் தமிழகராதி, "குற்றம், நிந்தை, பழியென்னேவல், பொய், பொல்லாங்கு, விரோதம், அலர், குறை, பாவம், சலஞ்சாதிப்பு, ஒன்றுக்கும் உதவாதவன்"(127) என்ற பொருள்களைத் தருகிறது. நர்மதாவின் தமிழகராதி "குற்றம், நிந்தை, பொய், பொல்லாங்கு, வைராக்கியம், விரோதம்"(128) என்னும் பொருள்களைத் தருகிறது. தொல்காப்பியத்தில் பழி என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. இரண்டாம் வேற்றுமைக்குரிய பொருள்களைக் கூறும்பொழுது ஒப்புமை, புகழ், பழி என்று பல பொருள்களைக் கூறுகிறார்.

களவியலில் தலைவிக்கு நிகழும் கூற்றினை வகைப்படுத்தும் பொழுது, முதல் ஆறு நிலைகள் அவள் மனன் உணர்வுகளைப்

வெளிப்படுத்துதல் ஆகும். இந்நிலையில் தலைவனிடம் கூற்று நிகழ்த்தாது, குற்றமற்ற புன்னகையைச் சிறிதே தோற்றுவித்தல் என்று வகைப்படுத்தியுள்ளார். இதனை,

"மறைந்து அவன் காண்டல், தன் காட்டுறுதல்
நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்கல்
வழிபாடு மறுத்தல், மறுத்தெதிர் கோடல்
பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல்"(129)

என்ற நூற்பா அடிகள் விளக்குகின்றன.

கற்பு வாழ்க்கையில் தலைவன் பரத்தமையொழுக்கம் கொண்டு ஒழுகும்போது, தலைவி, தன் மகனை, தந்தையைப் போன்றவன் மகன் எனப் பழித்து அதாவது குற்றம் சாட்டுவது போல் கூற்று நிகழ்த்துவாள். இதனை,

"தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால்
அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்கலும்"(130)

என்னும் நூற்பா அடிகள் உணர்த்துகின்றன.

களவுக்காலத்தில் தலைமகளை இற்காவலில் வைக்கும் பொழுது, தலைவன் அன்பு, அறம், இன்பம் இவற்றை நினைத்து வருந்தாமல், நாணத்தைக் கைவிட்டுத் தமர் கொடுக்குமாறு முயலவேண்டும். தலைவனின் நாணத்தைக் கைவிட்ட ஒழுகலாறு, குற்றத்திற்குரியதன்று. இதனை,

"அன்பே அறனே இன்பம் நாணொடு
துறந்த ஒழுக்கம் பழித்தன்றாகலின்

ஒன்றும் வேண்டா காப்பினுள்ளே"[131]

என்ற நூற்பா விளக்குகிறது.

அறத்திற்கு அழிவைத் தருபவை, புறப்பொருளும், அகப்பொருளும். இரண்டும் பொருள் பயனைத் தந்தாலும், வழக்கென வழங்கல் பழிக்கப்பட்டது என்பர். இதனை,

"அறக் கழிவுடையன பொருட்பயன் வரினே
வழக்கென வழங்கலும் பழித்தன்று என்ப"[132]

என்ற நூற்பா உணர்த்துகின்றது.

செய்யுளியலில், வழிபடு தெய்வம் உன்னைப் பாதுகாக்கட்டும். குற்றம் தீர்ந்த செல்வமொடு, வழிவழியாகச் சிறந்து வாழ்க என்ற பொருளில் அமையும் புறநிலை வாழ்த்து, ஆசிரியம், வெண்பா போன்ற பாவகையால் வரும் என்று கூறுவர். இதனை,

"வழிபடுதெய்வம் நிற்புறம் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமின் என்னும் புறநிலை வாழ்த்தே"[133]

என்ற நூற்பா அடிகள் காட்டுகின்றன.

வசையினை வெளிப்பட மொழியாமல், சொற்களுள் மறைத்து வைத்து மொழிதல் பழிகரப்பாகும்.

"மொழி கரந்து சொல்லின் அது பழிகரப்பாகும்"[134]

என்பது நூற்பா,

குற்றமில்லாது தான் உணர்த்தக் கருதிய பொருளை, மறைத்தலின்றி

வெளிப்படையாகத் தெளிவாக விளங்கும்படிக் கூறுவது காண்டிகை. இதனை,

"பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பின்
கரப்பின்றி முடிவது காண்டிகை ஆகும்"(135)

என்ற நூற்பா உணர்த்துகின்றது.

அகநானூற்றுள், பொருள்வயிற் பிரிந்த தலைவன் பிரிவை எண்ணி, ஆற்றாளாத தலைவி, ஆற்றாளாய தோழிக்குத் தான் ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது. குற்றமற்ற எமது கண்களும், நீர் சோரும் ஒளி பொருந்திய நீர்க்குவளை மலரினைப் போல, ஒழிவே இல்லாமல் நீரற்று வறண்ட குளத்தினையும் பெருக்கி விடுவனபோல நாளும் நீர் சொரிந்து, அழுதல் பொருந்தாவாகும். யான் துயிலவும் பெறுவேன் என்று கூறுவதை,

"நீர்வார் நிகர்மலர் கடுப்ப, ஓ மறந்து
அறுகுளம் நிறைக்குந போல, அல்கலும்
அழுதல் மேவல வாகிப்
பழிதீர் கண்ணும் படுகுவ மன்னே"(136)

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

முல்லைக்கலியில் ஏறுதழுவுதல் பற்றிக் கூறுமிடத்து வெள்ளைநிற ஏற்றை வருணிக்கும் பொழுது, பாண்டியனுடைய பழைய புகழை நிலை நிறுத்தின குடியொடு ஒக்கத் தோன்றின பசுவினத்தில் ஆயரெல்லாருஞ் சேரத் திரண்டு விளங்குகின்ற வானிலேயுறும்படி ஓங்கிய ஒளி பெருகுகின்ற பனைக் கொடியினையுடைய பலராமனின் பாலினது நிறத்தைப் போன்று குற்றமற்ற வெள்ளைநிற ஏறு என்பதை,

“வானுற வோங்கிய வயங்கொளிர் பனைக்கொடிப்

பானிற வண்ணன்போற் பழிதீர்ந்த வெள்ளையும்”(137)

என்பர்.

குறுந்தொகையில் நல்ல நாணத்தை விடச்செய்த குற்றமற்ற மாமையை நம்முடைய வலிய இயல்பினால் பொறுத்திருத்தல் அல்லாது சொல்லுதற்கும் ஆற்றல் இல்லாதவளாகிய மென்மை இயல்பினையுடையாய், என்று இடம் பெற்றுள்ளது. இதனை,

“நல்நாண் நீத்த பழிதீர் மாமை

வன்பின் ஆற்றுதல் அல்லது செப்பின்

சொல்ல கிற்றா மெல்லிய லோயே”(138)

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

குமட்டூர்க் கண்ணனார், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் செல்வ வளம் பற்றிப் பாடுகையில், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் போரில் வெற்றி பெற்றுப் பெற்ற பொருட்கள் யானையின் மேல் கொணரும் அளவுக்கு அதிகம் உள்ளது என்கிறார். இதனை,

“மார்புமலி பைந்தா ரோடையொடு விளங்கும்

வலனுயர் மருப்பிற் பழிதீர் யானைப்

பொலனணி யெருத்தமேல் கொண்டு பொலிந்தநின்

பலர்புகழ் செல்வ மினிதுகண் டிகுமே”(139)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

அரிசில்கிழார், தகடூர் எறிந்த பெருஞ்சேரலிரும்பொறையின் வீரம் பற்றிப் பாடுகையில், சேரலிரும்பொறை எரிபரந்தெடுத்தல் செய்து,

எதிர்த்துப் போரிடாது, மதிலுக்குள் மறைந்து இருக்கும் குற்றம் புரிந்த பகைவரின் அகழி மற்றும் மதிலை அழித்துக் கவர்ந்து கொண்டதனை என்று பாடுகிறார். இதனை,

"ஊரெரி கவர வுருத்தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப
மதில்வாய்த் தோன்ற லீயாது தம்பழி யூக்குநர்
குண்டுக ணகழிய குறுந்தாண் ஞாயில்"(140)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

பொருநராற்றுப்படையில் பாடினியின் உறுப்பு நலன்களை வருணிக்கும் பொழுது, முத்துக்கள் போன்ற குற்றந்தீர்ந்த வெள்ளிய பல்லினை உடையவள் என்று கூறுகிறார் புலவர். இதனை,

"பலவுறு முத்திற் பழிதீர் வெண்பல்"(141)

என்ற அடியால் அறியலாம்.

தற்போது பழி என்னும் சொல் விரோதம் என்னும் பொருளில் மக்களிடம் பயன்பாட்டிலுள்ளது.

### 1.2.3.11 பழுது

பழுது என்ற சொல்லுக்குக் கழகத் தமிழகராதி, "குற்றம், சிதைவு, பொய், பொல்லாங்கு, சேதம், பயனின்மை, பதன் அழிந்தது, வறுமை, தீங்கு, ஒழுக்கக்கேடு, இடம், நிறைவு"(142) என்ற பொருள்களைத் தரும்.

#### 1.2.3.11.1 பிறபொருள்களில் பழுது

பொருநராற்றுப்படையில் பழுது என்ற சொல் வறுமை என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது. கரிகாற் சோழனுடைய திருவடியை

அடைந்து, எனது வறுமை தீர்க்க என்று புலவர் முன்னின்றால், அதுவரை புலவரைப் பற்றி நின்ற வறுமையானது புலவரிடம் இல்லை எனும்படி, பசு தனது கன்றை விரும்பிப் பார்ப்பது போன்று புலவரை ஆர்வத்துடன் நோக்குவான் சோழன். இதனை,

"கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்
தாணிழன் மருங்கி லணுகுபு குறுகித்
தொழுது முன் னிர்குவி ராயிற் பழுதின்
ஈற்றா விருப்பிற் போற்றுபு நோக்கிநும்"(143)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. பழுது என்பது தற்போது பயன்பாட்டில் இல்லாதவற்றைக் குறிக்கப் பயன்படுகிறது.

### 1.2.3.12 புகர்

புகர் என்னும் சொல்லிற்குக் கபிலநிறம், குற்றம், சுக்கிரம், நிறம், பொறி, அழகு, பள்ளி, உயிர், அருவி, சோறு, கொக்கு"(144) என்ற பொருள்களைக் கழகத் தமிழகராதி தருகிறது. நர்மதாவின் தமிழகராதியும் இதே பொருள்களைச் சுட்டுகிறது. தொல்காப்பியத்தில் புகர் என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது.

மகரனகரம் மயங்காத ஒன்பது சொற்கள் பற்றிக் கூறும் நூற்பாவில் குற்றம் என்ற பொருளில் புகர் என்ற சொல் இடம்பெற்றுள்ளது. இதனை,

"மகரத் தொடர் மொழி மயங்குதல் வரைந்த
னகரத் தொடர் மொழி ஒன்பஃது என்ப
புகர்அறக் கிளந்த அஃறிணை மேன"(145)

என்ற நூற்பா விளக்குகிறது.

தொல்காப்பியர் புள்ளிமயங்கியலில், அல்வழிப் புணர்ச்சியில் லகர மெய் ஆய்தமாதலைப் பற்றிக் கூறும் நூற்பாவில், லகரத்தின் முன் தகரம் வரும்பொழுது நகரமாதலின்றி ஆய்தம் வருதலும் குற்றமில்லை என அறிவுடையோர் கூறுவர் என்பதனை,

"தகரம் வருவழி ஆய்தம் நிலையலும்
புகரின்று என்மனார் புலமையோரே"(146)

என்ற நூற்பா கூறுகிறது.

தலைவனின் பொருள்வயிற் பிரிவை எண்ணி, தோழி, தலைவனிடம். நீ தேடிச் செல்லும் பொருளைப் பெறக் குறித்த காலத்தளவும் இளமையுங் காமமும் நின் கையிடத்து நில்லாவாய் நாள்தோறுங் கழியும் என்று அறிவுரை கூறுகிறாள். காமன்தன் குற்றப்படும்படி அதனோடு வேறுபாடு கொண்டு பொருளிடத்தே வேட்கை நிகழ்ந்து போகின்றவனே என்று கூறுகிறாள். இதனை,

"கடைநா ளிதுவென் றறிந்தாரு மில்லைப்
போற்றாய் பெருமநீ காமம் புகர்பட
வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்"(147)

என்ற அடிகள் விளக்குகின்றன.

கலித்தொகையில் தலைவனும் தலைவியும் புன்னை மரத்தின் கீழ் பகற்குறி சுட்டி சந்தித்து வருகின்றனர். கரணத்தை விரும்பாது களவொழுக்கம் மேற்கொள்ளும் தலைவனிடம் தோழி திருமகள் போன்ற அழகுடைய தலைவியின் கண்களுக்கு முன் தோற்ற மலர்கள், தலைவியின் கண்களைப் பார்த்து இகழ்ந்துரைக்கும்படி செய்யும் உன் செயல் நின் புகழுக்குப் பெரிய குற்றமாய்த் தங்காதோ என்று வினவுகிறாள்.

இதனை,

"திகழ்மலர்ப் புன்னைக்கீழ்த் திருநலந் தோற்றாளை
இகழ்மலர்க் கண்ணளாத் துறப்பாயான் மற்றுநின்
புகழ்மைக்கண் பெரியதோர் புகராகிக் கிடவாதோ"(148)

என்ற அடிகள் விளக்குகின்றன.

திருமுருகாற்றுப்படையில், முருகனின் உருவத் தோற்றத்தைக் கூறுமிடத்து, கிடாயையும், மயிலையும் உடையவன். குற்றமில்லாத கோழிக் கொடியை உயர்த்து, தான் வேண்டிய வடிவு கோடலில் பிள்ளையாயிராது நெடுக வளர்ந்து தொடியை அணிந்த தோளையுடையவன் என்கிறார் நக்கீரர். இதனை,

"தகரன் மஞ்ஞையன் புகரில் சேவலங்
கொடியன் நெடியன் தொடியணி தோளன்"(149)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

குடக்கோ இளஞ்சேரலிரும்பொறையை ஆசிரியர் பெருங்குன்றூர் கிழார் பாடுகையில், "நீ மேற்கொண்டு புரியும் அரசுமுறை பிழையாமல், போரில் வெற்றியால் மேம்பட்டு நின்பால் அன்பாலொடுங்கிய மனம் குற்றப்படாது, கனவிலும் பிரிதலை யறியாது உறைதலையும் தண்ணியதாகவுள்ள மயிர்ச் சாந்து தடவப்பட்டு நெய்ப்புப் புலராத கூந்தலையும் உடைய மணமகளிர் கற்பால் வழிபட்டு நோக்கி . . . நின் மனைவியுடன் அழகுற விளங்கி, நீ நோயின்றி வாழ்வாயாக" என்று வாழ்த்தினார். இதனை,

"அரசியல் பிழையாது செருமேந் தோன்றி
நோயிலை யாகியர் நீயே நின்மாட்
டடங்கிய நெஞ்சம் புகர்படு பறியாது
கனவினும் பிரியா வுறையுளொடு தண்ணெனத்
தகர நீவிய துவராக் கூந்தல்"(150)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

பரிபாடலில் திருமாலின் குணநலன்களைத் கூறுமிடத்து, 'நலம்' எனக் கூறப்படுவன அனைத்தும் ஒருங்கே பொருந்திய, குற்றமற்ற தெளிந்த அறிவைத் தருகின்ற வேதமும், வெள்ளைத் தாமரைப் பூவின் மேலோனாகிய நான்முகனும், அவனிடத்தாகப் பிறக்கின்ற 'படைப்பு' என்னும் தோற்றமும் நீயே என்று புலவர் ஏத்துகிறார். இதனை,

"மைந்துடை ஒருவனும் மடங்கலும் நீ
நலமுழு தளைஇய புகரறு காட்சிப்
புலமும் பூவனு நாற்றமும் நீ
வலனுயர் எழிலியும் மாக விசும்பும்
நிலனும் நீடிய இமயமும் நீ"(151)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

"வியப்பும் சால்பும் செம்மை சான்றோர்
பலர்வாய் புகரறு சிறப்பின் தோன்றி
அரிய தந்து குடியகற்றிப்
பெரிய கற்று இசைவிளக்கி"(152)

என்ற அடிகளில் புகர் என்னும் சொல் குற்றமில்லாத சிறப்பு என்ற பொருளில் இடம் பெற்றுள்ளது.

### 1.2.3.12.1 பிற பொருள்களில் புகர்

புகர் என்னும் சொல் ‘புள்ளி’ என்னும் பொருளில் இடம்பெற்றுள்ளது. களிற்றின் முகம் புள்ளி பெற்று இருக்கும் என்பதை பதிற்றுப்பத்துப் பாடல்கள் சுட்டுகின்றன. இதனை,

“நெடுங்கொடிய தேர்மிசையும்
ஓடை விளங்கு முருகெழு புகர்நுதற்
பொன்னணி யானை முரண்சே ரெருத்தினும்”(153)

“வேங்கை வென்ற பொறிகிளர் புகர்நுதல்
ஏந்துகை சுருட்டித் தோட்டி நீவி”(154)

“அருஞ்சமத் தருநிலை தாங்கிய புகர்நுதல்
பெருங்களிற் றியானையொ டருங்கலந் தராஅர்”(155)

என்ற பாடலடிகள் காட்டுகின்றன.

### 1.2.3.13 புரை

கழகத் தமிழகராதி புரை என்ற சொல்லுக்கு “உட்டுளை, குரல்வளை, விளக்குமாடம், குற்றம், பொய், இலேசு, கூறுபாடு, உயர்வு, வீடு, ஆச்சிரமம், தேவாலயம், அறை, பக்கம், ஓர் உவமையுருபு, மறைவு, எதிர்காலம், களவு, குடில், குழிப்புண், செல்காலம், பழைமை, பழுது, பன்னசாலை, புரையென்னேவல், மடிப்பு, மேன்மை, உள்ளோடும் புண், கண்ணோய் வகை, மாட்டுத் தொழுவம்”(156) என்று பல பொருள்களைத் தருகிறது. நர்மதாவின் தமிழகராதியும், “இரகசியம், எதிர்காலம், களவு, குடில், குற்றம்,

பழுது, மடிப்பு, மேன்மை"[157] என்னும் பொருள்களைத் தருகிறது.

தொல்காப்பியத்திலும் புரை என்ற சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது. குற்றம், உயர்வு, உவம உருபு என்ற பொருள்களில் இடம் பெற்றுள்ளது. பாடாண்திணை பற்றிக் கூறுமிடத்து, குற்றம் தீர்ந்த காமத்தைப் பொருந்திய வகையினும் ஒன்றன் பகுதி பொருந்தும் என்று கூறுவர். இதனை,

"அமரர் கண்முடியும் அறுவகை யானும்
புரைதீர் காமம் புல்லிய வகையினும்
ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப"[158]

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

தலைவிக்குரிய கூற்றினை வகைப்படுத்தும் பொழுது, மணம் செய்து கொள்ள வேண்டித் தோழி தலைவனிடம் கூறிய குற்றமற்ற சொற்களோடு தன் இயல்பைக் கூறுமிடத்து, புரை என்ற சொல் வந்துள்ளது. என்பதனை,

"புரைதீர் கிளவி புல்லிய எதிரும்"[159]

என்ற நூற்பா அடி குறிக்கின்றது.

தலைவி களவு வாழ்க்கையில் தலைவன் வரும் காலம் மற்றும் வழி குற்றமுடையது என்று கருதும் இடத்தும் கூற்று நிகழ்த்துவாள். என்பதனை,

"பொழுதும் ஆறும். புரைவது அன்மையின்"[160]

என்ற அடி விளக்குகின்றது.

தோழி நிகழ்த்தும் கூற்றினைத் தொகுத்துரைக்கும் பொழுது,

தலைவியின் களவொழுக்கத்தை முன்னிலை, அறத்தொடு நிலை என்ற இருவகையால் குற்றம் நீங்கிய சொல்லைத் தாயிடம் உணர்த்துவாள். இதனை,

"முன்னிலை அறன்எனப்படுதல் என்று இருவகைப்
புரைதீர் கிளவி தாயிடைப் புகுப்பினும்"(161)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

தொல்காப்பியம் செய்யுளியலில் கலிப்பா வகைப்பற்றிக் கூறும் நுற்பாவில் தரவுடன் ஒத்த அளவாகவும், அதற்குக் குறைந்தும் வரும். குற்றம் தீர்ந்த பாட்டின் இறுதிநிலையை உரைத்தது. இதனை,

"தரவியல் ஒத்தும், அதகைப்படுமே
புரைதீர் இறுதி நிலையுரைத் தன்றே"(162)

என்ற நூற்பா கூறுகிறது.

நூல் எழுதும்போது, நூற்பாவிற்கு விளக்கம் எடுத்துக் கூறினாலும் குற்றம் நீங்கப் பொருள் தெளிவு போன்ற உரை எழுதினாலும் வினா விடுத்தலும் அதனை மறுத்தலும் உடையோர் வகையொடு குற்றம் நீங்க தேர்ந்து செய்யப் பெறும். இதனை,

"உரை எடுத்த அதன்முன் யாப்பினும் சூத்திரம்
புரைதப உடன்படக் காண்டிகை புணர்ப்பினும்
விடுத்தலும் விலக்கலும் உடையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் படுமே"(163)

என்ற நூற்பா கூறுகிறது.

தொல்காப்பிய நூற்பாக்கள் உயர்வு[164] என்ற பொருளில் புரை என்ற சொல்லாட்சியைக் கூறுகின்றன.

செல்வக் கடுங்கோ வாழியாதனின் வாய்மை மற்றும் அவனுடைய சிறந்த பண்பு நலன்களைக் கபிலர் கூறும் பொழுது, விளையாட்டானும் பொய்கூறுதலை யில்லாத வாய்மையினையும், பகைவர்தம் புறத்தே இகழ்ந்து கூறும் சொற்களை ஏறிட்டுக் கொள்ளாத குற்றம் நீங்கிய அறிவினையும், பூணாரம் அணிந்த மார்பினையும் உடையோய் என்று கூறுகிறார். இதனை,

"நகையினும் பொய்யா வாய்மைப் பகைவர்
புறஞ்சொற் கேளாப் புரைதீ ரொண்மை"[165]

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

பதிற்றுப்பத்தில் ஒன்பதாம் பத்துப் பதிகத்தில்

"புரையறு கேள்விப் புரோசு மயக்கி
அருந்திறன் மரபிற் பெருஞ்சதுக் கமர்ந்த"[166]

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

பரிபாடலில் வையைப் பாடலில், வையை ஆற்றில் நீராடிய பெண்கள் பலவகை நறுமணப் பொருள்களை அரைத்துப் பூசினர். செங்குங்குமத்தாலாகிய செழுமையான சேற்றையும், சிதைக்கப்பட்ட அகில் துண்டுகளையும், பலவகைக் கருப்பூரங்களையும் அம்மியிலிட்டு, அவையெல்லாம் ஒன்றாகக் கலக்குமாறு, குற்றமற்ற குழவிக் கல்லால் அரைத்தனர். இதனை,

"செங்குங்குமச் செழுஞ்சேறு

பங்கஞ் செய்யகில் பல பளிதம்

மறுகு படவறை புரையறு குழலியின்

அவியமர் அழலென அறைக்குநர்"(167)

என்ற அடிகள் விளக்குகின்றன.

புறநானூற்றுள் இடைக்காடனார் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனின் வீரத்தைப் புகழ்ந்து, அவனது படைகளின் பெருமையைக் கூறி, உலகத்திலுள்ள வேந்தர்கள் எல்லாம் தலை பணியுமாறு வலிமை உடையவன் ஆதலால் நினது குற்றம் தீர்ந்தது. அது நினக்கும் பழையதாய் வருகின்றது என்று கூறி வாழ்த்துகிறார். இதனை,

"தரைசுதலை பனிக்கு மாற்றலை யாதலிற்

புரைதீர்ந் தன்றது புதுவதோ வன்றே"(168)

என்ற பாடலடிகள் குறிக்கின்றன. புரை என்பது தற்பொழுது புரையேறுதலைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

### 1.2.3.14 போக்கு

போக்கு என்ற சொல்லுக்குக் கழகத் தமிழகராதி "அறையிருப்பு, சாட்டு, நடை, நிலவாசி, மனச்சாய்வு, சாவு, பழக்கம், போகுதல், போக்கென்னேவல், ஒரு பொருள் செல்லுந்துவாரம், வழி, விதம், நீரோட்டம், மலம் முதலியவை வெளிப்படுகை, குற்றம், சிறப்பு, மீட்சி"(169) என்ற பொருள்களைத் தருகிறது.

நர்மதாவின் தமிழகராதியும் போக்கு என்பதற்கு, "மீட்சி, கேடு, குற்றம்., நீக்குதல், இல்லாமல் செய்தல், நேரத்தைக் கழித்தல், இயக்கம், இயங்குதல், ஒருவர் நடந்து கொள்ளும் விதம், நடத்தை, போக்கிடம்"(170) என்னும் பொருள்களைத் தருகிறது.

தொல்காப்பியத்தில் போக்கு என்ற சொல்லாட்சி குற்றம் என்ற பொருளில் வழங்காது, இயக்கம், போகுதல் என்ற பொருளில் 'உடன்போக்கு' என்ற சொல்லாக மட்டும் வழங்குகிறது.

பொருநராற்றுப்படையில் மகளிர் குற்றமற்ற, ஓட்டை இல்லாத பொன்னால் செய்த வட்டில் நிறையும்படி பலகாலும் கள்ளை வார்த்துத் தந்தனர் என்று மகளிர் கள்ளுண்ணத் தந்து உபசரித்தமையைக் கூறுகின்றார். இதனை,

"இழையணி வனப்பி னின்னகை மகளிர்
போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்
வாக்கபு தரத்தர வருத்தம் வீட"(171)

என்ற அடிகளால் அறிய முடிகிறது.

போக்கு என்ற சொல் சிறுபாணாற்றுப்படையில் அழித்தல், இல்லாமல் செய்தல் என்னும் பொருளில் இடம் பெற்றுள்ளது. அழித்தற்கரிய முறைமையினையுடைய பழையதாகிய பெருமை மிக்க இலங்கையினது பெயரைத் தன்பெயராகத் தான் தோன்றிய பொழுதே பெற்ற நல்ல இலங்கை என்னும் நகரை ஆண்ட மன்னர் பலருள்ளும் சிறந்தவர் என்று குறிப்பிடப் பெற்றுள்ளது. இதனை,

"துறையாடு மகளிர்க்குத் தோட்புணை யாகிய
பொருபுனல் தரூஉம் போக்கரு மரபின்
தொன்மா இலங்கைக் கருவொடு பெயரிய
நன்மா இலங்கை மன்ன ருள்ளும்"(172)

என்ற அடிகள் விளக்குகின்றன. இச்சொல் தற்போது வழக்கில் இல்லை.

**1.2.3.15 மறு**

மறு என்ற சொல் குற்றம் என்ற பொருளைத் தருகிறது. கழகத் தமிழகராதி, "குற்றம், மச்சம், மறுவென்னேவல், மற்றை, மாசு, குறை, அடையாளம்"(173) என்ற பொருள்களைத் தருகிறது. நர்மதாவின் தமிழகராதி, "குற்றம், எதிர்த்தல், ஆட்சேபித்தல், முடியாது அல்லது இல்லை என்பதைத் தெரிவித்தல்"(174)என்னும் பொருள்களைத் தருகிறது. தொல்காப்பியத்திலும் மறு என்ற சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது.

வாகைத்திணையின் பாகுபாடு பற்றிக் கூறும்பொழுது குற்றமில்லாத செயலையுடைய மழை, வெயில், பனி என்ற மூவகைக் காலத்தினையும் பொறுத்த அறிவன் பக்கமும் என்று அறிவன் வாகையைக் கூறுவர். இதனை,

"மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்"(175)

என்ற நூற்பா அடிகள் விளக்கும்.

அகநானூற்றில் வாயிலாகப் புகுந்த தோழியிடம், தலைவன் மகனை வாயிலாகக் கொண்டு புகுந்தமையைத் தலைவி கூறுகிறாள். இதனை,

"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுஇன்று எய்துப"(176)

என்ற அடிகள் கூறுகின்றன. பகைவரும் விரும்பும் குற்றமற்ற அழகினையுடைய சிறுவர்களைப் பெற்ற தலைமையினை உடையோர் இவ்வுலகத்தே புகழோடும் விளக்கமுறுவர் என்று சுட்டுகிறது.

கலித்தொகையில், குற்றமற்று மாட்சிமைப்பட்ட நின் ஒழுக்கத்தாலே கடலின் மீதே தோன்றி இருளைக் கெடுக்கும் ஞாயிறு போல இவ்வுலகத்திலுள்ள பகைவர் நெஞ்சம் அஞ்சும்படி வெருவுதல் வந்த கொடுந் தொழிலையும் நெடிதாய்த் தோன்றுகின்ற ஏனையவற்றின் உயர்ந்த குடையைத் தமக்கு நிழலென்று கருதிச் சேர்ந்தவர்கட்குக் காட்சி தருங் கதிரைச் சொரியும் மதியையொத்த குளிர்ச்சினையும், அகற்சியையுடைய உலகில் எவ்விடத்துள்ளோரும் வணங்கிப் புகழும் இரங்குகின்ற ஓசையினையுடைய முரசினையுமுடையாய் என்று இடம் பெற்றிருப்பதை,

"காண்டகு மதியென்னக் கதிர்விடு தண்மையும்
மாண்டநின் னொழுக்கத்தான் மறுவின்றி வியன்ஞாலத்
தியாண்டோருந் தொழுதேத்தும் இரங்கிசை முரசினயாய்"(177)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

குறுந்தொகையில் வரைவுடன்பட்ட தோழி, தலைமகட்குக் கூறுகையில், வேங்கை மரத்தினது கெடாத மெல்லிய கிளையிலிருந்து மலர்கள் உதிர்ந்து கொண்டிருக்க, அவ்விடத்திலே யானை பெறுதற்கு அரிய உறக்கங் கொள்ளுதலைச் செய்யும் நாட்டையுடைய தலைவனது மார்பை உரிமையாகப் பெற்ற குற்றமற்ற நட்பானது அழகு மிக உடையது என்று கூறுகிறாள்.

"எழில்மிக உடையது ஈங்கு அணிப் படூஉம்

. . . .  . . . .  . . . .  . . . .  . . . .

ஆர்துயில் ஈயும் நாடன்

மார்பு உரித்து ஆகிய மறுஇல் நட்பே"(178)

என்ற பாடல் விளக்குகிறது.

சிறுபாணாற்றுப்படையில் ஓய்மா நாட்டு நல்லியக்கோடனைப் புகழ்ந்து கூறுகையில், குற்றமின்றி விளங்கிய பழியில்லாது வாய்த்த வாளினையுடைய மிக்க புலி போலும் வலியினையும் உடைய ஓவியர் குடியிற் றோன்றியவன் என்று கூறுகிறார். இதனை,

"மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்

உறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன்"(179)

என்ற அடிகள் காட்டுகின்றன.

திருமுருகாற்றுப்படையில், குற்றமில்லாத கற்பை உடைய, ஒளி பொருந்திய நெற்றியினையுடைய பெண்ணின் கணவன் என்ற பொருள் தரும்,

"மறுவில் கற்பின் வாணுதல் கணவன்"(180)

என்ற அடியில் மறு என்ற சொல் குற்றம் என்ற பொருளில் வந்துள்ளது.

முருகனின் பெருமைகளாக, குற்றமில்லாத வெற்றியினையும், ஒருவரானும் அளந்தறிய வொண்ணாத நல்ல புகழினையும், செவ்விய வேலையும் உடைய முருகக்கடவுள் என்று கூறுகிறார். இதனை,

"மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்"(181)

என்ற அடிகள் விளக்குகின்றன.

முருகனின் ஆறுமுகங்களின் தன்மையைக் கூறும் முகமாக, ஒருமுகம், உலகம் குற்றமின்றாய் விளங்கும் பொருட்டுப் பலவாகிய சுடர்களையும் தோற்றுவித்து நின்றது. இதனை,

"மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்"(182)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

கந்தருவ மகளிர் குற்றமின்றி விளங்குவர் என்பதனை,

"மாசின் மகளிரொடு மறுவின்றி விளங்கக்
கடுவோ டொடுங்கிய தூம்புடை வாலெயிற்று"(183)

என்ற அடிகள் விளக்குகின்றன.

பதிற்றுப்பத்து, இரண்டாம் பத்துப் பதிகத்தில் புலவர், உதியஞ்சேரலின் பெருமைகளாக, நிலைத்த பெரும் புகழையும், குற்றமில்லாத வாய்மொழியும் உடையவன் என்று புகழ்ந்தேத்துகிறார். இதனை,

"மன்னிய பெரும்புகழ் மறுவில் வாய்மொழி
இன்னிசை முரசின் உதியஞ்சேரற்கு"(184)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

ஒன்பதாம் பதிகத்தில் இளஞ்சேரல் இரும்பொறை குற்றமில்லாத செங்கோலாட்சி செய்பவன் என்கிறார். இதனை,

"மன்னுயிர் காத்த மறுவில் செங்கோல்
இன்னிசை முரசி னிளஞ்சேர லிரும்பொறையைப்"(185)

என்ற அடிகள் காட்டுகின்றன.

பரிபாடல், செவ்வேள் தோற்றம் பற்றிய புராணக் கதையைக் கூறுமிடத்து, சிவபிரானின் சிதைவுற்ற கருக்கூறுகளை, வடதிசைக்கண் வீற்றிருக்கின்ற கற்புடை மகளிர் எழுவருள், அருந்ததி நீங்கலாக, கார்த்திகைப் பெண்கள் என வழங்கும். அறுவரும் அக்கருத்துண்டுகளை உண்டனர் மகா தவசிகளின் மனைவியராகிய அவர்கள், குற்றமற்ற கற்பினை உடையவர், தம் நிறையுடைமையினின்றும் வழுவாதவராக, அச்சிவக்கருவைத் தம் கருப்பையில் தாங்கினர். இதனை,

"தடவுநிமிர் முத்தீப் பேணியமன் எச்சில்
வடவயின் விளங்கால் உறைகெழு மகளிருள்
கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய
அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்
மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்
நிறைவயின் வழாஅதுநிற் சூலினரே"(186)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

முருகன் குழவிப் பருவத்தில் இந்திரனுடன் போரிட்டு வெற்றி பெற்றமையால், தேவாதிதேவர்களும் பல்வேறு திறைப் பொருட்களைக் கொடுத்தனர். குற்றமற்ற தேவருலகுக்கு உரியோனாகிய இந்திரனது புகழின் எல்லையையும், தாமரைக் கொட்டையை விட்டு நீங்காது கிடந்த அந்தக் குழவிப் பருவத்திலேயே கடந்து நின்ற புகழுடையோனே! என்று கூறுகிறார்.

"மறுவில் துறக்கத்து அமரர் செல்வன்றன்
பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம்பு இகந்தோய்"(187)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

மகளிர் பரங்குன்றத்திலுள்ள முருகனின் யானை கொள்ளும் கவளத்தின் மிச்சிலை, சிறந்த சிறப்பு உணவாகக் கருதிப் பக்தியோடு உண்பார்கள். நின் குன்றத்தையடைந்து, அச்சிறப்புணவை உண்ணாதவிடத்து, அம்மகளிர்கள் குற்றமற்ற தம் காதலர்களின் தோள் நலத்தை அடைய மாட்டார்கள் என்று யானையைப் புனைந்து போற்றி வழிபடுகின்ற மரபு கூறியுள்ளார். இதனை,

"கன்னிமை கனிந்த காலத் தார்நின்
கொடியேற்று வாரணம் கொள்கவள மிச்சில்
மறுவற்ற மைந்தர்தோள் எய்தார்"(188)

என்ற பாடலடிகள் குறிப்பிடுகின்றன.

பொருநராற்றுப்படையில், கரிகாலன் தன்மையைக் கூறுமுகத்தான், குளிர்ந்த வைப்புக்களையுடைய நானிலங்களும் ஒருசேரத் திரண்டு இம்மண்ணுலகத்தே குற்றமற்ற தன் ஒரு குடையாலே தன் ஆணையையே உலகம் கூறும்படியாக நெடுங்காலம் உலகை ஆண்ட பெரிய நட்பையும், அறநெறியையும், செங்கோலையும் உடைய கரிகாலன் வாழ்வானாக என்றுரைக்கிறார். இதனை,

"கழிநாரை வரையிறுப்பத்
தண்வைப்பினா னாடுகுழீஇ
மண் மருங்கினான் மறுவின்றி

ஒருகுடையா னொன்றுகூறப்
பெரிதாண்ட பெருங்கேண்மை"(189)

என்ற அடிகள் விளக்குகின்றன.

தற்போது மறு என்பது மச்சம், ஆட்சேபித்தல் அல்லது மறுத்தல் என்னும் இருபொருள்களுடன் வழக்கில் உள்ளது.

### 1.2.3.16 மாசு

கழகத் தமிழகராதி இச்சொல்லுக்கு "அழுக்கு, அற்பம், கருமை, குற்றம், மழை, மறு, மேகம், இருள், பாவம், தீமை, விபரீதம், கண்ணின் காசபடலம், குழப்பினமா, பால்வீதி மண்டலம்"(190) எனப் பல பொருள்களைத் தருகிறது.

அகநானூற்றில் தலைவனின் கொடுமை யொழுக்கம் கண்டு ஊடல் கொண்ட தலைவி, தலைவன் கூறிய மாயப் பொய்ம் மொழிகளை எள்ளி நகையாடுகிறாள். தேர்ந்த கொங்கைகளையும், மார்பகத்துப் படர்ந்த தேமலினையும், குற்றமற்ற கற்பினையும் உடையவளே! எம் புதல்வனை ஈன்ற தாயே என்று கூறுகிறாள். இதனை,

"ஆக வனமுலை அரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின், புதல்வன் தாய் என"(191)

என்ற அடிகள் காட்டுகின்றன.

ஊடல் கொள்ளும் தலைவி, தலைவனிடம் தம் புதல்வனின் பண்புநலன்களைக் கூறுகிறாள். குற்றமற்ற உள்ளங்கையினை உடையவன், பவளத்துண்டுகள் போன்ற சிவந்த அழகிய வாயினை உடையவள் என்று பலப்பலக் கூறுகின்றாள். இதனை,

"மாசுஇல் அங்கை, மணிமருள் அவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்"(192)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன.

அறத்தொடு நிற்கும் தலைவி தோழியிடம் "வளைந்த சந்திரனை உடைய பணைத்த நம் தோள்களைத் தழுவுகின்ற உரிமை, குற்றமேதும் இல்லாமல், தன் ஒருவனுக்கே உள்ளது என்பதனையும் தலைவன் அறியான்"(193) என்று கூறுகிறாள்.

வினைமுடித்து இல்லம் திரும்பும் தலைவன், தேர்ப்பாகனிடம், அரிய காவல் திறனையுடைய பகைவர்க்கு அச்சத்தைத் தரும் மூதூரிலேயுள்ள, செல்வ மிகுந்த மாளிகையிலே அடங்கியுள்ள குற்றமற்ற கற்பினையும், செவ்வரி படர்ந்த மதர்ந்த குளிர்ந்த கண்களையும், மூங்கிலை யொத்த பணைத் தோள்களையும் உடைய நம் தலைவியைக் காண்போமாக என்கிறான். இதனை,

"அருங்கடிக் காப்பின், அஞ்சுவரு மூதூர்த்
திருநகர் அடங்கிய மாசுஇல் கற்பின்
அரிமதர் மழைக்கண், அமைபுரை பணைத்தோள்
அணங்குசால் அரிவையைக் காண்குவம்"(194)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

கலித்தொகையில் ஐந்து வகையாகக் கூட்டின மாசில்லாத வண்மையுடைய படுக்கை என்ற பொருளில்,

“மாசில்வண் சேக்கை மணந்த புணர்ச்சியுட்”(195)

என்ற விளக்கம் பெற்றுள்ளது.

கலித்தொகைப் பாடலில் ஊடல் கொண்ட தலைவி, மாசறக் கழுவுதலுற்ற நீலமணியை நீ எனக்கு ஒவ்வாயென்று ஏசுங் கரிய கூந்தல், பூவணிந்து வண்டுகள் ஆரவாரிக்கும் அழகைப் பெறுதலை யான் விரும்பேன் என்கிறாள். இதனை,

“மாசற மண்ணுற்ற மணியேசும் இருங்கூந்தல்
வீசேர்ந்து வண்டார்க்குங் கவின்பெறல் வேண்டேன்மன்”(196)

என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றன.

“குற்றமற்று விரிந்து பரந்து கிடக்கும் கடல்”(197) என்ற பொருளிலும், “மாசற்ற, அழுக்கற்ற குற்றமற்ற கூந்தல் என்ற பொருளிலும் மாசு என்ற சொல் குற்றம்”(198) என்ற பொருளில் இடம் பெற்றுள்ளது.

கலித்தொகைத் தலைவி, நீர் நிரம்பிய இவ்வுலகில் தம் கேள்வர் இல்லாராயின், கணவர் மேலுள்ள வேட்கையோடே இறந்துபடும் மாட்சிமைப்பட்ட மனத்தைப் பெற்றவர்கள், குற்றமில்லாத சுவர்க்கத்தே சென்று அவர்கள் நுகர விரும்பியவற்றைத் தாம் விரும்பிய படியே பெறுதல் மெய்யென்று அறநூல்கள் கூறுகின்றன. இதனை,

“ஈண்டுநீர் ஞாலத்துள் எங்கேள்வர் இல்லாயின்
மாண்ட மனம்பெற்றார் மாசில் துறக்கத்து
வேண்டிய வேண்டியாங் கெய்துதல் வாயெனின்
யாண்டு முடையேன் இசை”(199)

என்ற அடிகள் காட்டுகின்றன.

குறிஞ்சிப்பாட்டில், சான்றாண்மையும், பெருமையும் ஒழுக்கமும் யாதனுமொரு காரணத்தால் இடையே கெடுமாயின் அவ்வழித் தோன்றிய அழுக்கைப் போம்படி, வயங்கு புகழ் பழைய நிலையுண்டாக, நிற்கச் செய்தல் மயக்கந் தீர்ந்த மெய்க்காட்சியையுடைய அறிவுத் தலைமையினை உடையோர்க்கும் எளிய செயல் என்று சொல்லார் பெரியோர். இதனை,

"சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசறக் கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறு காட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய என்னார் தொன்மருங் கறிஞர்"(200)

என்ற அடிகள் விளக்குகின்றன.

குறிஞ்சிப்பாட்டில் தலைவன் யானையிடமிருந்து தலைவியைக் காத்தோம்பிய பின்னர்த் தாமுற்ற நிலையினைத் தோழி கூறும் இடத்து, பெரிய தகுதிப்பாடுடைய தலைவன் அஞ்சி நடுங்கிய எம்மை நோக்கி, அழகிய சிலவாகிய கூந்தலினையுடையாய், தடுமாறாதே. எத்துணையும் அஞ்சாது ஒழிக. யான் உன் அழகிய நலத்தை நுகருவேன் என்று இயம்பி, குற்றமற்ற ஒளியினையுடைய தலைவியின் நுதலினைத் துடைத்து, நெடிது சிந்தனை செய்த பின்னர் என் முகத்தைப் பார்த்து முறுவல் பூத்தான். இதனை,

"அடுங்கரை வாழையின் நடுங்கப் பெருந்தகை
அஞ்சி லோதி அசையல் யாவதும்
அஞ்சல் ஓம்புநின் அணிநலம் நுகர்கென

மாசறு சுடர்நுதல் நீவி நீடுநினைந்து

என்முகம் நோக்கி நக்கனன்"[201]

என்ற அடிகள் விளக்குகின்றன.

சிறுபாணாற்றுப்படையில் நெய்தல் திணை மக்கள் விருந்தினரை உபசரிக்கும் இடத்து, பெரிய தோள்களையும், திங்கள் கண்டு ஏங்கும் முக அழகினையும், வேல் போன்ற கண்களையும் உடைய நுளையர் மகள் கொணர்ந்த கள் என்று வந்துள்ளது. இதனை,

"கரும்புகைச் செந்தீ மாட்டிப் பெருந்தோள்

மதியேக் கறூஉம் மாசறு திருமுகத்து

நுதிவேல் நோக்கின் நுளைமகள் அரித்த

பழம்படு தேறல் பரதவர் மடுப்ப"[202]

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

திருமுருகாற்றுப்படையில் கண்ணுக்கினிய ஒளியினையுடைய குற்றமில்லாத கந்தர்வ மகளிர் என்று இடம் பெற்றுள்ளது. இதனை,

"பொன்னுரை கடுக்குந் திதலையர் இன்னகைப்

பருமம் தாங்கிய பணிந்தேந் தல்குல்

மாசின் மகளிரொடு"[203]

என்ற அடிகள் விளக்குகின்றன.

நற்றிணையில் வரைவிடை நீட்டித்த வழி, தோழி தலைமகற்கு, பூப்போன்ற எமது தலைவியினலத்தைப் புதுவதாக நுகர்ந்து வைத்தும் நீ அறிந்தனையல்லையாதலின் யாம் நினக்கு உடன்படுதலையுடைய எம் உள்ளத்தில் வருத்தமுற அதனையேற்றுக் குற்றமற்ற கற்பினையுடைய

மடவாளொருத்தி தன் குழவியைப் பலிகொடுப்ப வாங்குதலும், அவள் அதனைக் கைவிட்டாற்போல முன்னாளின் முதற்கொண்டு எம்முடன் வளர்ந்து வந்த நாணத்தையும் விட்டொழிந்தோம். இதனை,

"நேர்புடை நெஞ்சந் தாங்கத் தாங்கி
மாசில் கற்பின் மடவோள் குழவி"(204)

என்ற அடிகள் விளக்குகின்றன.

சேகம்பூதனார் என்னும் புலவர், ஆயர் தம் பசுவின் கழுத்தில் குற்றமில்லா நல்ல மணியைக் கட்டியுள்ளனர். அதன் தெளிந்த ஓசை, ஆயர்தம் குழலோசையோடு சேர்ந்து மெல்லிதாக வந்து ஒலித்து நிற்கும் என்பதனை,

"மதர்வை நல்லான் மாசி றெண்மணி
கொடுங்கோற் கோவலர் குழலோ டொன்றி"(205)

என்ற அடிகளில் குறிப்பிடுகிறார்.

பதிற்றுப்பத்து இரண்டாம்பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், மழை பொய்த்துப் பஞ்சம் ஏற்பட்ட காலத்தும், தன்னை அண்டி வந்தோரின் பசிப்பிணியைத் தம் வள்ளல் தன்மையால் நீக்குவான். ஆதலால் அவனை ஈன்ற தாயின் வயிறு குற்றமின்றி விளங்கட்டும் என்று வாழ்த்துகிறார். இதனை,

"மன்னுயி ரழிய யாண்டுபல மாறித்
தண்ணிய லெழிலி தலையா தாயினும்
வயிறுபசி கூர வீயலன்
வயிறுமா சிலீஇயரவ னீன்ற தாயே"(206)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

செல்வக்கடுங்கோ வாழியாதன் குற்றமற்ற உள்ளம் உடையவன் என்பதனை,

“மல்ல லுள்ளமொடு மாசற விளங்கிய
செல்வக் கடுங்கோ வாழி யாதனைக்”(207)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

பரிபாடல் திருமால் வாழ்த்தில், திருமகள், திருமாலின் குற்றமற்ற மார்பில் வதிந்திருப்பதை,

“செய்யோள் சேர்ந்தநின் மாசில் அகலம்”(208)

என்ற அடியில் சுட்டுகிறது.

ஐம்பெரும்பூதங்கள், இரு சுடர்கள், அறவோன், ஐந்துகோள்களுக்குரியோர், திதியின் பிள்ளைகளான அசுரர், விதியின் மக்களான ஆதித்தர், வசுக்கள் எண்மர் முதலானோர் குற்றமற்ற தன்மையை உடையவர்கள். இவர்கள் அனைவரும் திருமாலின்றும் தோன்றியவர்கள் என்பதனை,

“தீவளி விசும்பு நிலன்நீர் ஐந்தும்
ஞாயிறும் திங்களும் அறனும் ஐவரும்
திதியின் சிறாரும் விதியின் மக்களும்
மாசில் எண்மரும்........ ........ ..........
........ ......... ....... ........ ....... ..........
மாயோய் நின்வயின் பரந்தவை.......”(209)

என்ற அடிகள் விளக்குகின்றன.

உயிர்களின் பிறவித் தளையை அறுப்பவை திருமாலின் குற்றமற்ற சிவந்த பாதங்கள் என்பதனை,

"மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி"(210)

என்ற அடி விளக்குகிறது.

திருமால் குற்றமற்ற ஆயிரம் சுடுகதிர்களைப் பரப்புகின்ற ஞாயிறாக விளங்குகின்றான் என்பதனை,

"மாசில் ஆயிரங்கதிர் ஞாயிறும் தொகூஉம்"(211)

என்ற அடி சுட்டுகிறது.

வையைப் பாடலில், குற்றமற்ற நூலறிவையுடைய புலவர்களின் நா புகழ்தரும் அறிவுரைகளைக் கூறும் என்று இடம்பெற்றுள்ளது. இதனை,

"மாசில் பனுவற் புலவர் புகழ்புல"(212)

என்ற அடி விளக்குகிறது.

செவ்வேள் பாடலில், தன்னடியவர் விரும்பி வந்து வழிபட்டுப் போற்ற, கறைமிடற் றண்ணலாகிய சிவபெருமானுக்கு மாசற் றோளான உமாதேவியார் பெற்றுத் தந்த செல்வனாகிய முருகப் பெருமானின் கோயில் விளங்குவதனை,

"மறுமிடற் றண்ணற்கு மாசிலோள் தந்த
நெறிநீர் அருவி அசும்புறு செல்வம்
மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா
தண்பரங் குன்றம் நினக்கு"(213)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

போர்களத்தில் வீரர்கள் வீர மரணமடைந்தால், அவர்கள் துறக்கவுலகினை அடைந்து, அவ்வுலகத்துக் குற்றமில்லாத மகளிரை மணந்து பேரின்பம் நுகர்வர் என்பதனை,

"தண்ணடை பெறுதல் யாவது படினே
மாசின் மகளிர் மன்ற னன்றும்
உயர்நிலை யுலகத்து நுகர்ப வதனால்"(214)

என்ற அடிகள் விளக்குகின்றன.

திருமுருகாற்றுப்படையில் இரண்டிடங்களில் அழுக்கு என்ற பொருளில் மாசு என்ற சொல் கையாளப் பெற்றுள்ளது.(215) இச்சொல் தற்போது அழுக்கு என்னும் பொருளில் மக்களால் பயன்படுத்தப்பட்டு வருகிறது.

### 1.2.3.17 மை

'மை' என்னும் சொல்லுக்குக் கழகத் தமிழகராதி, "அஞ்சனம், இருள், எழுதுமை, ஓரெழுத்து, கறுப்பு, குற்றம், செம்மறியாடு, நீர், மலடி, மலட்டெருமை, மேகம், மேச இராசி, மையென்னேவல், வெள்ளாடு, தீவினை, மசி, மந்திரமை, வண்டி மை, கருநிறம், களங்கம், பசுமை, பாவம், அழுக்கு, மலடு, இளமை, பன்மைப் பொருள் விகுதி(216) என்னும் பல பொருள்களைச் சுட்டுகிறது.

தொல்காப்பியத்தில் 'மை' என்ற சொல்லாட்சி குற்றம் என்ற பொருளில் இடம் பெற்றுள்ளது. குற்றமில்லாத சிறப்பினையுடைய உயர்ந்தோர் பக்கம் என்ற பொருள் தருவதை,

"மையறு சிறப்பின் உயர்ந்தோர் பாங்கின்"(217)

என்ற அடி உணர்த்துகிறது.

சங்க இலக்கியத்தில் 'மை' என்ற சொல் இடம்பெற்றுள்ளது. அகநானூற்றில், குற்றந்தீர நெய்யிடத்துக் கனிந்த இறைச்சியோடு கலந்த வெண்சோற்றுடன் குறையாத வண்மையோடு உயர்ந்தோரைப் பேணினர் என்பதில்,

"மைப்புஅறப் புழுக்கின் நெய்க்கனி வெண்சோறு
வரையா வண்மையொடு புரையோர்ப் பேணி"(218)

என்று மை கூறப்பட்டுள்ளதை அறியக் கூடும்.

நமது காதலருடைய வரவுக் காலம், குற்றமற்ற மழைக் காலத்தை (கார்காலம்) விட அருமையையுடைத்து. தலைவி, தோழி இருவரும் விரும்பும் தலைவனின் வருகையும் குற்றமற்றது என்ற பொருளில்

"கையுற வீழ்ந்த மையில் வானமொ
டரிது காதலர்ப் பொழுதே . . . ."(219)

என்று ஐங்குறுநூறு சுட்டுகின்றது.

நுதல் குற்றமற்ற ஒளி பொருந்தியது என்பதை,

"மையறு சுடர்நுதல் விளங்கக் கறுத்தோர்"(220)

என்று பிறிதொரு ஐங்குறுநூற்றுப் பாடல் குறிப்பிடுகின்றது.

மறுவில்லாத மதிபோல விளங்கும் முகம் என்பதை,

"மையின் மதியின் விளங்கு முகத்தாரை"(221)

என்று கலித்தொகை வழி அறியமுடிகின்றது.

"மையற விளங்கிய மணிமருள் அவ்வாய்தன்
மெய்பெறா மழலையின் விளங்குபூண் நனைத்தரப்"(222)

என்று சிறுவனின் மாசற்ற மணியின் அழகினையுடைய வாய் குறிக்கப்படுகின்றது.

"மையில் செந்துகிர்க் கோவை யவற்றின்மேல்"(223)

என்ற கலித்தொகையடியில் இடையில் குற்றமற்ற பவழ வடம் அணிந்ததைக் காணமுடிகின்றது.

இதே பாடலில்,

"மையற விளங்கிய ஆனேற் றவிர்பூண்"(224)

என்ற அடியில் அழுக்கற்ற ஆனேற்றின் பூண் சுட்டப்படுகின்றது.

நான் விரும்பும், என் தோளை மெலிவித்தானது வடிவழகின் தன்மை நான் விரும்பிக் காண்பதல்லது அவன் செய்ததை நன்று தீதென்று கூறுகின்ற பிறவற்றைக் காணேன் என்பதை,

"மையில் சுடரே மலைசேர்தி நீயாயின்"(225)

என்ற கலித்தொகை அடி வழி அறியமுடிகின்றது.

குற்றமற்ற தெய்வம் என்ற பொருளில்,

"மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய
மலர்அணி வாயில் பலர்தொழு கொடியும்"(226)

என்று பட்டினப்பாலை குறிப்பிடுகின்றது.

குற்றமில்லாத அறிவுடையவர் என்பதை,

"மையி லறிவினர் செவ்விதி டைந்துதம்"(227)

என்ற பதிற்றுப்பத்திலுள்ள அடி சுட்டுகின்றது. களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் குற்றமில்லாமல் விளங்குகின்ற வீரப்புண்களால் உண்டாகிய வடுப்பொருந்திய மார்பையுடையவன் என்பதை,

"மையற விளங்கிய வடுவாழ் மார்பின்"(228)

என்ற அடி விளக்குகின்றது.

திருமாலானவன் குற்றமற்ற ஒளியினைப் பரப்பியபடியிருக்கின்ற வெண்சங்கைப் போன்ற திருமேனி வண்ணத்தினை உடையவன் என,

"மாயுடை மலர்மார்பின் மையில்வால் வளைமேனிச்"(229)

என்று பரிபாடலடி கூறுகின்றது. மற்றொரு திருமால் வாழ்த்துப் பாடலில், தாமரை குற்றமற்றது என்பதை,

"மையில் கமலமும் . . . . . . . . ."(230)

என்ற அடி சுட்டுகின்றது.

திங்கள் தன் ஒளி வீசும் தன்மையிலிருந்து குற்றமற்று மாறாது விளங்குகின்றது என்பதை மதுரைக்காஞ்சி,

"இரவுச் செய்யும் வெண்திங்களும்
மைதீர்ந்து கிளர்ந்து விளங்க"(231)

என்ற அடிகளில் விளக்குகின்றது. இவ்வாறு 'மை' என்ற சொல் குற்றம்

என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் கையாளப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

தற்போது இச்சொல், பெண்கள் மைதீட்டுதல், வண்டி மை என்னும் பொருள்களைப் பெற்று பயன்படுத்தப்பட்டு வருகிறது.

### 1.2.3.18 வசை

வசை என்ற சொல்லிற்குக் கழகத் தமிழகராதி, "பழிப்பு, குற்றம், நிணம், இகழ்ச்சிச் சொல், பெண்யானை, மகள், கணவனுடன் பிறந்தவள், வசைகவி, அகப்பை, மலட்டுப்பசு, பசு, பெண், மனைவி"[(232)] என்று பல பொருட்களைச் சுட்டுகின்றது. இதில் பழிப்பு, குற்றம் என்ற சொற்கள் குற்றம் தொடர்பாகப் பொருந்தி வருவதைக் காணமுடிகின்றது.

வசை என்பதும் குற்றம் என்ற பொருளைக் குறிக்கும் சொல்லாகக் குறிக்கப்பட்டுள்ளது. வசை என்ற இச்சொல் தொல்காப்பியத்தில் இடம் பெற்றிருப்பதைக் காணமுடிகின்றது. நூலின் குற்றங்களைக் கூறும் தொல்காப்பியர்,

"சிதைவு எனப்படுபவை வசை அற நாடின்"[(233)]

என 'வசை' என்ற சொல்லைச் சுட்டிக்காட்டியிருப்பது அறியத்தக்கது.

செம்பொருள் அங்கதமே 'வசை' எனப் பொருள்படும் என்பதை,

"செம்பொருளாயின் வசை எனப்படுமே"[(234)]

என்ற நூற்பாவிலும், அங்கதச் செய்யுளைச் சுட்டுமிடத்து,

"வசையொடும் நசையொடும் புணர்ந்தன்றாயின்
அங்கதச் செய்யுள் என்மனார் புலவர்"(235)

என்ற நூற்பாவிலும் வசை என்ற சொல் குற்றம் என்ற பொருளில் தொல்காப்பியரால் ஆளப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது.

தலைவன் தலைவியின் குற்றமற்ற நலன் கெடுவதற்குக் காரணமானவன். தலைவன் வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வந்த பின்பும் அவன் திரும்பி வரவில்லை என்பதனை,

"வசைதீர்ந்த என்னலம் வாடுவ தருளுவார்"(236)

என்ற அடி உணர்த்தும்.

குற்றமற்ற இளமையையுடைய தலைவி புள்ளிகளையுடைய நண்டைப் பிடிக்க அதனைப் பின் தொடர்ந்து ஓடியதை,

"தசைஇயு ளொழிந்த வசைதீர் குறுமகள்"(237)

என்ற அடி சுட்டுகிறது.

குற்றமில்லாத புகழுடன் விளங்குகின்ற வெள்ளி (சுக்கிரன்) என்னும் நட்சத்திரம் தான் வழக்கமாகச் செல்லும் திசைமாறி வடக்கிலிருந்து தெற்கே சென்றாலும்; தானே பாடிக்கொண்டு திரியும் மழைத் துளியை உணவாகக் கொள்ளும் வானம்பாடிப் பறவை வருந்தும்படி மேகம் மறைந்து மழை பெய்யாமல் வறண்டு போனாலும்; காவிரியாறு நீர் வற்றாமல் மேற்கில் உள்ள குடகு மலையிடத்தில் பிறந்து கிழக்குக் கடலில் பாயும். அதன் நீர் கழனிகளில் நிறைந்து பொன்னைக் குவித்துக் கொண்டிருக்கும். இதனை,

“வசையில்புகழ் வயங்கு வெண்மீன்

திசைதிரிந்து தெற்கு ஏகினும்”(238)

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனது திருவோலக்கம் இரவலர், சுற்றத்தோடு அமர்ந்திருக்கும் சிறப்புப் பெற்றது. இரவலர் குடும்பப் பெண்கள் குற்றமில்லாத கற்பினையுடையவர்கள். இவர்கள் பட்டாலியன்ற ஆடைகளும் வளைந்த மூங்கில் போலும் தோள்களும் உடையவர்களென்பதனை,

“வணரிருங் கதுப்பின் வாங்கமை மென்றோள்

வசையின் மகளிர் வயங்கிழை யணிய”(239)

என்ற அடிகள் மெய்ப்பிக்கின்றன.

களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் குற்றமில்லாத செல்வத்தையுடையவன் என்பதனை,

“வசையில் செல்வ வான வரம்ப”(240)

என்ற அடி விளக்குகிறது.

பரணர், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவனை, குற்றமில்லாத நெடுந்தகையாகிய உன்னைக் காண வந்தேன் என்று கூறியதனை,

“வசையில் நெடுந்தகை காண்குவந் திசினே”(241)

என்ற அடி உணர்த்துகிறது.

தொண்டைமான் இளந்திரையன், மூவேந்தரைவிட உயர்ந்தவன்.

இவன் வலம்புரிச் சங்கையொத்த குற்றமற்ற தலைமையையும் உடையவன் என்பதனை,

"வலம்புரி யன்ன வசைநீங்கு சிறப்பின்"(242)

என்ற அடி சித்தரிக்கின்றது.

நன்னன் உலகத்தை விழுங்கிய பேரிருளை அகற்றித் தனது பேரொளியால் பகல் பொழுதை உண்டாக்கித் தோன்றும் ஞாயிற்றை ஒத்தவன். அவன் குற்றமற்ற தலைமைத் தன்மையையுடையவன் என்பதனை,

"ஞாயிறு அன்ன அவன் வசையில் சிறப்பும்"(243)

என்ற அடி குறித்து நிற்கிறது.

### 1.2.3.18.1 பிற பொருள்களில் வசை

வசை என்னும் சொல் பழிப்பு என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது. அந்துவன்கீரன் என்னும் மன்னன் பொருளீட்டலில் மிகுந்த நாட்டமுடையவன். அதனை மாற்றக் கருதிய காவிட்டனார் என்னும் புலவர், முடியுடை வேந்தராயினும் இறுதியில் சுடுகாட்டையடைவர். இவ்வுலகில் ஒருவன் செய்த பழியும் நிலைபெறும். புகழும் நிலைபெறும். அதனால் பழி நீக்கி புகழ் நிறுவுதல் சான்றோர் செயல் என்று கூறியதை,

"வசையு நிற்கும் மிசையு நிற்கும்
அதனால் வசைநீக்கி யிசை வேண்டியும்"(244)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

தற்போது வசை என்னும் சொல், திட்டுதல், பழித்தல் என்னும் பொருள்களில் மக்களால் கையாளப்படுகிறது.

### 1.2.3.19 வடு

வடு என்னும் சொல்லிற்கு "இளங்காய், குற்றம், செம்பு, தழும்பு, பிரமசாரி, மச்சம், மருதயாழ்த்திறம், வசை, வடுவென்னேவல், வண்டு, வாலிபன், வாள், மாம்பிஞ்சு, உடல், உளியால் செதுக்கின உரு, பழி, கருமணல்"(245) என்னும் பொருள்கள் உண்டு.

கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றும் குற்றமற்ற சிறப்பினையுடையவை. இம்மூன்றும் பாட்டுடைத் தலைவனைப் பாடும்போது கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வரும் என்பதனைப் புறத்திணையியலிலுள்ள,

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"(246)

என்ற நூற்பா விளக்குகிறது.

தலைவி குற்றமற்ற சிறப்பினையுடைய கற்பை உடையவள் என்பதனை,

"வடுவறு சிறப்பின் கற்பின் திரியாமை"(247)

என்ற கற்பியல் நூற்பா விளக்கும்.

கலித்தொகையில் தோழி, தலைவனிடம் குற்றம் நீங்குகின்ற வார்த்தையினையுடையாய்! என்று கூறுவதை,

"வடுநீங்கு கிளவியாய் வலிப்பென்"(248)

என்ற அடி விளக்குகின்றது.

பட்டினப்பாலை வணிகருடைய சிறப்பைக் கூறுமிடத்து, வணிகர்கள் நடுவுநிலையோடு நின்று தம் குடிக்குக் குற்றம் விளையும் என்று அஞ்சி உண்மையே பேசி, தம்முடைய பொருள்களையும் பிறருடைய பொருள்களையும் ஒரே தன்மையனவாகக் கருதி விலை பகர்வர் என்பதனை,

"நடுவுநின்ற நன்னெஞ்சினோர்
வடுவஞ்சி வாய்மொழிந்து
தமவும் பிறவு மொப்ப நாடி"(249)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

பரிபாடல் திருமாலின் தன்மையைக் கூறுமிடத்து உயர்ந்தோர் குற்றமில்லாத கோட்பாடுகளைக் கொண்டவர். அவர் ஆராய்ந்த அழிவற்ற மறைகளுள் அவற்றின் நடுவான, உட்பொருளாக அமைந்து விளங்குபவர். இதனை,

"வடுவில் கொள்கையின் உயர்ந்தோர் ஆய்ந்த
கெடுவில் கேள்வியுள் நடுவா குதலும்"(250)

என்ற அடிகள் விளக்குகின்றன.

மதுரை குமரனார், ஈர்ந்தூர் கிழான் தோயன் மாறனைப் புகழ்ந்து கூறுகையில் இரப்போர்க்கு இல்லையெனச் சொல்லான். போரின்கண் படைக்கலங்கள் உடம்பில் படுதலால் பெற்ற விழுப்புண்ணுக்கு அத்திமரப் பால் மருந்தாக அமையும். மாறனின் உடம்பானது வாள் வாய்ப்பட்ட

அத்திமர அடிப்பகுதி போல் வடுக்கள் பெற்று இருந்தது. வடுக்கள் உடம்பில் நிறைந்திருந்தாலும் அவன் குற்றமற்ற ஆண்மை நிரம்பிய வீரம் பெற்றவன் என்று கூறுகிறார். இதனை,

"மருந்துகொண் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்று வடிந்த யாக்கையன்"(251)

என்ற அடிகள் விளக்குகின்றன. இவ்வடிகளில் வடு என்ற சொல் தழும்பு குற்றம் என்ற இரு பொருள்களில் இரண்டிடத்தில் வந்துள்ளது.

நல்லியக்கோடன் குற்றமின்றி விளங்கிய பழியில்லாது வாய்த்த வாளினையுடைய மிக்க புலிபோலும் வில்லினை உடைய ஓவியர் குடியில் தோன்றியவன். இதனை,

"மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்"(252)

என்ற அடி விளக்குகிறது.

### பிற பொருள்களில் வடு

சிறுபாணாற்றுப்படையில் 'வடு' என்ற இச்சொல் உளியால் செதுக்கின உரு என்ற பொருளில் வந்துள்ளதை,

"பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி
உருவ வான்மதி ஊர்கொண் டாங்குக்
கூருளி பொருத வடுவாழ் நோன்குறட்டு
ஆரஞ் சூழ்ந்த அயில்வாய் நேமியொடு"(253)

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன.

வடு என்னும் சொல் தற்பொழுது ‘தழும்பு’ என்னும் பொருளில் கையாளப்படுகிறது.

### 1.2.3.20 வேய்வை

இச்சொல் தொல்காப்பியத்தில் இடம்பெறவில்லை. சங்க இலக்கியத்தில் இரு இடங்களில் மட்டுமே இச்சொல் பதிவு பெற்றுள்ளது.

சேரமான் கடலோட்டிய வேல்கெழு குட்டுவனைப் பொருநன் ஒருவன் சென்றுகண்டு அவனிடம் குற்றமற்ற தடாரி என்னும் கருவியை இசைத்து மகிழ்வித்து அவனிடம் பரிசில் பெற விரும்பியதை,

“வேய்வை காணா விருந்திற் போர்வை
அரிக்குரற் றடாரி யுருப்ப வொற்றிப்
பாடி வந்திசிற் பெரும . . . . . . . . .”(254)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

குற்றமற்ற யாழின் சிறப்பினை,

“ஆய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்”(255)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

நரம்புக் கருவிகளுள் ஏற்படும் பிசிரைக் குற்றம் என்றழைப்பது அக்கால மரபு. இதற்கு **வேய்வை** என்ற சொல் பயன்பட்டுள்ளது. தற்போது இச்சொல் வழக்கிலில்லை.

## 1.3 தண்டனை - வரையறை

தண்டம் என்பதன் அடியாகத் தோன்றியது தண்டனை. ஒறுத்தல்

என்பதற்கு "தண்டித்தல், கடிதல்"[256] என்னும் பொருள்களும். "தண்டித்தல், கடிதல், இகழ்தல், அழித்தல், துன்புறுத்தல், நீக்கல், குறைத்தல், நோய் செய்தல், ஒடுக்குதல்"[257] என்னும் பொருள்களும் உண்டு.

சங்க இலக்கியங்களில் ஒறுத்தல் என்னும் சொல்லே கையாளப் பெற்றுள்ளது. தற்போது இச்சொல் அதே பொருளில் 'தண்டனை' என்னும் சொல்லால் வழங்கப்படுகிறது.

குற்றம் நிகழ்ந்ததை உறுதி செய்தபின் அதற்கேற்றபடி தண்டிப்பர். தண்டிப்பது என்பதுதான் தண்டனை. இதனை, "வழக்குகளை ஆராய்ந்த நீதிபதிகள் குற்றங்களுக்குத் தகுந்தபடி தண்டித்தலுமுண்டு. தண்டித்தல் தான் தண்டனை எனப்படும்"[258] என்னும் வரிகள் உணர்த்தும்.

தண்டனை என்பது குற்றம் செய்யாதவர்களுக்கு நன்மை செய்வதாக இருத்தல் நலம் பயக்கும். இது குற்றத்தின் தன்மைக்கேற்ப மாறுபடும். தண்டனை என்பது "தண்டம், மானக்கேடு, வேதனைப்பாடு, சிறைப்பு, வேலை நீக்கம், கொலை"[259] என்னும் பல நிலைகளில் அமையும்.

குற்றச் சட்டத்தின் கீழ் தண்டனை என்பது முக்கியக் கூறாகும். தண்டனை என்பது தனிமனிதன் தன்னைத் தாக்கியவனைத் திரும்ப அடிப்பது அல்ல, அரசு தண்டனையைக் குற்றவாளிக்கு முறைப்படி வழங்க வேண்டும். இதனை, "குற்றம் செய்தவர்கள் உடல் துன்பத்தையோ அல்லது பொருள் நட்டத்தையோ அல்லது சுதந்திரமற்ற வாழ்க்கையையோ அனுபவிப்பது தான் தண்டனையாகும். மேற்சொன்ன தண்டனை வகைகள் அரசியல் அங்கீகாரத்தோடு அடைந்தால்தான் தண்டனையாகும்"[260] என்பதிலிருந்து அறிய முடிகிறது.

இவற்றுள் உடல் துன்பம் என்பது சவுக்கடி கொடுத்தலையும், பொருள் நட்டம் என்பது அபராதத்தையும், (Fine), சுதந்திரமற்ற வாழ்க்கை என்பது சிறை (Prison) வாழ்க்கையையும் குறிப்பிடுகின்றன.

தற்காப்புக்காக ஒருவன் மற்றவனுக்கு விளைவிக்கும் தீங்கு தண்டனையாகாது. அறநூல் நீதிமன்றத்தில் விசாரணை செய்து அளிக்கப்படுவேதே சிறந்த தண்டனையாகும். இதனை, "குற்றச் செயல்களை அரசு கண்டனம் செய்தால் மட்டும் போதாது. கண்டனத்திற்குள்ளான காரியங்களைச் செய்வோர் தண்டனைக்கு ஆளாவார்கள் என்று சட்டம் இருந்தால் தான் தீய செயல்களைத் தடுப்பது இயலும். தண்டனை இல்லாத வெறும் கண்டனத்தால் யாதொரு பயனும் இல்லை. ஆதலால் குற்றம் இழைப்பவர்களை அரசு துன்பத்திற்கு உள்ளாக்குகிறது. குற்றவாளிகளை அரசு துன்பமுறும்படி செய்வது ஒறுத்தல் அல்லது தண்டனை அளித்தல்"(261) என்று மா.சண்முகசுப்பிரமணியம் கூறுகிறார்.

தண்டனை வழங்குவதற்கு முன் குற்றம் செய்யப்பட்ட சூழலும், குற்றமனத்துடன் அக்குற்றம் செய்யப்பட்டதா, குற்றவாளிகளின் நிலை என்ன என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். குற்ற மனமும் குற்றச் செயலும் இணைந்திருந்தால் அது குற்றமாகக் கருதப்பட வேண்டும்.

ஒருவரது செயலைக் குற்றச் செயல் என்று முடிவு செய்வதற்கு அவரது மனநிலையே முக்கியப் பங்கு வகிக்கின்றது. குற்றமனமில்லாத செயல் குற்றம் எனக் கொள்ளப்படுவதில்லை. மனமே குற்றத்திற்கு முக்கியக் காரணமாகக் கருதப்படுகிறது.

### 1.3.1 தண்டனையின் வகைகள்

குற்றங்களுக்குரிய தண்டனைகள் குற்றத்தின் தன்மைக்கேற்ப வழங்கப்படும். இந்திய தண்டனைச் சட்டத்தில் ஐந்து வகையான தண்டனைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அவை,

1. மரண தண்டனை
2. ஆயுள் தண்டனை
3. சிறைத் தண்டனை (இது கடுங்காவல், வெறுங்காவல்)
4. சொத்துப் பறிமுதல்
5. அபராதம் அல்லது பணத் தண்டம் என்பன"[(262)]

தண்டனையின் வகைகளைக் 'குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல்' என்னும் நூல், "1.மரண தண்டனை, 2. ஆயுள் தண்டனை, 3.(சட்டத்தால் நீக்கப்பட்டது), 4. இரண்டு வகைப்பட்ட சிறைக்காவல் (i) கடுங்காவல், (Rigorous) (கடுமையான உழைப்புடன் கூடியது) (ii) வெறுங்காவல் (Simple imprisonment), 5. சொத்துக்களைப் பறிமுதல் செய்தல் 6. அபராதம்"[(263)] முதலானவற்றைக் குறிப்பிடுகிறது. இவற்றுள் முன்னய நான்கும் உடல் தொடர்பானது. பின்னைய இரண்டும் சொத்து தொடர்பானது. சங்ககால மக்களும் இன்றுள்ளது போல் அக்காலத்திலேயே தண்டனை முறையைப் பின்பற்றியுள்ளனர்.

### 1.3.2 தண்டனையின் நோக்கம்

பழி வாங்குவது என்பது மட்டும் தண்டனையின் நோக்கமன்று. சமுதாயம் நன்முறையில் இயங்க வேண்டுமெனில் மக்கள் குற்றம் செய்பவர்களாக இருத்தல் கூடாது. குற்றங்கள் மேலும் பெருகாமல் தடுப்பதற்கு, அச்சுறுத்துவதற்கு, பழி வாங்குவதற்கு, திருத்துவதற்குத்

தண்டனைகள் அளிக்கப் பெற்றன. இதனை, "1.அச்சுறுத்தும் கோட்பாடு, 2. பழி வாங்கும் கோட்பாடு, 3. தடுப்புக் கோட்பாடு, 4.சீர்திருத்தல் கோட்பாடு"(264) என்பவை உணர்த்தும்.

### 1.3.3 தண்டனை என்ற பொருள் தரும் சொல்

சங்க இலக்கியங்களில் தண்டனை என்ற பொருள் தரும் ஒறுத்தல் என்ற சொல்லாட்சி சிலவிடங்களில் பயின்று வந்துள்ளது. தலைவன் தன் மனங்கவர்ந்த காதலியைக் கண்டு கூடி மகிழும் விருப்பத்துடன் வந்து, குறித்த இடத்திலே அவளை அடையப் பெறாதவனாகிச் சோர்வுற்றுத் திரும்புகின்றான். அந்நிலையில் தன் நெஞ்சத்தைப் பார்த்து நெஞ்சமே தலைவியை அடையப் பெறாத காலத்து உன்னை வருத்தி வன்சொல் கூறும் நெஞ்சமே நீ தலைவியை நினையாது இருக்கமாட்டாய் . அவளை நினைக்கக் கூடாது என்று தடுத்து நிறுத்தினாலும் நீ எம்முடன் சேர்ந்து இருக்கமாட்டாய். நெஞ்சமே நீயும் நானும் உறவுடையவர்கள் அல்லவா. நம் உறவைக் கருதியாயினும் நட்பினரைப் போலவே எனக்குத் துணை நின்று உதவுவாயாக என்று களவு ஒழுக்கத்தில் தலைவியைக் காண இயலாத தலைவன் வேறுபட்டு நிற்கின்ற தன் நெஞ்சத்தைத் தண்டித்தும் நட்பு கொண்டும் முரண்பட்டு, கூற்று நிகழ்த்துகிறான். இதனை,

"ஒறுப்ப ஓவலை நிறுப்ப நில்லலை
புணர்ந்தோர் போலப் போற்றுமதி நினக்கு யான்
. . . .  . . . .    . . . . .  . . . .
அவ்வரி அல்குல் அணையாக் காலே"(265)

என்ற பாடல் விளக்குகிறது.

கலித்தொகையில் கைக்கிளைப் பாடல் ஒன்றில் காமம் சாலா இளமையோளிடம் மனதைப் பறி கொடுத்த தலைவன் தனது எண்ணங்களைப் பலவாறு அவளிடம் குறிப்பால் சுட்டியும் புரிந்து கொள்ளாத அவளை நோக்கி இவ்வாறு அழகுமிக்க உன்னை மேலும் ஒப்பனை செய்து அனுப்பிய உன் சுற்றத்தினர் தவறுயுடையவர்கள். நான் ஒறுத்துக் கூற வேண்டும் எனில் உன்னை அல்ல உன் சுற்றத்தினரைத் தான் தண்டிக்க வேண்டும் (ஒறுத்தல்) என்று கூறுகிறான். இதனை,

"ஒறுப்பின்யான் ஒறுப்பது நுமரையான் மற்றிந்நோய்
பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்"(266)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

குறுந்தொகையில் களவொழுக்கம் மேற்கொண்ட தலைவியிடம் தோழி வரைவு மலிந்தமையைக் கூறுமிடத்து விட்டுப் பிரியாத தாயர், வைது ஒறுக்காமையும், களவொழுக்கம் கொண்ட தலைவனுக்கு மணம் செய்தலை மறுக்காமையும், உறங்குமாறு கடுஞ்சொற்கள் சொல்லாமையும் இருத்தலால் மணந்து கொள்வான் என்ற இனிய செய்தி கேட்டு இவ்வூரார் இன்புறுவராக என்று கூறுகிறாள். இதனை,

"ஒறுப்ப ஓவலர் மறுப்பத் தேறலர்
தமியர் உறங்கும் கௌவை இன்றாய்
இனியது கேட்டுஇன் புறுகஇவ் வூரே"(267)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

புறநானூற்றில் சோழன் நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னிக்கு ஊன்பொதி பசுங்குடையார் அறிவுரை கூறுமிடத்து உன்னை வழிபடுவோரை நீ புரிந்து கொள்ள வேண்டும். பிறருடைய பழிகளை

(குற்றம்) கூறுவார் தம் சொற்களின் உண்மைத் தன்மையை ஆராய்ந்து தெரிந்து கொள்ள வேண்டும். நீ மனதினால் உண்மையாக ஆராய்ந்து தெரிந்து கொண்ட குற்றத்தைக் காணின் நீதிநூற்களில் சொல்லப்பட்ட தன்மைக்கேற்ப அக்குற்றத்திற்கேற்ற தண்டத்தை வழங்குவாயாக. தாம் செய்த குற்றத்தினை உணர்ந்து நின் பாதத்தை அடைந்து மன்னிப்பு வேண்டின் அவருக்குக் கருணை புரிந்து தண்டத்தைக் குறைப்பாயாக என்று கூறுகிறார். இதனை,

"வழிபடு வோரை வல்லறிதீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீ மெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி
வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற்
றண்டமுந் தணிதிநீ பண்டையிற் பெரிதே"(268)

என்ற அடிகள் சிறப்பிக்கின்றன.

தற்போது ஒறுத்தல் என்ற சொல் வழக்கொழிந்து தண்டனை என்ற சொல் மக்களிடம் பயின்று வருகின்றது.

## 1.4 தொகுப்புரை

- குற்றம் என்ற சொல்லிற்கு வரையறை கூறப்பட்டது. அறிஞர் பெருமக்களின் கூற்றுகளும், களஞ்சியங்களும் குற்றம் என்ற சொல்லின் பொருளை வரையறுக்கின்றன.
- குற்றத்தின் வகைகளும் அவற்றின் விளக்கங்களும் சுட்டப்பெற்றுள்ளன. அக்கால, இக்கால குற்ற வகைகள் பிரித்துக் கூறப் பெற்றுள்ளன.

❄ குற்றம் என்ற பொருள் தரும் அரலை, ஆசு, கசடு, கறை, செயிர், தா, தீது, துகள், நவை, பழி, பழுது, புகர், புரை, போக்கு, மறு, மாசு, மை, வசை, வடு, வேய்வை முதலான சொற்கள் சங்க இலக்கியங்களில் பதிவு பெற்றுள்ளன.

❄ அரலை என்ற சொல் குற்றம் என்ற பொருளில் அக்காலத்தில் வழங்கப் பெற்றுள்ளது. தற்போது இச்சொல் வழக்கிலில்லை.

❄ ஆசு என்பது ஒருவரின், ஒன்றின் இயல்பைக் குறிப்பிடும் பொழுது குற்றம் என்ற பொருளில் கையாளப் பெற்றுள்ளது. இச்சொல் தற்போது வழக்கிலில்லை.

❄ கசடு, கறை என்னும் சொற்கள் தற்போது குற்றம் என்ற பொருளைக் குறிப்பிடாமல் அழுக்கு என்ற பொருளைச் சுட்டுகின்றன.

❄ செயிர் என்னும் சொல் குற்றம், சினம் என்னும் இருபொருள்களில் அக்காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. தற்போது இச்சொல் வழக்கொழிந்து போய்விட்டது.

❄ தா என்பது அக்காலத்தில் குற்றத்தைக் குறிக்கச் சுட்டப்பெற்றது. தற்போது இது கொடு என்னும் பொருளில் பயன்பாட்டிலுள்ளது.

❄ தீது என்னும் சொல் குற்றம் என்ற பொருளில் அக்காலத்தில் குறிக்கப்பட்டது. தற்போது தீமை என்னும் பொருளைச் சுட்டுகிறது.

❄ துகள் என்னும் சொல் அக்காலத்தில் குற்றத்தையும், தற்காலத்தில் புழுதியையும் குறிப்பிடப் பயன்பட்டது.

❊ நவை என்னும் சொல் அக்காலத்தில் குற்றத்தைக் குறித்தது. தற்போது இச்சொல் வழக்கிலில்லை.

❊ பழி என்னும் சொல் தற்போது விரோதம், வைராக்கியம் என்னும் பொருள்களிலும் அக்காலத்தில் குற்றம் என்ற பொருளிலும் பயன்படுத்தப்பட்டு வந்தது.

❊ பழுது என்ற சொல் வறுமை என்ற பொருளில் அக்காலத்தில் பயன்படுத்தப்பட்டு வந்தது. தற்போது வீணாகிக் கிடக்கும் பொருட்களைக் குறிக்க இச்சொல் பயன்படுகிறது.

❊ புகர் என்னும் சொல் குற்றம் என்ற பொருளுடன் பல பொருள்களைத் தருகிறது. தற்போது இச்சொல் பயன்பாட்டிலில்லை.

❊ புரை என்பது குற்றம் என்பதுடன் உயர்வு என்ற பொருளையும் அக்காலத்தில் குறித்தது. மனித நடவடிக்கைகளில் ஒன்றாகப் புரையேறுதல் என்பது கருதப்படுகிறது. தற்போது குற்றம் என்பதனைக் குறிக்காது; புரையேறுதலைக் குறிக்கப் புரை என்னும் சொல் பயன்பட்டு வருகிறது.

❊ போக்கு என்பது குற்றம், இயக்கம் என்னும் பொருள்களில் அக்காலத்தில் பயன்பட்டது. தற்போது குற்றம் என்ற பொருளில் வழக்கிலில்லை.

❊ மறு என்ற சொல் குற்றம் என்ற பொருளை அக்காலத்தில் சுட்டியது. தற்போது இது மச்சம், மறுத்தல் அல்லது ஆட்சேபித்தல் என்னும் பொருள்களுடன் பயன்பாட்டிலுள்ளது.

❄ மாசு என்பது குற்றம் என்னும் பொருளில் அக்காலத்தில் பயன்பட்டது. தற்போது அழுக்கு என்னும் பொருளில் கையாளப் பெற்று வருகிறது.

❄ மை என்னும் சொல் குற்றம் என்ற பொருளில் அக்காலத்தில் சுட்டப் பெற்றது. தற்போது இச்சொல் பெண்கள் கண்களுக்குத் தீட்டுவது (அஞ்சனம்) வண்டிச் சக்கரத்திற்குத் தடவுவது என்னும் இருபொருள்களில் பயன்பாட்டிலுள்ளது.

❄ அக்காலத்தில் வசை என்பது குற்றம், பழிப்பு என்னும் இரு பொருள்களைக் குறித்தது. தற்போது இது திட்டுதல் என்னும் பொருளில் உபயோகப்பட்டு வருகிறது.

❄ வடு என்னும் சொல் குற்றம், தழும்பு என்ற இரு பொருள்களில் அக்காலத்தில் கையாளப்பட்டது. தற்போது 'தழும்பு' என்னும் பொருளில் பயன்படுகிறது.

❄ வேய்வை என்பதற்கு நரம்புக் கருவிகளுள் ஏற்படும் குற்றம் என்பது அக்காலத்தில் சுட்டப் பெற்றது. தற்போது இச்சொல் வழக்கில் இல்லை.

❄ சங்க இலக்கியங்களில் தலைவன் தலைவி போன்றோரின் பண்பு மற்றும் புகழைச் சுட்ட 'குற்றமற்றவர்' என்ற சொல்லாட்சி பல இடங்களில் பயின்று வந்துள்ளது. ஒரு பொருளைச் சிறப்பிப்பதற்கும் 'குற்றமற்ற' என்ற அடை பயன்படுத்தப் பெற்றுள்ளது.

❄ தண்டனை என்பதற்கு அறிஞர் பெருமக்களது வரையறை கூறப்பட்டது. தண்டனையின் வகைகள் வரையறுக்கப்பட்டுள்ளன.

❄ அச்சுறுத்துவது, பழிவாங்குவது, தடுப்பது, சீர்திருத்துவது முதலானவை தண்டனையின் நோக்கங்களாக வெளிப்படுகின்றன.

❄ சங்க காலத்தில் தண்டனை என்ற பொருள் தரும் ஒறுத்தல் என்ற சொல்லாட்சி நான்கு இடங்களில் பயின்று வந்துள்ளது. தற்போது ஒறுத்தல் என்ற சொல்லாட்சி வழக்கிலில்லை. தண்டனை என்ற சொல்லே தற்போது வழங்கப்பட்டு வருகிறது.

## சான்றெண் விளக்கம்

1. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி ஏழு, ப.805.
2. பி.ஆர்.ஜெயராஜன், எம்.எல். குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், ப.3.
3. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி ஏழு, ப.805.
4. ந.சுப்பிரமணியன், சங்க கால வாழ்வியல், ப.217.
5. பி.ஆர்.ஜெயராஜன், எம்.எல். குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், ப.3.
6. மேலது, ப.4.
7. மேலது, ப.4.
8. ஆர்.எம்.கிருஷ்ணராஜு, எம்.எல் சட்டம் என்ன சொல்லுகிறது, ப.8.
9. "Some against law" Oxford Advanced Learner's Dictionary of current English, --p.203.
10. "Offence for which is severe punishment by law" I.bid, p.203.
11. பொன்.பரமகுரு, தண்டனை இயல், ப.33.
12. மு.முத்துவேலு, சங்கத்தமிழ் கூறும் சட்ட நெறி, ப.70.
13. மேலது, ப.70.
14. பி.ஆர்.ஜெயராஜன், எம்.எல். குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், பக்.6-7.
15. மேலது, ப.7.

16. கலித். 39: 24.

17. கலித். 43: 18-19.

18. கலித். 135: 8.

19. இரா.சாரங்கபாணி, சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி (1), ப.62.

20. புறநா. 381: 14.

21. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.72.

22. குறிஞ்சி 15-18.

23. குறுந். 108-3

24. மேலது, 277: 1-3.

25. சிறுபா. 72-75.

26. புறநா. 353: 1-2.

27. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.252.

28. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 197.

29. இரா.சாரங்கபாணி, சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தொகுதி(1), ப.5.

30. பதி (V) 4:6.

31. பொருந. 69-70.

32. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 246.

33. இரா.சாரங்கபாணி, சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம், தொகுதி (II), ப.225.

34. பரி. வையை 10: 130-131.

35. மேலது, செவ். 14: 18-19.

36. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.488.

37. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 38.

38. தொல். நூற்பா.1147.

39. மேலது, 1059: 2.

40. அகநா.66 : 3-4.

41. மேலது, 75: 9-11.

42. மேலது, 155 : 12-15.

43. மேலது, 205 : 1-3.

44. மேலது, 349 : 3-4.

45. மேலது, 367 : 13-16.

46. ஐங்குறு. 419 : 1-3.

47. கலித். 20 : 1-2.

48. மேலது, 102 : 17-20.

49. மேலது, 105 : 24-27.

50. மேலது, 105 : 35-38.

51. திருமுருக. - 19.

52. நற் 72 : 3.

53. மேலது, 214 : 7-9.

54. மேலது, 269 : 4-5.

55. மேலது, 364 : 11-12.

56. பட்டின. 277 - 282.

57. பதி (IV) 7 : 3-5.

58. மேலது, (VI) I : 25-28.

59. பரி.திரு.வாழ்.1 : 26-27.

60. பரி.திரு.வாழ்.4. : 9 - 10.

61. புறநா. 3 : 5 - 6.

62. மேலது, 210 : 5.

63. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.531.

64. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 416.

65. மு.ப.அருணாசலம், சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தொகுதி-(III), ப.280

66. தொல், 827.

67. மேலது, 929.

68. மேலது, 927.

69. மேலது, 1020.

70. மேலது, 1037.

71. மேலது, 1059.

72. மேலது, 1187.

73. அகநா. 212 : 1.

74. பதி. (II) 6: 14 - 15.

75. மதுரைக் 445, 446.

76. திருமுருக. 89 - 90.

77. மேலது, 164 - 165.

78. மேலது, 175 - 176.

79. அகநா. 37 : 3-4.

80. நற் 271 : 7 - 12.

81. பதி (IV) 1 : 31 - 36.

82. புறநா. 152 : 28 - 29.

83. மேலது, 373 : 35 - 36.

84. நற். 261 : 5.

85. மதுரைக் 701 - 705.

86. பதி. (IV) 8 : 13 - 15.

87. அகநா. கட. வாழ். 15-16.

88. கலித். 105 : 7-8, 22.

89. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.549.

90. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 435.

91. கலித். 26 : 5-9.

92. மேலது, 73 : 7.

93. மேலது, 81 : 33-35.

94. மேலது, 88 : 15-17.

95. மேலது, 91 : 6-8.

96. மேலது, 91 : 16-17.

97. மேலது, 105 : 5-6.

98. குறுந். 106 : 1-4.

99. திருமுருக. 70 - 72.

100. நற். கட.வாழ். 4-7.

101. நற். 201 : 5-6.

102. நெடுநல். 87-90.

103. பதி. (II) 7: 10 - 12.

104. பரி.திரு.வாழ். 1 : 37-40.

105. புறநா. 93 : 1-7.

106. மேலது, 214 : 6-7.

107. கலித். 134 : 24-27.

108. மேலது, 142 : 47-50.

109. புறநா.47 : 6-7.

110. புறநா.192 : 1-2.

111. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.553.

112. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 437.

113. தொல். 1022.

114. மு.ப.அருணாசலம், சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், தொகுதி-(III), ப.339.

115. அகநா. 136 : 4 - 5.

116. மேலது, 265 : 14 - 17.

117. மேலது, 288 : 15 - 17.

118. கலித். 64 : 15.

119. மேலது, 94 : 42-43.

120. திருமுருக. 25-27.

121. நெடுநல். 125 - 128.

122. புறநா. 221 : 6.

123. மேலது, 224 : 5-6.

124. பெரும். 238-241.

125. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.597.

126. கலித். 12 : 1 - 4.

127. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.656.

128. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 602.

129. தொல். 1057.

130. மேலது, 1093.

131. மேலது, 1161.

132. மேலது, 1164.

133. மேலது, 1367.

134. மேலது, 1383.

135. மேலது, 1601.

136. அகநா. 11 : 12 - 15.

137. கலித். 104 : 7 - 8.

138. குறுந். 368 : 2 - 4.

139. பதி. (II) 1 : 17 - 20.

140. மேலது, (VIII) 1 : 9-12.

141. பொருந. 28.

142. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.656.

143. பொருந. 148-151.

144. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.656.

145. தொல். 82.

146. மேலது, 369.

147. கலித். 12 : 15-17.

148. மேலது, 135 : 12-14.

149. திருமுருக. 210 - 211.

150. பதி. (IX) 9 : 12-16.

151. பரி.திரு.வாழ். 1: 44-48.

152. மதுரைக். 764 - 767.

153. பதி. (IV) 4 : 5-7.

154. மேலது, (VI) 3 : 18-19.

155. மேலது, (VIII) 1 : 20-21.

156 கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.690.

157. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப. 668.

158. தொல். 1027.

159. மேலது, 1053.

160. மேலது, 1057.

161. மேலது, 1060.

162. மேலது, 1394.

163. மேலது, 1599.

164. மேலது, 165, 785, 1092, 1218, 1371.

165. பதி. (VII) 10 : 12-13.

166. பதிற்.பதி (IX) 12-13.

167. பரி.வையை. 10 : 81-84..

168. புறநா. 42 : 5-6.

169. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.721.

170. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப.708.

171. பொருந. 85 - 87.

172. சிறுபா. 117-120.

173. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.749.

174. அறிஞர் குழு, நர்மதாவின் தமிழகராதி, ப.730.

175. தொல். 1021.

176. அகநா. 66 : 1-2.

177. கலித். 100 : 4-6.

178. குறுந். 247 : 1. 6-7.

179. சிறுபா. 121 - 122.

180. திருமுருக. 6.

181. மேலது. 60 - 61.

182. மேலது. 91-92.

183. மேலது. 147 - 148.

184. பதிற்.பதி (II) : 1.

185. பதிற்.பதி. (IX) : 16-17.

186. பரி.செவ்.5 : 42-47.

187. மேலது, 5 : 69-70.

188. மேலது, 19 : 90 - 92.

189. பொருந. 225 - 229.

190. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.753.

191. அகநா. 6 : 12-13.

192. மேலது, 16 : 3-5.

193. மேலது, 32 : 18-20.

194. மேலது, 114 : 12-15.

195. கலித். 24 : 6.

196. மேலது, 77 : 16 - 17.

197. மேலது, 103 : 77.

198. மேலது, 107. 31.

199. மேலது, 143 : 44 - 47.

200. குறிஞ்சிப். 15 - 18.

201. மேலது, 179 - 183.

202. சிறுபா. 156 - 159.

203. திருமுருக. 145 - 147.

204. நற்.15 : 6-7.

205. மேலது, 69 : 7-8.

206. பதி. (II) 10 : 25-28.

207. பதிற்.பதி. (VII) : 11-12.

208. பரி.திரு.வாழ். 2 : 31.

209. மேலது, 3:4 - 7, 10.

210. மேலது, 3:2.

211. மேலது, 3:22.

212. பரி.வையை 6 : 7.

213. மேலது, செவ் 8 : 127 - 130.

214. புறநா. 287: 10-12.

215. திருமுருக. 128, 138.

216. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.795.

217. தொல். 1063.

218. அகநா.136 : 1 - 2.

219. ஐங்குறு. 235 : 1 - 2.

220. மேலது, 474 : 1.

221. கலித். 62 : 14.

222. மேலது, 81 : 1 - 2.

223. மேலது, 85 : 4.

224. மேலது, 85 : 11.

225. மேலது, 142 : 41.

226. பட்டினப். 159 - 160.

227. பதி. (III) 2 : 8.

228. மேலது, (IV) 8 : 11.

229. பரி.திரு.வாழ். 1 : 3.

230. மேலது, 2 : 14.

231. மதுரைக் : 8-9.

232. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.808.

233. தொல் 1608.

234. மேலது, 1382.

235. மேலது, 1386.

236. கலித். 26 : 14.

237. நற்.106 : 4.

238. பட்டினப். 1 - 2.

239. பதி. (II) 2 : 22-23.

240. மேலது, (IV) 8 : 12.

241. மேலது, (V) 1 : 16.

242. பெரும். 35.

243. மலைபடு. 85.

244. புறநா. 359 : 10 -11.

245. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.811.

246. தொல். 1034.

247. மேலது, 1093.

248. கலித். 29 : 19.

249. பட்டினப். 207 - 209.

250. பரி.திரு.வாழ். 2 : 24 - 25.

251. புறநா. 180 : 5 - 6.

252. சிறுபா. 121.

253. மேலது, 250 - 253.

254. புறநா. 369 : 20 - 22.

255. பொருந. 16 - 17.

256. எஸ். ராஜம், பாட்டும் தொகையும், ப.57.

257. கழகப் புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.242.

258. புலவர் செந்துறை முத்து, தமிழ்நீதி, ப.36.

259. மேலது, ப.36.

260. பி.ஆர்.ஜெயராஜன், எம்.எல்., குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், ப.23.

261. மா.சண்முக சுப்பிரமணியம், குற்ற இயல் சட்டம், ப.140.

262. மு. முத்துவேலு, சங்கத்தமிழ் கூறும் சட்டநெறி, ப.73.

263. பி.ஆர்.ஜெயராஜன், எம்.எல்., குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், ப.195.

264. மேலது, ப.195.

265. அகநா. 342 : 1 - 2, 13.

266. கலித். 58 : 20 - 21.

267. குறுந். 34 : 1 - 3.

268. புறநா. 10 : 1 - 6.

2.1 முன்னுரை

2.2 அவை

2.2.1 அறங்கூறவையம்

2.2.2 நீதி வழங்குவோர்

2.2.3 அறங்கூறவையத்தின் உறுப்பினர் தேர்வு

2.2.4 அறங்கூறவையத்தின் இயல்பு

2.2.5 அவையோர் இயல்பு

2.2.6 அவையோருக்கு மதிப்புத் தருதல்

2.2.7 அவையத்தார் நீதி வழுவல்

2.2.8 அவையோர் பூசல் தீர்த்தல்

2.2.9 அவை தீர்க்கும் குடும்ப வழக்கு

2.2.10 நாளவை

2.2.11 நாளவையின் பெருமை

2.2.12 அவைக்களம்

2.2.13 நாண்மகிழிருக்கை

2.2.14 அவையகம்

2.3 ஊரவை

2.3.1 மன்றம்

2.3.1.1 மன்றங்களின் இருப்பிடம்

2.3.1.2 மன்றங்களில் பறவைகள்

2.3.1.3 மன்றத்தில் சண்டை

2.3.1.4 மன்றத்தில் நாட்டியம்

2.3.1.5 மன்றத்தில் குரவைக் கூத்து

2.3.1.6 மன்றத்தில் மடலேறுதல்

2.3.1.7 மன்றத்தை அழித்தல்

2.3.1.8 மன்றத்தில் ஏற்றைக் கொன்று தின்னல்

2.3.1.9 மன்றத்தில் மக்கள் கூடியிருந்த நிலை

2.3.1.10 மன்றில் கள்வர் கூடுதல்

2.3.1.11 பேய் எழு மன்றம்

2.3.1.12 மன்றம் செல்ல நாணுதல்

2.3.1.13 மன்றத்தில் பாணர் தங்குதல்

2.3.1.14 தெய்வம் தங்கியிருத்தல்

2.3.1.15 மன்றத்தில் குடும்ப வழக்கு

2.3.1.16 மன்றத்தை அடைந்த யானை

2.3.1.17 மன்றம் அமைதியுறல்

2.3.1.18 மன்றத்தில் கூகை குழறல்

2.3.1.19 மன்றம் பொலிவிழத்தல்

2.3.2 பொதியில்

2.3.2.1 பொதியிலை மெழுகுதல்

2.3.2.2 பொதியிலில் பேய் உறைதல்

2.3.2.3 பொதியிலில் சூதாடுதல்

2.3.2.4 பொதியிலில் மணம் முடித்தல்

2.3.2.5 பொதியிலில் போர்த்திட்டம் தீட்டுதல்

2.3.2.6 பாழடைந்த பொதியில்

2.3.3 அம்பலம்

2.4 தொகுப்புரை

## 2.1 முன்னுரை

நீதிமன்றங்கள் மக்களை நெறிப்படுத்தி நல்வழிப்படுத்திவரும் அமைப்பாகும். சங்க காலத்தில் செயல்பட்டு வந்தவை அறமன்ற அமைப்புக்களாதலால் அவை அறமன்றங்கள் எனக் குறிப்பிடப்படுகின்றன. சங்ககாலத்தில் மக்களின் தலைவனாகக் கருதப்பட்டவன் மன்னனாவான். அரசனே அனைத்து வகையான வழக்குகளையும் விசாரித்து நீதி வழங்கி வந்தான். அரசன் வழக்கு மன்றங்களிலிருந்து நீதி வழங்க இயலாதவிடத்து ஊரிலுள்ள வழக்கு விசாரணை அமைப்புக்கள் அரசனின் நெறிப்படுத்துதலின் கீழ் நீதி வழங்கி வந்தன. அரசன் நீதி வழங்கிய அமைப்புக்கள் அவை, அவையம், அவையகம், அவைக்களம், நாளவை என்று பல பெயர்களில் அழைக்கப்பெற்றன. உள்ளாட்சி அமைப்புக்கள் மன்றம், பொதியில், அம்பலம் என்று வழங்கின. அவை என்ற சொல்லாட்சி குறித்து விளக்குவதும், இவ்வவையின் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் முறை, அவர்களின் இயல்பு குறித்து ஆய்வதும், உள்ளாட்சி நீதி வழங்கும் அமைப்புக்களான மன்றம், பொதியில், அம்பலம் என்பவை பற்றியும், சங்ககால அறமன்றங்களாகச் செயல்பட்ட இவ்வறமன்றங்களின் செயல்பாடுகள் பற்றி விளக்குவதும் இவ்வியலின் நோக்கமாகும்.

## 2.2 அவை

அவை என்ற சொல்லைத் தொல்காப்பியம் "எட்டுவகை நுதலிய அவையத்தானும்"(1) என்ற அடியில் பயன்படுத்தியுள்ளது. தொல்காப்பியர் வாகைத்திணையின் துறைகளை விளக்குமிடத்து, எட்டுவகைச் சால்புகளும் நிறைந்தார் அவையத்தில் மதிக்கப்பெறும்

சிறப்பினைப் பெறுவர் என்ற பொருளில் அவை என்ற சொல்லைப் பயன்படுத்தி உள்ளது சுட்டத்தக்கது.

### 2.2.1 அறங்கூறவையம்

அறம் என்பது தர்மத்தையும் நீதியையும் குறிக்கின்றது. நீதி வழங்குமிடமாதலால் அறங்கூறவையம் என அழைக்கப்பட்டது. மன்னன் வீற்றிருந்து அறத்தை நிலைநிறுத்திய இடம் அறங்கூறு அவையம் என்றழைக்கப்பட்டது. இதனை, “நீதி வழங்கும் இடம் அறங்கூறு அவையம் எனப்பட்டது”(2) என்று ‘தமிழர் சால்பு’ குறிப்பிடுகின்றது. மேலும், “நாட்டின் தலைநகரின் இருந்த அவை அறங்கூறவையம் என்று அழைக்கப்பட்டதாகத் தெரிகின்றது.”(3) என்பர் மு.முத்துவேலு. இதன்மூலம் அறங்கூறவையமான நீதிமன்றத்தைப் பற்றி அறியமுடிகிறது.

### 2.2.2 நீதி வழங்குவோர்

சங்க காலத்தில் “ஒவ்வோர் ஊரிலும் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற பெரியோர் இருந்து ஊராட்சியைக் கவனித்து வந்தனர். நாட்டின் தலைநகரில் பெரிய நீதிமன்றம் இருந்தது. அஃது அறக்களம் என்றும் அறங்கூறு அவையம் என்றும் பெயர் பெற்றது”(4) என்பர். இந்த அறங்கூறவையத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் நீதி வழங்கினர். இதனை இன்றைய உயர்நீதிமன்றத்திற்கு இணையாகக் கருதக்கூடும்.

“சில வழக்குகளை மன்னனே விசாரித்து நீதி வழங்குவதுண்டு. இளைஞனான கரிகாலன் முதியவனைப் போல வேடம் பூண்டு நீதி வழங்கினான் என்று பொருநராற்றுப்படை பேசுகின்றது”(5) என்பர்.

இதனை,

"மிளையோர் வண்ட லயரவு முதியோ

ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவு"(6)

என்பதால் உணரலாம்.

### 2.2.3 அறங்கூறவையத்தின் உறுப்பினர் தேர்வு

அறங்கூறவையத்திற்கு உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கும் முறை பற்றிய குறிப்பு அகநானூற்றில் இடம் பெற்றுள்ளது. மக்களின் பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்க அக்காலத்தில் குடவோலை முறை கையாளப் பெற்றது. இதனை அகநானூறு **"குழிசி ஓலை"** என்கிறது. போட்டியில் கலந்து கொள்ளும் நபர்கள் (குடம் அல்லது பானையில்) ஓலையாலான வாக்குச் சீட்டுக்களைக் குழிசியில் இடுவர். பின்னர் முடிவை அறிவிப்பதற்காகக் கயிற்றினால் பிணிக்கப் பெற்ற குழிசியிலுள்ள இலச்சினையை, முத்திரையை ஆராய்ந்து கவனமாக அலுவலர்கள் நீக்குவர். ஆவண மாக்கள் என்பது அலுவலர்களைக் குறிக்கும். இதனைக்

"கயிறுபிணிக் குழிசிஓலை கொண்மார்

பொறிகண்டு அழிக்கும் ஆவண மாக்களின்"(7)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. சோழர் காலத்தில் ஊராட்சி மன்ற உறுப்பினரைத் தேர்ந்தெடுக்கக் குடவோலை முறை பயன்படுத்தப் பெற்றது.

### 2.2.4 அறங்கூறவையத்தின் இயல்பு

நல்லவர் கூடியிருப்பதும் கற்றோர் தாம் கற்ற அறிவினை நன்கு

எடுத்துரைத்தற்கு ஏற்றதுமாகிய அவை நன்னன் நாட்டில் விளங்கியது என்பதை,

"நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து"(8)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

வீரஞ்சென்ற சோழருடைய உறையூரிலிருந்து அறங்கூறவை அறப்பண்பு கெடாது நிலைத்திருந்ததை,

"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறங்கெடல் அறியாது ஆங்குச் சிறந்த"(9)

என்ற அடிகள் மூலம் உணர முடிகின்றது. இதனைப் போலவே சோழனின் அவைக்களத்தில் அறம் நிலைபெற்று விளங்கியதை,

"மறங்கெழு சோழர் உறந்தை அவையத்து
அறநின்று நிலையிற் றாகலி னதனால்"(10)

என்ற புறநானூற்று அடிகளும் விளக்குகின்றன. இதனால் நீதி வழங்கும் அறங்கூறவையத்தின் இயல்பையும் பண்பையும் நன்கு அறிய முடியும். இதனைப் போலவே அவை என்னும் நீதி வழங்கக் கூடிய இடம் பற்றிய குறிப்புக்கள் பல இடங்களில் இடம்பெற்றுள்ளன.

"பொற்பு விளங்கு புகழவை நிற்புகழ்ந்து ஏத்த"(11)

என்ற மதுரைக் காஞ்சி அடிகளில் பொலிவு விளங்குகின்ற புகழினையுடைய அறங்கூறவையத்தார் நெருங்கி பாண்டியன் நெடுஞ்செழியனின் அறத்தின் தன்மையைப் புகழ்ந்து வாழ்த்தியதை அறிய முடிகின்றது.

இசையினை எக்காலமும் கேட்கின்ற செல்வமிக்க அரசரவையில் அவர்கள் விரும்பிக் கேட்குமாறு பாணர் பண்ணிசைத்ததை

"இசைபெறு திருவின் ஏத்தவை ஏற்ப"(12)

என்ற அடி விளக்குகின்றது.

வழக்கு மாறுபட்டு வந்தோராகிய பகைமை முதிர்ந்தோர் தனது அரசவையிற் சென்று புகுங்காலத்து அவர்தம் மாறுபாட்டைப் போக்கும் படியாகக் கரிகாற் பெருவளத்தான் இருந்தான் என்பதை,

". . . .   . . . . . . . . .   முதியோ

ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவு"(13)

என்ற பொருநராற்றுப்படை அடிகள் வழி உணரமுடிகின்றது.

பெருமை பொருந்தின செல்வத்தையும் பெரிய பெயர்களையும் வலியையுடைய முயற்சியையும் வெற்றி முரசு முழங்கும் படையினையுமுடைய சேர, சோழ பாண்டியர் தம்மிற் பகைமை நீங்கிச் சேர்ந்து, செல்வக் குறைபாடின்றி அரசிருத்தற்குரிய அவையாக வீற்றிருந்தனர் என்ற குறிப்பை,

"பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாண்
முரசு முழங்கு தானை மூவருங் கூடி
யரசவை யிருந்த தோற்றம் போலப்"(14)

என்ற பொருநராற்றுப்படை அடிகள் தருகின்றன.

சோழரின் உறையூரில் அறம் பொருந்திய நல்லவை நிலை பெற்றிருந்ததை,

"தாரங் கண்ணி அடுபோர்ச் சோழர்

அறங்கெழு நல்லவை உறந்தை அன்ன"(15)

என்று கணக்காயனார் மகனார் நக்கீரனார் குறிப்பிடுவர். இதைப்போலவே,

"அவை புகழ் அரங்கின்மேல் ஆடுவாள் அணிநுதல்"(16)

"அவைப்படில்"(17)

"நல்லவை"(18)

என்று அவை பற்றிய குறிப்புக்களைக் கலித்தொகையும் பாடுகின்றது.

### 2.2.5 அவையோர் இயல்பு

அறங்கூறவையத்தார் தனக்கெனத் தனி மதிப்புடையவராகவும், பண்புள்ளவராகவும், நீதி தவறாதவராகவும் விளங்கினர். மதுரையிலிருந்த அறங்கூறு அவையத்தார் அச்சம், துன்பம், அவா ஆகியவற்றை நீக்கியவர்கள். ஒரு சாராரிடம் சினமும் மற்றொரு சாராரிடம் மகிழ்வும் காட்டாதவர். தம்மைத் துலாக்கோலைப் போல நடுவுநிலையிலே நிறுத்திக் கொண்டவர்கள். உயர்ந்த கொள்கை உடையவர்கள் என்பதை,

"அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோல் அன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை அறங்கூறு அவையமும்"(19)

என்ற அடிகள் விளக்குகின்றன.

சோழன் கரிகாற் பெருவளத்தான் அறத்தைத் தெளிவுறவுணர்ந்து

ஒழுக்க மிக்க அந்தணரது அவையத்து வேள்விக்குரிய முறையறிந்தவர் வழிகாட்டப் பல வேள்விகளைச் செய்து முடித்த பயனை நன்கறிந்த அறிவினையுடையவனாக இருந்தான் என்பதை,

"அறமறக் கண்ட நெறிமான் அவையத்து"[20]

என்ற புறநானூற்று அடி சுட்டுகின்றது.

அரசர் பொருந்திய அவையில் மேம்பட்டு விளங்கும் சிறப்பினை உடையவன் 'ஏறைக்கோன்' என,

"வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்"[21]

என்ற அடியின் வழி உணர்த்துகின்றார் குறமகள் இளவெயினி,

அரசருடைய அவைக்களத்தில் தன் உயர்ந்த புகழை வெளிப்படுத்தியவன் நம்பி நெடுஞ்செழியன் என்பதை,

"வேந்துடை யவையத் தோங்குபுகழ் தோற்றினன்"[22]

என்ற அடியில் பேரெயின் முறுவலார் விளக்குவர்.

### 2.2.6 அவையோருக்கு மதிப்புத் தருதல்

மக்களும் அவை உறுப்பினர்களுக்கு மதிப்பளித்தனர். கோப்பெரு நற்கிள்ளி மீது பெருவிருப்பம் கொண்ட நக்கண்ணையார், சான்றோர் வீற்றிருக்கும் அவைக்குச் சென்று மன்னனைத் தழுவினால் அவையோர் இகழ்வர் என்று கருதிச் செல்ல மறுப்பர். இதை,

"அடுதோள் முயங்கல் அவை நாணுவலே"[23]

என்ற அடி குறிப்பிடும்.

சங்க இலக்கியங்கள் நகர வாழ்க்கையையும், கிராம வாழ்க்கையையும் படம்பிடித்துக் காட்டுகின்றன. அவ்வகையில் நகரங்களில் நீதிமன்றங்கள் நிலைபெற்றிருக்கக் கூடும். அதனை, "நகரங்களில் இருந்த நீதிமன்றங்கள் அவையம் என்று வழங்கப்பட்டன"[24] எனக் கூறுவர் மு.முத்துவேலு. இதன்வழி அவையோருக்கு மதிப்புக் கொடுத்ததை அறிய முடிகின்றது.

### 2.2.7 அவையத்தார் நீதி வழுவல்

அறங்கூறவையத்தின் உறுப்பினர்களை மக்கள் கூடி நிறைந்த சபையில் பெரியோர்கள் குழிசியில் இட்ட ஓலை வழித் தேர்ந்தெடுப்பர். அரசன் அவர்களின் தலைமையாளனாகத் திகழ்வான். அவ்வறங்கூறவையத்தின் உறுப்பினர்கள் நீதியினின்றும் வழுவுமிடத்து அவ்வழு அரசனைச் சாரும். அந்நிலையை, அறநிலை கலங்காத அன்பினையுடைய அறங்கூறவையத்தில் அறத்தன்மையில்லாமல் ஒருவனை முறைகலங்கிக் கொடுங்கோல் செய்தவனாகுக என்று பூதப் பாண்டியன் வஞ்சினம் கூறி விளக்குவதை,

"அறனிலை திரியா அன்பின் அவையத்துத்
திறனி லொருவனை நாட்டி முறைதிரிந்து
மெலிகோல் செய்தே னாகுக"[25]

என்ற புறநானூற்று அடிகள் விளக்கிக் காட்டுகின்றன.

### 2.2.8 அவையோர் பூசல் தீர்த்தல்

மக்களின் குறைகளையும், வழக்குகளையும் தீர்த்து வைப்பது அவையத்தாரின் கடமையாக இருந்திருக்கின்றது. புறநானூறு,

"வான்றோய் நீள்குடை வயமான் சென்னி
சான்றோ ரிருந்த வவையத் துற்றோன்
ஆசா கென்னும் பூசல் போல"(26)

என்ற பாடலடிகளில் சான்றோர் கூடியிருக்கும் அவையிடத்துச் சென்ற ஒருவனுடைய பூசலை அவையோருடன் கூடிச் சோழன் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னி விரைந்து தீர்த்தான் என்பதை உரைக்கின்றது.

## 2.2.10 அவை தீர்க்கும் குடும்ப வழக்கு

மாறுபட்டு ஊஞ்சலாடாது அழுதுமீளும் பரத்தையாகிய இளம் பெண்ணைத் தலைவனொடு கூட்டி மீண்டும் ஊசலாடுமாறு செய்யாத மக்களொடு கூடிய இவ்வரசனின் அவை பயனற்றது என்பதை,

"ஊசல் உறுதொழிற் பூசல் கூட்டா
நயனின் மாக்களொடு குழீஇப்
பயனின்று அம்மவிவ் வேந்துடை அவையே"(27)

என்று அஞ்சிலஞ்சியார் குறிப்பிடுவதன் வழி குடும்பப் பிரச்சனை அவை வரை சென்று மீண்டதை அறியமுடிகின்றது. இதனால் நாட்டில் ஏற்பட்ட நகரத்தில் உருவான பெருவழக்குகளை அவை தீர்த்து வைப்பதோடு சிறுவழக்குகளாகிய குடும்பப் பிரச்சினைகளையும் தீர்க்க வேண்டும் என்று சங்ககால மக்கள் விரும்பினர் என்று கருத இடமுண்டு.

## 2.2.9 நாளவை

நாளவை என்ற சொல்லுக்கு நாளோலக்கம் என்று பொருள் சுட்டுவர் உரையாசிரியர்கள். இதுவும் அரசன் வீற்றிருந்த அவையாகவே தோன்றுகின்றது.

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய ஆய் அண்டிரனது பெரிய மகிழ்ச்சியையுடைய நாளோலக்கத்தில் இரவலர் பரிசிலாக அலங்காரமமைந்த நெடிய தேரினைப் பெற்றதை,

“வண்மகிழ் நாளவைப் பரிசில் பெற்ற
பண்ணமை நெடுந்தேர் . . . . . . . .”(28)

என்ற நற்றிணை அடிகள் விளக்குகின்றன. நீதி வழங்குமிடமாக மட்டுமல்லாமல் பரிசு வழங்குமிடமாகவும் மன்னனின் நாளவை செயல்பட்டிருக்கின்றது.

நாளவையில் பாணரும் இடம்பெற்றிருந்ததை,

“. . . . . . . . பாணர் நாளவை”(29)

என்ற அடி குறிப்பிடுகின்றது.

### 2.2.11 நாளவையின் பெருமை

நாளவைக்கேயுரிய சில பெருமைகளைச் சங்க இலக்கியங்கள் சுட்டிக் காட்டுகின்றன. “ஆற்றல்மிக்க வலிமையுடைய பாணன் என்பானொடு கூடி, போர் அடுதலில் வல்ல தானையையுடைய கட்டி யென்பான், போர் செய்தற்கு வந்த மலிந்த தித்தன் வெளியன் என்பானது உறையூரின் கண்ணுள்ள நாளோலக்கத்தின் கண்ணே எழுந்த இனிய தெளிந்த கிணையினது ஒலியைக் கேட்டு அவனது அவையின் பெருமையையுணர்ந்து அஞ்சி, போர் செய்யாது ஓடினான்”(30) என்று பரணர் அகநானூற்றுப் பாடலடிகளில் குறிப்பிடுவதன் வழி நாளவையின் பெருமையையுணர முடிகின்றது.

அரிய இசைத் துறைகளை முற்ற உணர்ந்த கரிய தண்டினையும் சிறிய யாழினையுமுடைய பாணர்கள் ஆரவாரம் செய்ய, பல அணிகலன்களை அளித்து நாளோலக்கம் கொண்டிருந்த, கள்ளின் மகிழ்வினையுடைய திதியன் என்பான் வேளிரொடு போர் செயற்கு வாளை உருவினான் என்பதை,

"அருந்துறை முற்றிய கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாணர் ஆர்ப்பப் பலகலம் உதவி
நாளவை யிருந்த நனைமகிழ் திதியன்
வேளிரொடு பொரீஇய கழித்த
வாள்வாய் அன்ன . . . ."(31)

என்று மாமூலனாரும் நாளவையின் பெருமையைச் சுட்டிக் காட்டுவர்.

எம்முடைய இறைவன் இருந்த ஓசையையுடைய பழைய ஊரிடத்து அதனையுடையவர்களைப் போலக் காலம் பாராதே அணுகித் தலைமையையுடைய நாளோலக்கத்தின் கண்ணே தலையெடுத்துச் செம்மாந்து சென்று புகுதல் எம்மைப் போலும் வாழ்க்கையையுடைய இரப்போருக்கு எளிது என்று சேரமான் குட்டுவன் கோதையின் நாளவையின் பெருமையைக் கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக் குமரன்,

"எங்கோ னிருந்த கம்பலை மூதூர்
உடையோர் போல விடையின்று குறுகிச்
செம்ம னாளவை யண்ணாந்து புகுதல்
எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே"(32)

என்ற புறநானூற்று அடிகளில் சுட்டிக் காட்டுகின்றார். இரவலர், அவையில் புகுவது கூடப் பெருமையாகக் கருதப்பட்டிருக்கிறது.

### 2.2.12அவைக்களம்

நீதியை நிலைநாட்டும் கோசரின் அவைக்களம் குறிப்பிட்டுப் பாராட்டும் சிறப்புடையதாக விளங்கியது என்பதை,

"வலம்புரி கோச ரவைக்களத் தானும்"(33)

என்ற அடி தெளிவாக்குகின்றது.

### 2.2.13 நாண் மகிழிருக்கை

நாண் மகிழிருக்கை என்பதும் அரசனின் அவையாக இருந்திருக்கின்றது. நீதி வழங்கும் இடமாக இருந்ததால் நாண் மகிழ் இருக்கை என்று அழைக்கப்பட்டுள்ளது. மன்னன் தக்க நேரத்தில் சரியான மக்கள் ஏற்றுக்கொள்ளக் கூடிய சரியான தீர்ப்பை வழங்கிய இடமாதலால் இவ்வாறு அழைக்கப்பட்டிருக்கக் கூடும். நீதி வழங்கும் இடமாகவும் மக்கள் மனமகிழ்வு கொள்ளும் இடமாகவும் அமைந்ததாதலால் நாண் மகிழிருக்கை என்று வழங்கப் பெற்றது. மனம் மகிழ்ச்சியடைந்திருந்ததால் மன்னன் அவ்விடத்தில் மது அருந்தியிருக்கக் கூடும். இந்நாண் மகிழிருக்கையை மதுரைக் காஞ்சியும், பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகின்றன.

இதனை,

"நாண்மகி ழிருக்கை காண்மார்"(34)

என்று மதுரைக்காஞ்சியும்,

"சூடா நறவின் நாண்மகி ழிருக்கை"(35)

என்று பதிற்றுப்பத்தும் குறிப்பிடுகின்றன.

### 2.2.14 அவையகம்

சங்க இலக்கியத்துள் மதுரைக்காஞ்சி மட்டும் அவையகம் என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்தியுள்ளது. அவை+அகம் = அவையகம். அவை செயல்பட்ட அகம் அவையகம் என்னும் பொருளில் இச்சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது. மோகூர்ப் பழையனுடைய அவையகத்தில் நான்கு மொழிகளையறிந்த கோசர் என்னும் குடியினர் வீற்றிருந்தனர். இதனை மதுரைக்காஞ்சி,

"பழையன் மோகூர் அவையகம் விளங்க
நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன"(36)

என்ற அடிகளில் சித்தரிக்கின்றது.

### 2.3 ஊரவை

அரசன் உச்சநீதிமன்ற தலைமை நீதிபதி போன்று செயல்பட்டவன். அவனே ஒரு நாட்டில் நிகழக் கூடிய அனைத்துத் தவறுகளையும் கண்டறிந்து அதற்காக நீதியை வழங்குவதென்பது கடினம். அரசன் இச்சூழலில் அந்தந்த ஊரிலுள்ள பெரியவர்களைக் கொண்ட சிறு அமைப்புக்களே வழக்குகளை விசாரித்து நீதி வழங்கலாம் என்று அனுமதி அளித்ததால் உருவானது உள்ளாட்சி அமைப்பு நீதிமன்றங்களான மன்றம், பொதியில், அம்பலம் என்பனவாகும். இவற்றுள் வயது முதிர்ந்த, அனுபவமிக்க நீதி நேர்மை தவறாத நபர் நீதிபதியாக நியமிக்கப்படுவார்.

அவரே வழக்கை விசாரித்து துலாக்கோல் போல் ஒருபால் கோடாது நீதி வழங்குவார்.

### 2.3.1 மன்றம்

மன்றம் என்னும் ஊரவை மக்களின் பொதுவிடமாகச் செயல்பட்டது. மன்றத்தின் முதற்பணி உள்ளூர் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பது ஆகும். இம்மன்றம் பொது மக்கள் தங்குவதற்கும் இளைப்பாறுவதற்கும் உதவியாக இருந்தது. பிற பயன்பாட்டிற்கும் பயன்படுத்தப்பட்டது. அவ்வவ் மன்றத்தில் அமைந்திருந்த மரத்தின் அடிப்படையில் அம்மன்றங்களுக்குப் பெயர்களும் வைக்கப் பெற்றன. "ஊரவை கூடும் இடங்களை உணர்த்தச் சங்க நூல்கள் மன்றம் என்ற சொல்லை வழங்குகின்றன"(37) என்பர்.

சங்க இலக்கியத்தில் மன்றம் என்ற சொல் பல இடங்களில் பயின்று வந்துள்ளது. இம்மன்றம் எனும் ஊரவை நீதிமன்றங்கள் போல பல்வேறு மரத்தடியில் கூட்டப்பெற்றிருக்கின்றன. இதனை, "இரத்தி, விளா, பலா, வேம்பு முதலிய மரங்களுக்கடியில் கூடுவது மன்றம். இதனை அவ்வவ் மரங்களின் பெயர்களாலேயே அழைப்பது மரபு. இத்தகைய மரங்கள் ஊர் நடுவேயிருந்தன"(38) என இராசமாணிக்கனார் சுட்டிக் காட்டுவர்.

இதனை,

> "இரத்தி நீடிய அகன்றலை மன்றத்து"(39)
>
> "மன்ற விளவின் . . . . "(40)
>
> "மன்றப் பலவின் . . . . "(41)

“மன்ற வேம்பின் . . . . ”[42]

“வன்னி மன்றத்து விளங்கிய காடே . . . . ”[43]

என்ற அடிகள் மரங்களின் அடியில் மன்றங்கள் செயல்பட்டமையை உணர்த்தும்.

ஊர்க் களியாட்டங்களுக்குரிய இடமாகவும் மன்றங்கள் திகழ்ந்தன. வெற்றிக் கொண்டாட்டங்கள் மன்றங்களில் கொண்டாடப்பட்டன என்பதனை,

“வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார். . . . ”[44]

என்ற அடி விளக்கும்.

சிறுவர் சிறுமியர் மன்றத்தில் ஆர்ப்பரித்தனர் என்பதனை,

“புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற்”[45]

என்ற அடி சுட்டும்.

பெண்களும் மன்றங்களுக்குச் சென்றனர் என்பதனைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. பெண்களும் மன்ற நிகழ்ச்சியில் பங்குபெறும் வழக்கம் உண்டு. ஆனால் கைம்மை மகளிர் இம்மன்றங்களுக்குச் செல்வதில்லை என்பதனை,

“மென்றோண் மகளிர் மன்றம் பேணார்”[46]

என்ற பாடலடி விளக்கும்.

### 2.3.1.1 மன்றங்களின் இருப்பிடம்

மன்றங்கள் குறிஞ்சி நிலமாகிய மலையில் காணப்பட்டதை.

“குன்றச் சிறுகுடி யிழிதரும்

மன்ற நண்ணிய மலைகிழ வோற்கே”(47)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

மன்றம் என்ற சொல்லாட்சியைச் சங்க இலக்கியங்கள் பல இடங்களில் கையாண்டுள்ளன. கோயில்களையும் மன்றம் எனக் குறித்துள்ளனர். பண்டைக்காலத்தில் கோயில்களும் தீர்ப்பு வழங்கும் அறக் கூடங்களாகத் திகழ்ந்துள்ளன என்பதை அறியமுடிகின்றது.

### 2.3.1.2 மன்றங்களில் பறவைகள்

மனையின் கண்ணேயிருக்கும் புறவினுடைய சிவந்த காலினையுடைய சேவல் தான் இன்பநுகரும் பெடையோடு மன்றிலே சென்று இரை தேடியுண்ணாமல் இராக்காலமும் பகற்காலமும் கொடுங்கையைத் தாங்குதலையுடைய பலகைகளிலே பறவாதிருந்து கடுத்த கால் ஆறும்படி மாறி மாறியமர்ந்திருந்தது என்பதை,

“மனையுறை புறவின் செங்காற் சேவ

லின்புறு பெடையொடு மன்றுதேர்ந் துண்ணா

திரவும் பகலு மயங்கிக் கையற்று

மதலைப் பள்ளி மாறுவன விருப்பக்”(48)

என்ற அடிகள் விளக்குவதன்மூலம் நீதி கூறும் கோயிலாகச் செயல்பட்ட நீதி மன்றங்களில் பறவைகள் சுழன்று திரிந்து இன்பவுணர்வை ஏற்படுத்தியிருக்கின்றது.

மன்றத்தில் பறவைகள் விளையாடியதை மற்றுமொரு பாடலடிகள் விளக்குகின்றன. குவிந்த சிறகுகளையுடைய வீட்டின்கண் தங்கும் குருவிகள் முற்றத்தில் உலரும் தானியங்களைத் தின்று பொதுவிடத்தின் கண்ணுள்ள எருவினது நுண்ணிய பொடியைக் குடைந்து விளையாடியது என்பதை

"கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ
முன்றி லுணங்கள் மாந்தி மன்றத்
தெருவினுண் டாது குடைவன . . . ."(49)

என்று மாமலாடன் குறிப்பிடுவர்.

### 2.3.1.3 மன்றத்தில் சண்டை

மன்றத்தில் அவ்வூரைச் சார்ந்தவர்கள் ஒருவரோடு ஒருவர் மாறுபட்டு படைக்கலம் கொண்டு பொருதியும், உடம்போடு உடம்புபட உரசியும் மிக்க சினத்தோடு பெருஞ்சண்டை செய்தும் தம் வலிமை அடங்காதவராய் கல்லை எடுத்து வீசினர். இதனை,

"மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்
கையினும் கலத்தினும் மெய்யுறத் தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ
திருஞ்செருவி னிகன் மொய்ம்பினோர்
கல்லெறியும் . . . . . . . . . . . ."(50)

என்று பட்டினப்பாலை சுட்டுவதன் வழி அறிய முடிகின்றது.

### 2.3.1.4 மன்றத்தில் நாட்டியம்

ஆண்டுள்ள தெருவின் கண்ணே விலை கூறுதற்கரிய நறிய பூக்களைச் சிதறி அறிவு வாய்த்தலையுடைய கூத்தருடைய மத்தளத்திற் தாளத் தோடே கூடின முறுக்குதல் புரிந்த நரம்பின் இனிதாகிய கட்டினையுடைய யாழைக் கேட்கும் பெரிய திருநாளின்றாகிய அச்சம் முதிர்ந்த மன்றம் என மன்றத்தில் கூத்தரின் யாழிசையோடு கூடிய நாட்டியம் நடைபெற்றதை அறிய முடிகிறது. இதனை,

"மருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின்
முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த
திரிபுரி நரம்பின் றீந்தொடை யோர்க்கும்
பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்து"(51)

என்ற பட்டினப்பாலை அடிகள் உணர்த்துகின்றன.

### 2.3.1.5 மன்றத்தில் குரவைக் கூத்து

ஒரு போட்டியில் அல்லது போரில் வெற்றி பெற்ற இடத்து அங்குக் குரவைக் கூத்து ஆடுவது மரபு. ஏற்றைத் தழுவிய வீரன் தொழுவை விட்டுப் போனபின் காதலையுடைய மகளிரும் அவர் கணவரும் வலியுற்றுத் தாதாகிய எருவையுடைய மன்றத்தில் குரவைக் கூத்தை ஆடினர். இதனை,

"மாதர் மகளிரும் மைந்தரு மைந்துற்றுத்
தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ"(52)

என்று தலைவன் ஏறுதழுவி வெற்றியடைந்ததால் அவரைச் சார்ந்தோர்

மன்றத்தில் குரவைக் கூத்தாடியிருக்கின்றனர் என்பதைக் கலித்தொகைப் பாடல்கள், படம்பிடித்துக் காட்டுகின்றன.

### 2.3.1.6 மன்றத்தில் மடலேறுதல்

காதல் தோல்வியினாலோ அல்லது ஒருதலைக் காதலினாலோ மன்றில் காதலன் மடலேறியிருக்கின்றான். தனக்கு மன்றிலுள்ள சான்றோர் நீதி வழங்க வேண்டும் என்று முறையிட்டிருக்கின்றான்.

போர்க்களத்தில் வெற்றியினையுடைய குதிரையின் மேலிருந்து போர்த் தொழிலை நடத்துபவன். அம்மாவல்லாத மடன்மாவிலே ஏறி மன்றத்தின் கண்ணே செல்ல தலைவி உள்ளுவித்தாள் என்று குறிப்பிடுவதன் வழி மன்றத்தில் தலைவன் மடலேறி வழக்குத் தொடுத்திருக்கின்றான் என்று கருத இடமுண்டு. இதனை,

“அடன்மாமேல் ஆற்றுவேன் என்னை மடன்மாமேல்

மன்றம் படர்வித் தவள்”[53]

என்ற கலித்தொகை அடிகள் வழி உணரலாம். மேலும் தலைவன் தான் விரும்பிய தலைவியை மணம் புரிய, மன்றத்தின் நடுவில் மடலேறுவதாகக் கூறுவதை,

“மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி

நிறுக்குவென் போல் வல்யான் நீபடு பழியே”[54]

என்ற கலித்தொகையின் அடிகள் புலப்படுத்தும்.

### 2.3.1.7 மன்றத்தை அழித்தல்

பிறநாட்டைக் கைப்பற்றும் நோக்கத்தோடு அல்லது பிற காரணத்தின் வழி படை கொண்டு சென்ற வேந்தன் பகை அரசர்களின் நீதி மன்றமாக விளங்கிய மன்றங்களை அழித்திருக்கிறான். வேந்தர்கள் தன்னுடன் பகை கொண்டு பொருதார் தேயத்திலுள்ள ஊர்களின் மன்றுகள் மக்களில்லையாய்ப் பாழாம்படி அழித்தனர். இதனை,

"மலைந்தோர் தேஎம் மன்றம் பாழ்பட"[(55)]

என்ற பெரும்பாணாற்றுப்படை அடியில் தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் பாடும் போது சுட்டுவர்.

### 2.3.1.8 மன்றத்தில் ஏற்றைக் கொன்று தின்னல்

தான் குறித்த விலங்கின் மேல் செல்கின்ற நாய் அதனைத் தப்பாமற் கொள்ளுமாறு போன்ற கொடிய வில்லையெடுத்த காவலாளருடனே தன் வார்த்தை கேளாத பகைவருடைய காவலையுடைய நிலத்தே சென்று விடியற்காலையிலே அவர்கள் பசுக்களை அடித்துக் கொண்டு போந்து அவற்றைக் கள்ளுக்கு விலையாகப் போக்கி, அதற்குப் பின்பாகத் தமது இல்லிலே சமைத்த கள்ளில் இனிதாகிய நெல்லாற் செய்த கள்ளையுண்டு வளப்பத்தினையுடைய மன்றிலே வலியையுடைய ஏற்றை அறுத்துத் தின்றனர். பகைவரின் மன்றத்தை அழித்ததோடு அம்மன்றத்தில் ஏற்றையும் அறுத்துத் தின்றனர். இதனை,

"செல்நா யன்ன கருவிற் சுற்றமொடு
கேளா மன்னர் கடிபுலம் புக்கு
நாளா தந்து நறவு நொடை தொலைச்சி
யில்லடு கள்ளின் தோப்பி பருகி
மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி"(56)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

இதனால் வேந்தன் படை கொண்டு சென்று பகை நாட்டின் மன்றத்தினை அழித்ததோடு அங்குப் பசுக்களையும் அறுத்துத் தின்றனர் என்பதை அறியமுடிகிறது.

### 2.3.1.9 மன்றத்தில் மக்கள் கூடியிருந்த நிலை

"சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பு
மன்றமும் பொதியிலுங் கந்துடை நிலையினு
மாண்டலைக் கொடியொடு மண்ணி யமைவர"(57)

என்ற அடிகளில் நாற்சந்தியினும், முச்சந்தியினும் புதிய பூக்களையுடைய கடம்பினும் ஊர்க்கு நடுவாய் எல்லாருமிருக்கும் மரத்தடியினை மன்றம் என நக்கீரர் குறிப்பிடுவதை அறியமுடிகின்றது. இம்மன்றத்தில் ஊர்ப் பெரியவர் நீதி வழங்கியிருக்கக் கூடும். இத்தகைய மன்றங்களிலே பரிசிலராகிய கூத்தரும் தங்குவதற்காக வந்தனர் என்பதை,

"மன்றில் வதியுநர் சேட்புலப் பரிசிலர்"(58)

என்ற மலைபடுகடாம் அடி புலப்படுத்துகின்றது. இச்செய்திகளைப் போன்று பதிற்றுப்பத்தும் மன்றத்தைப் பற்றி,

"…. கலியழி மன்றத்து"[59]

"மன்றம் போந்து மறுகுசிறை பாடும்"[60]

"மன்றம் கழுதை போகி …. ."[61]

"செஞ்சுடர் கொண்ட குருதி மன்றத்து"[62]

"மன்றம் படர்ந்து …. ……"[63]

என்ற அடிகளில் குறிப்பிடுவதன் வழி அறியமுடிகின்றது.

### 2.3.1.10 மன்றில் கள்வர் கூடுதல்

இளவேட்டனார் என்ற புலவர்

"புலம்புகூட் டுண்ணும் புல்லென் மன்றத்து"[64]

என்று இராப்பொழுதில் கள்வரும் கூடியிருந்தனர் எனச் சுட்டுகின்றார்.

### 2.3.1.11 பேய் எழு மன்றம்

வளப்பத்தையுடைய பழைமையாகிய ஊரின்கண்ணே தெய்வத்தின் முன்னிடப்படும் அருச்சனையுடனாகிய ஊன் மிடைந்த பலிச் சோற்றை உண்ண வேண்டித் தான் நிலைபெற்றிருக்கின்ற பாழ் மன்றத்தை மோதிப் பேய் எழுந்தது என்று மூலங்கீரனார் குறிப்பிடுவர். இதனை,

"வேனில் முருக்கின் விளைதுணர் அன்ன
மாணா விரல வல்வாய்ப் பேஎய்
மல்லன் மூதூர் மலர்ப்பலி உணீஇய
மன்றம் போழும் புன்கண் மாலை"[65]

என்ற அடிகள் விளக்குகின்றன. இதனால் நீதி வழங்கும் மன்றமாகச் செயல்பட்ட கோயில் காலப்போக்கில் பழுதடைந்த காரணத்தால்

பராமரிப்பின்றி கிடந்தது. அதில் பேயும் வாழ்ந்து வந்ததை அறிய முடிகின்றது.

### 2.3.1.12 மன்றம் செல்ல நாணுதல்

பெண்மக்கள் மன்றத்திற்குச் செல்ல நாணியதை,

"பெருங்கடை இறந்து மன்றம் போகிப்
பகலிலே பலருங் காண வாய்விட்டு
அகல்வயல் படப்பை அவனூர் வினவிச்"(66)

என்ற அடிகள் சுட்டுகின்றன. மேலும் காவலைச் செய்த அன்னையினது காவல் கடந்து பெரிய தலைக்கடை வாயிலையும் நீங்கி ஊர்ப் பொதுவாகிய அம்பலத்தினையடைந்து பகற் பொழுதில் பலரும் காணுமாறு யாம் கொண்டிருந்த நாணத்தினை விடுத்து அகன்ற வயல் சூழ்ந்த கொல்லைகளையுடைய அவனது ஊர் எவ்விடத்து உளதென்று வாயால் வினவியறிவதைப் பருவப் பெண்கள் நாணத்திற்கு இழுக்காகக் கருதியிருக்கின்றனர் என்பதை அறிய முடிகின்றது. தன் தலைவனைத் தேடிப் பெண்கள் மன்றத்திற்குச் செல்வதை நாணத்தின் இழுக்காகக் கருதியிருக்கின்றனர். ஆனால் தலைவியை அடையத் தலைவன் மன்றத்தில் மடலேறியிருப்பதையும் அறிய முடிகின்றது. பருவத் தலைவியர் மன்றத்திற்குச் சென்று தலைவனைத் தேடுவது அறத்திற்கு மாறானது என்று சங்ககால மக்கள் கருதியிருக்கின்றனர்.

### 2.3.1.13 மன்றத்தில் பாணர் தங்குதல்

ஊர் மன்றத்தே பாணர் தங்குவது பண்டை வழக்கம். அயலதாகிய இவ்விடத்தில் அதாவது மன்றத்தில் இங்ஙனம் சொல்வன்மையுறப் பேசுவோன் தன் ஊரில் தான் தங்கும் மன்றத்தில் இன்னும் சிறந்த

சொல்வன்மையுடையவன் போலும் என்பதை,

"தன்னூர் மன்றத் தென்னன் கொல்லோ"(67)

எனப் படுமரத்து மோசிகீரன் குறிப்பிடுவதன்வழி உணர முடிகின்றது. ஊர் மன்றத்தில் உறங்கும் பாணர் சொல்வன்மைமிக்கவராகத் திகழ்ந்தனர்.

### 2.3.1.14 தெய்வம் தங்கியிருத்தல்

கோயில்தான் நீதி வழங்கும் மன்றமாகச் செயல்பட்டது. அதனால் அம்மன்றத்தில் தெய்வம் தங்குவது இயல்பு. நீதி வழங்கும் மன்றத்திலுள்ள மரத்தின்கண் பிறர்க்கு அச்சம் செய்தல் முதிர்ந்த தெய்வம், கொடுமையுடையாரை, வருத்தும் என்று அறிந்தோர் கூறுவதாக

"மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள்
கொடியோர்த் தெறுஉ மென்ப யாவதும்"(68)

என்ற அடிகளில் குறுந்தொகை குறிக்கின்றது. செங்கடம்பு மரத்தினடியில் பலரும் கூடியிருக்கும் மன்றம் இருந்ததை அறிய முடியும்.

### 2.3.1.15 மன்றத்தில் குடும்ப வழக்கு

தலைவனும் தலைவியும் பிரிந்திருக்கும் செய்தி பலர் அறியும் பழி மொழியாகி, பொதுவிடத்தின்கண் பரவிப் பலரால் பேசப்பட்டதை,

"யானே யீண்டை யேனே யென்னல
.... .... .... ....
.... .... .... ....
மறையல ராகி மன்றத் தஃதே"(69)

என்ற குறுந்தொகை அடியில் வெண்பூதிப் புலவர் சுட்டுவர். கணவனும் மனைவியும் பிரிந்திருந்ததை மன்றத்தில் கூடி மக்கள் பேசியிருக்கின்றனர்.

### 2.3.1.16 மன்றத்தை அடைந்த யானை

மலையிலே தங்கிய யானை குறவர்கள் முழங்கியதால் ஊரிடத்திலுள்ள மன்றத்தை நோக்கிச் சென்றது. இதனை,

"நாகுபிடி நயந்த முனைக் கோட் டிளங்களிறு
குன்ற நண்ணிய குறவ ரார்ப்ப
மன்றம் போழும் நாடன் றோழி"(70)

என்ற குறுந்தொகை அடிகள் வழி உணரமுடியும்.

### 2.3.1.17 மன்றம் அமைதியுறல்

மன்றத்தில் வழக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கும் பொழுது கூச்சலும் குழப்பமும் ஏற்பட வாய்ப்புமுண்டு. பின்னர் வழக்கு முடிந்தவுடன் அமைதி ஏற்படும். மாலை நேரத்தில் தொடங்கிய வழக்கு நீதிமன்றமாகிய அம்பலத்தில் நிறைவுபெற்று இரவில் ஒலி அடங்க மனைகளும் துயின்றது. கூச்சலும் குழப்பமும் நிறைந்த மன்றம் பின் ஒலி அடங்கி அமைதி பெற்றது என்பதை,

"மன்றுபா டவிந்து மனைமடிந் தன்றே"(71)

என்ற அடியில் கபிலர் விளக்குவர். இதனால் மன்றம் அமைதியுற்றதை அறியக் கூடும்.

### 2.3.1.18 மன்றத்தில் கூகை குழறல்

மன்றம் செயல்பட்ட செங்கடம்ப மரத்தில் இரவில் கூகை குழறிய ஒலியைக் கேட்டு மக்கள் மனம் நடுங்கிப் பாதுகாப்பான இடத்திற்கு வந்தனர். மன்றம் செயல்பட்ட இடத்திலுள்ள செங்கடம்ப மரத்தில் இரவில் கூகை குழறியதை,

"மன்ற மராஅத்த கூகை குழறினும்"(72)

என்பதால் தெளியலாம்.

### 2.3.1. மன்றம் பொலிவிழத்தல்

போரின் காரணமாக ஊரிலுள்ள குடிகளை இடத்தினின்றும் பெயரச் செய்தமையின் மன்றம் பொலிவற்றிருந்தது. இதனை,

"முனைபுலம் பெயர்ந்த புல்லென் மன்றத்துப்"(73)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. போர் தொடுத்து வந்த பகை அரசன் மன்றத்தை அழித்ததால், மக்கள் வெளியேறினர். இதனால் மன்றம் பொலிவற்றுக் காணப்பட்டிருக்கின்றது.

இவ்வாறு நாட்டை விட்டுக் குடிகள் பெயர்ந்து சென்றதனால் மன்றம் பொலிவற்றுப் போகியது. இப்பொலிவற்றுப் போய்விட்ட இடத்தினையுடைய மன்றினைப் பின்னாளிற் காணின் அக்காட்சி ஆரவாரங் கொண்டிருந்த முதிய ஊரார்க்குத் துன்பம் உண்டாக்கும் என்பதை,

"புன்றலை மன்றங் காணின் வழிநாள்

அழுங்கன் மூதூர்க் கின்னா தாகும்"(74)

என்ற அகநானூற்று அடிகள் சுட்டி நிற்கின்றன. பொலிவற்ற இடத்தினையுடைய மன்றினையும் அழகிய குடியிருப்பினையும் உடையதாகச் சிற்றூர் விளங்கியது. இதனை,

"புன்றலை மன்றத்து . . . . ."(75)

என்ற அடிகள் விளக்கும். இவ்வாறு பாழ்பட்டுப் போன, இடிந்து போன, அழிந்து போன மன்றத்தில் பேய்களின்றி மரைமானினமும் வந்து அடைந்தது என்பதை,

"மனைபாழ் பட்ட மரைசேர் மன்றத்துப்"(76)

என்ற அடி உணர்த்துகின்றது.

"போரின் காரணமாகப் பசுக்களைக் கவர்ந்து சென்று பகைவரின் கூட்டத்தால் வளமுற்றிருந்த ஊரின் குடிகள் போய்விட்ட இடமாகிய பெரிய பாழ்பட்ட மன்றத்தில் நரையினையுடைய முதியோர் நடுங்கும் தமது தலையைக் கவிழ்த்து தமது மனத்தில் இருத்தி வல்லுப்போர் புரியும் வல்லுத் தரையின் அழகு கெட கரையான் அரித்தமையான் பொலிவற்றுப் பெரிய அழகு கெட்ட அச்சம் மிக்க பொதியிலின் இன்னாமையுடைய ஒரு புறத்தே தங்கியிருந்து சிந்தித்துக் கொண்டிருந்தனர்."(77) பொலிவற்றுப் போன மன்றத்தைப் பின்னாளில் பார்த்து நீதி வழங்கிய பெரியோர்கள் மனம் வருந்தியிருக்கின்றனர்.

இக்கருத்துக்களோடு மன்றம் பற்றிய செய்திகளைக் கலித்தொகையும் சுட்டிக் காட்டுகின்றது.

“மன்றம் பரந்த துரை”(78)

“தாதெரு மன்றத் தயர்வர் தழூஉ”(79)

“தாதெரு மன்றத்து”(80)

“மன்றத்துக் கண்டாங்கே”(81)

“மன்றம்”(82)

என்று மன்றம் பற்றிய குறிப்புக்கள் இடம்பெற்றுள்ளன.

இவ்வாறு மேற்கூறிய பாடலடிகளில் மன்றம் என்ற சொல்லாட்சி பயின்று வந்துள்ள இடங்களை அறிய முடிகிறது. மன்றம் என்ற சொல்லாட்சிக்கு ஊரவை என்றும், கோயில் முன்பாக உள்ள மண்டபம் என்றும், ஆநிரைகளை நிறுத்தும் இடம் என்றும் பொருள் கொள்ளப் படுகின்றது. இருப்பினும் இச்சொல்லாட்சிக்கு ஊர்ப் பொதுவாகவுள்ள மண்டபம் என்பதே பொருத்தமானது. பொது மண்டபத்திலேயே ஊர் வழக்குகள், கணக்கு வழக்குகள் குறித்து விவாதித்து முடிவு எடுக்கப் பெற்றது. சங்க இலக்கியத்தில் மன்றம் என்ற சொல்லாட்சி ஊர்ப் பொதுவிடத்தைப் பெரும்பாலும் குறித்தது. சிறுபான்மை வேறு பொருள்களையும் குறித்து வந்தது.

### 2.3.2 பொதியில்

ஊரவையின் மற்றொரு அமைப்பு பொதியில் என்பதாகும். இப்பொதியில் என்ற சொல்லாட்சி சங்க இலக்கியத்தில் சில இடங்களில் மட்டுமே கையாளப்பட்டிருக்கின்றது.

பொது+இல் = பொதுவான வீடு

பொதியில் ஊர் மக்களுக்குப் பொதுவாகவுள்ள மண்டபம் அல்லது கோயில் என்னும் பொருளில் 'பொதியில்' என்னும் சொல்லாட்சி கையாளப் பெற்றுள்ளது.

பொதியில் அவை போன்று செயல் பட்டதையும் நற்குடியில் தோன்றிய கோசர் என்பவர்கள் தொன்மையான பொதியில் இருந்து நீதி வழங்கியுள்ளனர் என்றும் சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன. இப்பொதியிலில் தெய்வங்கள் உறைந்தன என்ற குறிப்பும் உள்ளது. இவை சிதைந்து பாழ்பட்டு இருந்தன என்ற செய்தியையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகின்றது.

பொதுநிலையில் பொதியில் என்பது ஊரவையையும், சிறுபான்மை தெய்வம் உறையும் இடத்தையும் குறித்தது. இத்தெய்வம் உறையும் இடத்தில் நீதி வழங்குதல் சிறப்பு என்று கருதியிருப்பர். அதனால் நீதிமன்றமாக இப்பொதியிலைத் தேர்ந்தெடுத்தனர் என்று குறிப்பிட இடமுண்டு.

### 2.3.2.1 பொதியிலை மெழுகுதல்

பகைநாட்டு மன்னன் மீது படை செலுத்தி வென்ற வேந்தன் அந்நாட்டுப் பெண்களைச் சிறைபிடித்து வருவது மரபு. அவ்வாறு சிறைப்படுத்தி வந்த பெண்களைத் தனது நாட்டில் அடிமைகளாகப் பணியமர்த்துவர். அப்பெண்கள் பல்வேறு வேலைகளில் ஈடுபடுவதுண்டு. அவ்வகையில் சிறைப்படுத்தப்பட்ட பெண்கள் பொதியிலை மெழுகியதைக் காணமுடிகின்றது.

பகைவர் மனையிலிருந்து பிடித்து வந்த மகளிர் பலரும் நீருண்ணுந் துறையில் சென்று மூழ்கி வந்து, பின் அம்பலத்தை மெழுகும் மெழுக்கத்தினையும் அவர்கள் அந்திக் காலத்தே கொளுத்தின அவியாத விளக்கினையுமுடைய பூக்களைச் சூட்டின தறியினையுடையதாக இருந்தது. பொதியிலில் பகைவர்களால் பற்றிக் கொணரப்பட்ட மகளிர் அம்பலத்தை மெழுகிப் பராமரிக்கும் பணியில் அமர்த்தப்பட்டனர் என்பதை,

"கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி
யந்தி மாட்டிய நந்தா விளக்கின்
மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ
வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியிற்"(83)

என்ற பட்டினப்பாலை அடிகள் உணர்த்துகின்றன.

### 2.3.2.2 பொதியிலில் பேய் உறைதல்

மன்றத்தில் பேய் உறைந்ததைப் போன்று பாழடைந்த பொதியிலிலும் பேய் உறைந்து இருக்கின்றது.

"வவையிருந்த பெரும் பொதியிற்
கவையடிக் கடுநோக்கத்துப்
பேய்மகளிர் பெயர் பாட"(84)

என்பதில் சான்றோரிருந்த பெரிய அம்பலங்களில் இரட்டையான அடிகளையும் கடிய பார்வைகளையுமுடைய பேயாகிய மகளிர் உலாவியாடினர் என்ற குறிப்பிடுவதால் உள்ளாட்சி மன்றமான பொதியிலில் பேய் உறைந்தது என்பதை உணரலாம்.

### 2.3.2.3 பொதியிலில் சூதாடுதல்

பாழடைந்த பொதியில் சிதைந்து போனதால் அங்கு நடையையுடைய முதியோர் சூதாடுங்கருவியை இட்டுச் சூதாடியிருக்கின்றனர். நீதி மன்றமாக விளங்கிய, உள்ளாட்சி மன்றமாகத் திகழ்ந்த பொதியில் பாழடைந்ததால் அதனை நரை முடித்த பெரியோர் பொழுதுபோக்கு இடமாகப் பயன்படுத்தியிருக்கக் கூடும். இதனை

"கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்

பலிகண் மாறிய பாழ்படு பொதியில்

நரைமூ தாளர் நாயிடக் குழிந்த"(85)

என்ற புறநானூற்று அடிகள் வழி உணர முடியும்.

### 2.3.2.4 பொதியிலில் மணம் முடித்தல்

மிகப் பழைய ஆலமரத்தடியின்கண் உள்ள பொதுவிடத்தில், தங்குதலைக் கொண்டு தோன்றிய நான்கு ஊரிலுள்ள கோசரது நன்மையையுடைய மொழி உண்மையாவதைப் போல, முரசு முழங்கவும் சங்கு ஒலிக்கவும், மணம் செய்தலால் உண்மையாகியது. இதனால் பொதியிலில் மணம் முடித்ததை அறியமுடிகின்றது. கோசர் எனும் நீதிபதியின் முன் திருமணம் நடைபெற்றிருக்கக் கூடும். இதனை,

"தொன்மூ தாலத்துப் பொதியிற் றோன்றிய

நாலூர்க் கோசர் நன்மொழி போல"(86)

என்ற குறுந்தொகை அடிகள் புலப்படுத்துகின்றன.

### 2.3.2.5 பொதியிலில் போர்த்திட்டம் தீட்டுதல்

மிக்க தொன்மை வாய்ந்த ஆலமரத்தின் அரிய கிளைகளையுடைய மன்றத்தே, இனிய ஓசையையுடைய முரசம் குறுந்தடியால் அடிக்கப் பெற்று ஒலிக்க; பகைவரது போர் முனையை அழித்ததை,

"தொன்மூ தாலத் தரும்பனைப் பொதியில்

இன்னிசை முரசங் கடிப்பிகுத் திரங்கத்

தெம்முனை சிதைத்த . . . . . . . . . "(87)

என்ற அகநானூற்று அடிகளில் மாமூலனார் விளக்குவர். இதன்வழிப் போர் புரிய படை கொண்டு செல்ல முரசம் ஒலிக்கப் பொதியிலில் திட்டம் தீட்டியிருப்பதை அறிய முடிகிறது.

### 2.3.2.6 பாழடைந்த பொதியில்

பயன்பாடில்லாத பொதியில் பாழடைந்து காணப்படும். "வழிச் செல்லும் வணிகர்களைக் கொன்று கொள்ளை கொண்டதனால் அவ்வூர் குடிகள் குடிபோகப் பெற்றது. அதனால் பொதியில் பாழடைந்தது. அங்கு யானை தன் முதுகை உரசியதால் விட்டமும் வீழ்ந்தது. தெய்வம் வெளிச் சென்றதனால் பலி பெறாததும், மெழுகப் பெறாததுமான திண்ணையில் குட்டியீன்ற நாய் தங்கியது. அவ்விட்டத்தைக் கரையான் மூடிக் கொண்டது. அப்பொதியியலில் தலைவன் வந்து தங்கியிருந்தான்"(88) என்று அகநானூறு சுட்டிக் காட்டுகின்றது. இதனால் பாழடைந்த பொதியிலின் அமைப்பையும், அங்கு வழிப்போவார் தங்கியிருந்ததையும் உணரமுடிகின்றது.

"ஆண்மரை உராயும் கரிய அடிபொருந்திய கந்தினையுடைய சுரைக் கொடி படர்ந்த அம்பலத்தின்கண் அழகிய குடியிருப்பினையுடைய சீறூரிலுள்ளார் விடியலில் இடும்பலியை மறந்தனர். பலிபீடத்தை அடுத்து ஆலமரத்தின் விழுதுமீது கோடைக் காற்று வீசியதால் துணையுடன் கூடிய புறாக்கள் ஓடியது எனவும் கூறப்படுவதைக் காண முடிகின்றது."(89) இந்நிலையால் பொதியில் பாழடைந்து, சிதைந்து பலிபெறாமல் கிடந்தது என்பதனை அறிய முடிகிறது. பாழடைந்த பொதியிலில் தெய்வம் வெளிப்போந்து விட்டமையால் கரடிக் கூட்டம் பற்றாஞ் சோற்றினைத் தேடியது என்பதை,

"புற்றுடைச் சுவர புதலிவர் பொதியிற்
கடவுள் போகிய கருந்தாட் கந்தத்து"(90)

என்ற அடிகள் மூலம் அறியக்கூடும். இப்பாடல்களின் கருத்துக்களின் வழி பாழடைந்த பொதியியலின் தன்மையை அறியமுடிகின்றது.

மேற்கூறிய பாடல்கள் வழிப் பொதியில் என்பதற்கு ஊரம்பலம், ஊர்ப் பொதுமண்டபம் என்று பொருள் கொள்ள முடிகின்றது. இதுவே நீதிமன்றமாகவும் செயல்பட்டு வந்திருக்கின்றது. ஊர்ப் பொதுவிடங்களில் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பது எளிதாகும். சிற்றூர்களில் தற்காலத்திலும் ஊர்ப் பொது இடங்களில் வழக்குகள் விசாரிப்பது இவ்விடத்தில் நோக்கத்தக்கது. ஊரின் கடைசியில் நீதி மண்டபமும், கோயிலும் அமைப்பது வீண். அங்கு அனைத்து மக்களும் வருவது கடினம். எனவே பொதியில் என்ற அமைப்பு ஊர்ப் பொதுவிடத்திலேயே அமைந்திருப்பதுச் சாலச் சிறந்தது. பொதியில் என்ற சொல்லாட்சி மிகத் தொன்மைக் காலத்திலிருந்து செயல்பட்டு வரும் அவையைக் குறிக்கும் சொல்லாக இருக்கின்றது.

ஒரு காலத்தில் பொதியிலாகச் செயல்பட்ட இடம் இன்று அறநிலைக் கோட்டமாகச் செயல்பட்டு வருவதை

"நிலைதளர்வு தொலைந்த வொல்கு நிலைப் பல்காற்

பொதியி லொருசிறைப் பள்ளி யாக"(91)

என்ற அடிகள் குறிக்கின்றன.

பொது+இல் = பொதுவான மனை. சில ஊரின் முன்பக்கத்தில் பொதுவான மனை அமைந்திருத்தலைப் பொதியில் என்று குறித்தனர். இதனை,

"முன்னூர்ப் பொதியில்"(92)

என்ற புறநானூற்றுத் தொடர் சுட்டுகின்றது.

இவ்வாறு பொதியில் பற்றிய செய்திகள் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன.

### 2.3.3 அம்பலம்

பொதியில், மன்றம் என்பது போலவே அம்பலம் என்ற இடமும் ஊரவையில் ஒன்றாகும். ஆனால் இங்கு வழக்கு நடைபெற்றதாகக் குறிப்பு இல்லை. அம்பலம் என்ற சொல்லாட்சியைப் பரிபாடல் மட்டும் குறிப்பிடுகின்றது. இதனை,

"எழுதெழில் அம்பலம் காமவேள் அம்பின்

தொழில் வீற்றிருந்த நகர்"(93)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இதற்கு முருகனின் கோயிலுக்கு

முன்பக்கத்தே அனைவரும் வந்து கூடியிருக்க விளங்கும் பொதுவிடம் என்று பொருள் கொள்ளப்பட்டிருப்பதைக் காண முடிகின்றது.

மேற்கூறிய செய்திகளின் வழி, மன்றம், பொதியில், அம்பலம் முதலான ஊரவைகள் குறித்து அறிய முடிகின்றது. இவைகள் அக்காலத்தில் ஊர் நடுவில் பொதுவான அமைந்திருந்தன. அம்பலம் என்பது கோயில் முன்பாக உள்ள மண்டபம் என்று பரிபாடல் கூறுகின்றது. பொதுப்படையாக நோக்கும் பொழுது இவ்வமைப்புக்களுக்கு ஊர்ப் பொதுப்பணி செய்வது முக்கியக் கடமையாக இருந்திருக்கின்றது.

இன்றும் சிற்றூர்களில் நடக்கும் தகராறுகளைத் தீர்த்து வைப்பது ஊரிலுள்ள சிறு அமைப்புக்களே ஆகும். இவற்றிற்குப் பொதுவான இடமாகக் கோயிலின் உட்புறமுள்ள திறந்தவெளி இருப்பதைக் காணலாம்.

## 2.4 தொகுப்புரை

- அவை என்பதை மக்கள் கூடுமிடம் என்று தொல்காப்பியம் சுட்டிக் காட்டுகின்றது.
- அறங்கூறவையம் நீதி வழங்குமிடமாகத் செயல் பட்டிருக்கின்றது.
- அறங்கூறவையத்தாரால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெரியோரும், அவர்களின் தலைவனாக விளங்கிய அரசனும் நாட்டில் வழக்குகளை விசாரித்து நீதி வழங்கி வந்திருக்கின்றனர்.
- உறுப்பினர்கள் மன்னனைத் தவிர பிறரைக் குழிசியின் மூலம் தேர்ந்தெடுத்தனர்.

- அவையின் தலைவராக மன்னன் செயல்பட்டான்
- அவை அறப்பண்பு மிகுந்ததாகச் செயல்பட்டது இந்த அவையின் இயல்பும் பண்பும் போற்றத் தக்கதாக விளங்கியது.
- அவையோர் நீதி வழுவாமல், ஒரு தலைப்பட்சமாகத் தீர்ப்புக் கூறாமல் துலாக்கோல் போல் நீதி வழங்கும் இயல்புடையவராக விளங்கினர்.
- இவ்வாறு அவையோர் நீதி வழுவும் காலத்து அந்தப் பழி அரசனையே சார்ந்தது.
- நாட்டுமக்களும் அவையிலுள்ள உறுப்பினர்களுக்கு நன்மதிப்பை நல்கியிருக்கின்றனர்.
- அவைக்கு வழக்கு கொண்டு வந்தவரின் பூசலைத் தீர்ப்பது அவையோர் கடமையாக இருந்தது.
- மன்னன் இருக்கும் அவையிலும் குடும்ப வழக்குகளைத் தீர்த்திருக்கின்றனர்.
- நாளவை நீதியை வழங்கியது. இதுவும் அரசன் இடம் பெற்ற அவையாக இருந்தது. இவற்றின் பெருமைகளாக சில கருத்துக்கள் குறிப்பிட்டுக் காட்டப்படுகின்றன.
- நாட்டில் அரசருடன் கூடிய அவைக்களமும் செயல்பட்டு வந்தது.
- நாண்மகிழ் இருக்கை என்பது நீதி வழங்கும் இடமாகவும், மது அருந்தி மன மகிழ்ச்சியுடன் இருந்த இடமாகவும் சுட்டப்

படுகின்றது. நல்ல தீர்ப்பை வழங்கிய மன்னன் மன மகிழ்வோடு இருக்கையில் வீற்றிருப்பது இயற்கை.

- அவையகமும் நாட்டில் நீதியை வழங்கியது. இதுவும் அரசன் இடம் பெற்ற அவையையே குறித்தது.
- ஊரவை என்பது அரசன் இல்லாமல் ஊர் பொதுமக்களால் நடத்தப்படும் அவை என்பதாகும். உள்ளூருக்குள் நடந்த வழக்குகளை இந்த ஊரவைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டோர் தீர்த்தனர்.
- ஊரவையில் மன்றம், பொதியில், அம்பலம் என்ற அமைப்புக்களும் இடம் பெற்றிருந்தது.
- இம்மூன்றும் மக்கள் வழிபடும் கோயிலாகவும் இருந்தது. கோயிலில் தீர்ப்பு வழங்குவது சாலச் சிறந்தது என்று நம்பினர்.
- மன்றம் என்பது மரத்தினடியில் நடைபெற்ற உள்ளூர் நீதி மன்றத்தையும் குறித்தது.
- மரத்தடியில் இருந்த மன்றங்கள் அவ்வவ் மரங்களின் பெயர்களாலேயே அழைக்கப் பெற்றன.
- இம்மன்றங்களில் பறவைகள் நிறைந்து இன்பமான சூழ்நிலையை உருவாக்கியது.
- நீதி வழங்க மட்டுமல்லாமல் பல்வேறு பயன்பாட்டிற்கும் மன்றத்தைப் பயன்படுத்தினர்.
- சில வேளைகளில் நாட்டியமும், போட்டியில் வென்றதன் வழி குரவைக் கூத்தும் மன்றத்தில் ஆடப்பட்டன.

- முக்கிய வழக்காகக் காதலர்களின் வழக்கும் இம்மன்றத்தில் இடம் பெற்றது. தலைவன் மடலேறி வந்து வழக்கைத் தொடுத்திருப்பதை உணர முடிகின்றது.
- திருமணமாகாத கன்னிப் பெண்கள் தலைவனைத் தேடி மன்றத்திற்குச் செல்ல நாணி இருக்கின்றனர்.
- அதேபோல கைம்பெண்களும் மன்றம் செல்ல விரும்பவில்லை.
- பகை நாட்டின்மீது போர் கொண்டு சென்ற வேந்தன் அவ்வூரிலுள்ள நீதிமன்றமான மன்றங்களை அழித்துள்ளான்.
- மன்றங்களில் ஏற்றை அறுத்துத் தின்று பகையைத் தீர்த்திருக்கின்றனர்.
- இம்மன்றத்தில் கூத்தர் போன்றோரும் பொதுமக்களும் கூடி வழக்கை நோக்கியிருக்கின்றனர்.
- பாழடைந்த மன்றத்தில் கள்வர் கூடியிருத்தல் இயல்பாகும்.
- பேயும் அம்மன்றத்தில் வாழ்ந்தாகக் கூறுகின்றனர்.
- இங்கு பாணர்கள் தங்கி ஊர்ச் செய்திகளைப் பேசியிருக்கின்றனர்.
- தெய்வமும் நிலை பெற்றிருந்தது.
- குடும்ப வழக்குகளைத் தீர்ப்பது மன்றத்தின் தலையாய கடமையாக இருந்திருக்கின்றது.
- மலைப் பகுதியில் நீதி வழங்கும் மன்றங்களை ஏற்படுத்தியிருந்தனர்.

- சில நேரங்களில் மலையில் திரிந்த யானைகளும், குறவர் துரத்த மன்றத்தை நோக்கி வந்திருக்கின்றன.
- வழக்கு விசாரணையின் போது கூச்சலும், குழப்பமும் ஏற்பட்டுள்ளது. பின் மன்றம் அமைதியுற்றது. மரத்தடியில் மன்றம் இருந்ததால் இரவில் அங்கு கூகை குழறியிருக்கின்றது. மக்களும் பயந்து பாதுகாப்பான இடம் தேடிச் சென்றிருக்கின்றனர்.
- மன்றம் அழிந்த செய்திகளைச் சங்கப் பாடல்கள் பலவாறு சித்தரிக்கின்றன.
- பொதியில் என்பது ஊரின் பொதுவான கோயிலாகவும் நீதி வழங்கும் இடமாகவும் திகழ்ந்தது.
- போரில் தோற்ற அரசனின் நாட்டு மகளிரைக் கைப்பற்றி வந்து பொதியியலை மெழுகும்படியும், அதில் விளக்கேற்றும் படியும் பணியமர்த்தினர்.
- இப்பொதியில் பாழடைந்த பொழுது இங்கு பேய் உறைந்து இருக்கின்றது.
- பாழடைந்த பொதியிலைப் பல பாடல்கள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.
- பாழடைந்த பொதியிலில் ஊர்ப் பெரியோர் சூதாடு கருவி கொண்டு சூதாடியிருக்கின்றனர்.
- இப்பொதியிலில் திருமணமும் நடைபெற்றிருக்கின்றது.
- இங்குப் போர்த்திட்டமும் தீட்டினர்.

- அம்பலம் என்ற ஊரவையின் அமைப்பைப் பரிபாடல் சித்தரிக்கின்றது.
- இவ்வாறு சங்க காலத்தில் அரசன் இடம்பெற்ற அவை போன்ற இடங்களும், ஊர்ப் பெரியவர் மட்டும் இடம்பெற்ற ஊரவை எனும் மன்றமும், பொதியில், அம்பலம் என்ற அமைப்புக்களும் நீதிமன்றமாகச் செயல்பட்டதை அறிய முடிகின்றது.
- இந்நீதிமன்றங்களே பல்வேறு பயன்பாட்டிற்கும் பயன்படுத்தப் பட்டதை உணர முடிகின்றது.

## சான்றெண் விளக்கம்

1. தொல். நூற்பா.1022.
2. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு நூல், ப.63.
3. மு.முத்துவேலு, சங்கத்தமிழ் கூறும் சட்டநெறி, ப.37.
4. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.454.
5. மேலது, ப.454.
6. பொருந, 187-188.
7. அகநா., 77: 7-8.
8. மலை. 77.
9. நற், 400: 7-8.
10. புறநா. 39: 8-9.
11. மதுரைக்., 778.
12. மலைபடு., 39
13. பொருந, 187-188.
14. மேலது, 53-55.
15. அகநா. 93: 4-5.
16. கலித்., 79: 4
17. மேலது, 140: 22.
18. மேலது, 144: 72.

19. மதுரை., 489-492.

20. புறநா. 224: 4

21. மேலது, 157: 4

22. மேலது, 239: 10.

23. மேலது, 83: 3.

24. மு.முத்துவேலு, சங்கத்தமிழ் கூறும் சட்டநெறி, ப.36.

25. புறநா. 71: 7-9.

26. மேலது, 266: 8-9.

27. நற். 90: 10-12.

28. மேலது, 167: 3-4.

29. பதி. (IV) 8 : 9.

30. அகநா. 226: 12-17.

31. மேலது, 331: 10-14.

32. புறநா. 54: 1-4.

33. மேலது, 283: 6.

34. மதுரைக்.,443.

35. பதி. (IX) 5 : 8.

36. மதுரைக். 508 - 509.

37. சு.வித்தியானந்தன், தமிழர் சால்பு, ப.66.

38. இராசமாணிக்கனார், பத்துப்பாட்டு ஆராய்ச்சி, ப.67.

39. புறநா., 34: 12.

40. மேலது, 181: 1.

41. மேலது, 128: 1.

42. மேலது, 76: 4, 371: 7.

43. பதி (V) 4 : 23.

44. புறநா. 270: 10.

45. மேலது, 334: 3.

46. மேலது, 373: 3.

47. குறுந். 332: 5-6.

48. நெடுநல். 45-48.

49. குறுந். 46: 2-4.

50. பட்டினப். 69-73.

51. மேலது, 252-255.

52. கலித். 103: 62-63.

53. மேலது, 141: 9-10.

54. மேலது, 58: 22-23.

55. பெரும், 423.

56. மேலது, 139-143.

57. திருமுருக. 225-227.

58. மலைபடு. 492.

59. பதி. (II) 3 : 17.

60. மேலது, (III) 3 : 5

61. மேலது, (III) 5 : 4.

62. மேலது, (IV) 5 : 8.

63. மேலது, (V) 3 : 26.

64. நற். 33:3

65. மேலது, 73: 1-4.

66. மேலது, 365: 2-4.

67. குறுந். 33:2.

68. மேலது, 87: 1-2.

69. மேலது, 97: 1-4.

70. குறுந். 346: 1-3.

71. அகநா. 128: 1.

72. மேலது, 158: 13.

73. மேலது, 157: 11.

74. மேலது, 301: 24-25.

75. மேலது, 321: 10.

76. மேலது, 373: 2.

77. மேலது, 377: 5-15.

78. கலித். 102: 39.

79. மேலது, 103: 62.

80. மேலது, 108:60.

81. மேலது, 110:20.

82. மேலது, 141-10.

83. பட்டின. 246-249.

84. மதுரைக். 161-164.

85. புறநா.52: 12-14.

86. குறுந். 15: 2-3.

87. அகநா. 251: 8-10.

88. மேலது, 167: 7-20.

89. மேலது, 287: 4-9.

90. மேலது, 307: 11-12.

91. புறநா, 375: 2-3.

92. மேலது. 390: 19.

93. பரி.செவ்.18: 28-29.

இயல் - 3



# சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்

3.1 முன்னுரை

3.2 காவலரது செய்கை

3.2.1 தெருக்காவலர்

3.2.2 ஊர்க்காவலர்

3.2.3 நகர்க்காவலர்

3.3 மனைக்காவலர்

3.4 சிறைகள்

3.4.1 சங்க காலத்தில் சிறை

3.5 தண்டனையின் தன்மை

3.6 குற்றங்களின் வகைகள்

3.7 தண்டனை வகைகள்

3.8 சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்

3.8.1 நன்னன் நால்வர்

3.8.2 கொண்கான நன்னன்

3.8.3 கடம்பின் பெருவாயில் நன்னன்

3.8.4 நன்னன்

3.8.5 நன்னன் சேய் நன்னன்

3.8.6 பெண் கொலை புரிந்த நன்னன்

3.14 எண்வகை மணங்கள்

3.14.1 இராக்கத மணம்

3.15 தற்கொலை

3.15.1 வடக்கிருத்தல்

3.15.1.1 புதல்வர்களின் மண்ணாசை

3.15.1.2 பூதனாரின் புலம்பல்

3.15.1.3 புறப்புண்பட்டமை

3.15.2 உடன்கட்டை

3.15.2.1 பெருங்கோப்பெண்டு உடன்கட்டை ஏறுதல்

3.15.2.2 மடலேறுதல்

3.15.2.3 மடல்மா

3.15.2.4 மடல் மரபு

3.15.2.5 மடல் வகை

3.16 கடம்பின் பெருவாயில் நன்னனது செயல்

3.16.1 கூந்தலைத் திரித்தல்

3.16.2 செங்குட்டுவனின் வெற்றிச் செருக்கு

3.17 ஒற்று

3.17.1 ஒற்றுக்கு மரணதண்டனை

3.18 குழந்தைகளைக் கொல்ல நினைத்த கிள்ளிவளவனது கொடுமை

3.19 மன்னிக்கப்பட்ட குற்றங்கள்

3.19.1 பெருஞ்சேரல் இரும்பொறை

3.19.2 புலவர் வருகை

3.19.3 கவரி வீசுதல்

3.20 மன்னிப்பில்லாக் குற்றம்

3.21 எரிபரந்தெடுத்தல்

3.21.1 நாட்டை எரியூட்டல்

3.21.2 ஊரை எரியூட்டல்

3.22 ஆநிரை கவர்தல்

3.22.1 ஆநிரை கவரக் காரணம்

3.23 உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்கள்

3.23.1 பரத்தமை

3.23.1.1 பரத்தையருடன் புனலாடுதல்

3.23.1.2 தலைவியின் வருத்தம்

3.23.1.3 அணிகலன்களை பரத்தைக்குக் கொடுத்தல்

3.23.1.4 பொது மகளிரைக் கூடுதல்

3.23.2 உடன்போக்கு

3.23.2.1 உடன்போக்கு மேற்கொள்ளல்

3.23.2.2 உடன்போக்கிற்கு அஞ்சிய நற்றாய்

3.23.2.3 செவிலியது புலம்பல்

3.23.2.4 நற்றாய் தலைவனின் தாயைப் பழித்தல்

3.23.3 புதல்வரது மண்ணாசை

3.23.4 சகோதரனின் பதவியாசை

3.24 தொகுப்புரை

## 3.1 முன்னுரை

ஒரு சமூகத்தின் அடிப்படை நிறுவனங்கள் தனிமனிதன், குடும்பம், இனம், மதம், அரசியல் போன்றவைகளாகும். தனிமனிதனே இவையனைத்திலும் முதன்மையானவன் ஆவான். தனிமனிதன் குற்றம் புரிவதற்கு அவனது மனநிலை, குடும்பம், சமூகச் சூழல் முதலானவை அடிப்படைக் காரணங்களாக அமைகின்றன. சங்ககாலச் சமுதாயம் அரசனை அடித்தளமாகக் கொண்டது. மக்கள், மன்னனைத் தெய்வத்திற்கு ஒப்பாகக் கருதிய சமுதாயத்தில் தனிமனிதக் குற்றங்கள் நிகழ்வதற்கான சூழல்கள் குறைவே. இலக்கியங்கள் நாட்டில் நிகழும் முக்கிய நிகழ்ச்சிகளைச் சித்தரிப்பவை ஆகும். சங்க இலக்கியங்களின் வழி அக்காலத்தில் நிகழ்ந்த குற்றங்களையும், அவற்றிற்கு வழங்கப்பட்ட தண்டனைகளையும், அவற்றிற்கான காரணங்களையும் அறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

## 3.2 காவலரது செய்கை

ஒரு நாட்டில் கள்வர் நடமாட்டம் மிகுந்திருக்கும் பொழுது மக்களின் நலன் கருதி மன்னன் காவலரைக் காவல் புரியுமாறு ஆணையிடுவான். இக்காவலர் மூன்று வகைப்படுவர்.

1. தெருக்காவலர்
2. ஊர்க்காவலர்
3. நகர்க்காவலர்

முதலானோர் ஆவர்.

### 3.2.1 தெருக்காவலர்

வழிப்போக்கரைத் துன்புறுத்தும் திருடரிடமிருந்து காப்பாற்றுவதே தெருக்காவலருடைய முக்கியமான கடமையாகும். அணுக முடியாத கடுமையான நெறிகளில் அம்பு வில்லுடன் நின்று காவல் செய்யும் காவலரை,

"கல்லா மழவர் வில்லிடை விலங்கிய
துன்னரும் கவலை அருஞ்சுரம்"(1)

என்ற அடிகள் சிறப்பிக்கின்றன.

தொண்டைமான் இளந்திரையன் நாட்டில் கள்வர் இல்லையென்று கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். இதற்குக் காரணம் அவன் அமைத்த காவற்படையின் சிறப்பாகும். இதனை,

"அத்தஞ் செல்வோர் அலறத்தாக்கிக்
கைப்பொருள் வௌவுங் களவேர் வாழ்க்கைக்
கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்"(2)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

சிறந்து விளங்கிய உள்நாட்டு வியாபாரத்தின் பாதுகாவலுக்காகச் சந்திகளில் வீரர் நிறுத்தப் பெற்றதைப் பெரும்பாணாற்றுப்படை விளக்குகிறது. அவ்வீரர் வில்லையுடைய கையினராய்ப் பல வழிகளில் கள்வரிடமிருந்து காப்பர். இவர்கள் குழையால் வேய்ந்த குடிசையிலிருக்கும் மான்தோலாகிய படுக்கையினையும், தழை விரவிய கண்ணியையும், கடிய சொல்லினையுமுடையவர் என்பதனை,

"இலைவேய் குரம்பை யுழைஅதட் பள்ளி

யுவலைக் கண்ணி வன்சொ லிளைஞர்

சிலையுடைக் கையர் கவலை காப்ப"(3)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

மேற்கூறிய பாடலடிகளின் வழி தெருக்காவலர் காவல் காத்த செய்தியினை அறியமுடிகிறது.

### 3.2.2 ஊர்க்காவலர்

ஊரைக் காவல் புரிபவர்கள் ஊர்க்காவலர்கள். இவர்கள் இரவு நேரங்களில் ஊரைக் காவல் செய்பவர்கள். நள்ளிரவில் சூலமேந்திய கையுடன் திரிவர். இக்காவலர் நெடிய நாவமைந்த மணிகளை ஒலிப்பதுண்டு. இதனை,

"நெடுநா வொண்மணி நிழத்திய நடுநாள்" (4)

என்ற அடி உணர்த்துகிறது.

காவலரின் இவ்வொலியானது காவலையுடைய தலைக்கடை, புழைக்கடை வாயில்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள் என்று கூறுவது போல அமைந்தது. மனைகள்தோறும் இம்மணிகள் ஒலித்துக் கொண்டே இருக்கும். இதனை,

"காப்புடை வாயில் போற்றோ என்னும்

யாமங் கொள்பவர் நெடுநா ஒண்மணி"(5)

"நெடுநா வொண்மணி கடிமனை இரட்ட"(6)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

அந்திப்பொழுதில் காக்கும் முறையையுடைய காவலரது அழகிய முரசின் ஒலி அழகிய நிலாவொளி முற்றத்தின்கண் ஒலிக்கும் என்பதனை,

"அந்திக் காவலர் அம்பணை இமிழ்இசை
அரமிய வியலகத்து இயம்பும்"(7)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

நள்ளிரவில் தலைவியைக் காவல்காக்கும் அன்னை துயின்றாலும் துஞ்சாத இயல்பினையுடைய ஊர்க்காவலர் விரைந்து வருவர் என்பதை,

"துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்"(8)

"காவலர் கடுகினும் கதநாய் குரைப்பினும்"(9)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

### 3.2.3 நகர்க்காவலர்

நகரைக் காவல் செய்பவர்கள் நகர்க்காவலர் என்று அழைக்கப்பட்டனர். இவர்களது முக்கியப் பணி நகரத்திற்கு வரும் மக்களைக் கள்வரிடமிருந்து காப்பதாகும்.

கள்வர்கள் மக்களது கண்களுக்குத் தெரியாதவாறு உருவம் கொண்டு உடைவாளையும், நூலேணியையும், உளியையும் உடையவர்கள் ஆவர். அவர்கள் பேரணிகலன்களை விரும்பி அவற்றைத் திருடுவதற்குத் தக்க நேரம் பார்த்துப் பதுங்கியிருந்தனர். அக்கள்வரை அவர் அறியாதவாறு பின் தொடர்ந்தனர் காவலர்கள். வலிய களிற்றை இரையின் பொருட்டு ஆராயும் வலிமையான புலியைப் போல துயிலாக் கண்களை உடையவராய் காவலர் கள்வரைப் பின்தொடர்ந்து சென்று

மக்களைக் காத்ததை,

"வயக்களிறு பார்க்கும் வயப்புலி போலத்
துஞ்சாக் கண்ணர் அஞ்சாக் கொள்கையர்
அறிந்தோர் புகழ்ந்த ஆண்மையர் செறிந்த
நூல்வழிப் பிழையா நுணங்குநுண் தேர்ச்சி
ஊர்காப்பாளர் ஊக்கரும் கணையினர்"(10)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

மேற்கண்டவை அரசனின் ஆணைப்படி தெருக்காவலர், ஊர்க்காவலர், நகர்க்காவலர் முதலானோர் காவல் காத்த செய்தியினைக் குறிப்பிடுகின்றன.

### 3.3 மனைக்காவலர்

தலைவன் தலைவியது களவு வாழ்க்கையை அறிந்த தலைவியது பெற்றோர் அவளை வீட்டுக்காவலில் வைத்தனர். தலைவியைத் தலைவன் சந்திக்காமல் இருப்பதற்காகக் காவலரை நியமித்தனர். இக்காவலரை 'மனைக்காவலர்' என்பர்.

தலைவன் தலைவியை இரவுக்குறியில் சந்திக்க வருகிறான். அவன் தலைவியின் தந்தை நியமித்திருந்த அரிய காத்தல் தொழிலையுடைய காவலர் சோர்ந்திருக்கும் பொழுது தலைவியைக் காண்பான் என்பதனை,

"அருங்கடிக் காவலர்"(11)

என்னும் அடி சுட்டுகிறது.

களிற்றைத் தாக்க புலி நேரம் பார்த்து வருவது போல காவலர் அறியாதவாறு தலைவன் தலைவியைக் கண்டான் என்பதை,

“நெடுநகர்க் காவலர்”(12)

என்ற அடி விளக்குகிறது.

அரிய காவலர்கள் நெகிழ்ந்திருந்த சமயத்தில் தலைவன் தலைவியைக் கண்டதை,

“அருங்கடிக் காவலர் இகழ்பதம் நோக்கி”(13)

“துஞ்சாக் காவலர் இகழ்பதம் நோக்கி”(14)

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன.

பெற்றோர் ஏவலின்படி மனைக்காவலர்கள் காவல் காத்ததை இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

## 3.4 சிறைகள்

மக்கள் பலரும் கூடிச் சில விதிகளுக்குக் கட்டுப்பட்டு வாழ்கின்ற போது சமுதாய அமைப்பு உருவெடுக்கின்றது. அச்சமுதாய நலன்கருதி வகுக்கப்படும் விதிகள் அனைவராலும் பேணப்பட்டு வருகின்றன. சமுதாயத்தில் வாழும் மக்களது இயல்புகள் ஒத்த தன்மையாக அமைதல் இல்லை. முரண்பாடுகளினால் ஒருவருக்கொருவர் மனத்தால் வேறுபடும் நிலை உண்டாகிறது. வலியோரும் எளியோரும் தம்முள் முரண்பட்டு பிணக்குக் கொள்வதால் சமுதாய அமைதி கெடுகிறது.

சமுதாயத்தில் தவறிழைக்கும் மக்களைத் தண்டிக்கும் பொருட்டு

அவர்களைச் சமுதாய வாழ்க்கையிலிருந்து தற்காலிகமாகத் தனிமைப் படுத்தி வைப்பது நலம் தரும். அவ்வாறு தனிமைப்படுத்தி வைப்பதற்கு அரசின் ஆணையின்படி அமைக்கப்பட்ட இடங்களாகச் சிறைகள் தோன்றியுள்ளன. தவறிழைப்பவர்ளைத் தனிமைப்படுத்துவது அவர்களது இயக்கத்தைக் கட்டுப்படுத்தும் நோக்கில் அமையும் செயலாகும்.

காட்டு வெள்ளத்தைத் தடுத்து நிறுத்துவது கற்சிறை. காட்டு வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தவில்லையெனில் அது வயலுக்குத் தீங்கு ஏற்படுத்திவிடும். காட்டு வெள்ளம் வயலுக்குத் தீங்கிழைப்பது போல மனம்போன போக்கில் செயல்படும் ஒருவனால் சமுதாய அமைதிக்கும் ஒழுங்கிற்கும் தீங்கு ஏற்படுகிறது. மு.முத்துவேலு "விதிகளுக்கு அடங்காத தனிமனிதனைத் தடுத்து நல்வழிப்படுத்தும் அமைப்பே சிறை"(15) என்று குறிப்பிடுகிறார். சிறை என்பதற்குக் குற்றவாளிகளைக் காவல் வைக்கும் இடம், கட்டுப்பாடு மிக்க இடம் என்று பொருள் கொள்ளலாம். அக்காலத்தில் அரசனின் ஆணைக்கு எதிராக நடப்போர், அவரவர் கடமைகளிலிருந்து மீறுவோர், சமுதாயக் கட்டுப்பாட்டினை மீறுவோர், பிறருக்குத் துன்பம் இழைப்போர் முதலானோரைச் சிறையில் இருத்துதல் வழக்கமாக இருந்துள்ளது.

### 3.4.1 சங்க காலத்தில் சிறை

சங்ககாலத்தில் சிறையிருந்ததை இலக்கியங்கள் சித்தரித்துள்ளன. கூர்மையான நகத்தையுடைய புலிக்குட்டியானது கூட்டுக்குள் அடைபட்டு வளர்ந்ததைப் போலக் கரிகாலன் பகைவரால் பிணிக்கப்பட்டு அவர்களுடைய சிறைக் கூடத்திலிருந்து அவனுடைய பெருமையான வீரம் வளர்ச்சியடைந்தது. ஆண்யானை தான் வீழ்ந்த குழியின் உயர்ந்த கரையைக் கவிழந்து விடும்படி தந்தங்களால் குத்தி இடித்து, குழியை

அழித்து வெளியேறித் தன் பெண் யானையுடன் போய்ச் சேர்ந்ததைப் போலக் கரிகாலன் மிக நுண்ணறிவுடன் ஆராய்ந்து தெரிந்து பகைவர்களின் நெருங்கிய சிறையின் வலிமையுள்ள காவலான மதிலின் மேல் ஏறி அங்கே காவல் காத்து நின்ற வாள் வீரர்களை ஓடச் செய்து, தப்பித்துச் சென்ற பகைவர்களுக்கு அச்சத்தைத் தருகின்ற தனது அரசுரிமையை முறைப்படி பெற்றான். இதனை,

"கொடுவரிக் குருளை கூட்டுள் வளர்ந்தாங்குப்
பிறர், பிணியகத்து இருந்து பீடுகாழ் முற்றி
அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று
பெருங்கை யானை பிடிபுக் காங்கு
நுண்ணிதின் உணர நாடி நண்ணார்
செறிவுடைத் திண்காப்பு ஏறி வாள்கழித்து
உருகெழு தாயம் ஊழின் எய்தி"(16)

என்ற அடிகள் சித்தரிக்கின்றன. பட்டினப்பாலைச் சிறைச்சாலையைப் 'பிணியகம்' என்று சுட்டுகிறது. பிணித்தல் என்பதற்குக் கட்டுதல் என்பது பொருள். தவறு செய்தவரைக் கட்டி அடைக்கும் இடம் பிணியகம் எனப்படும்.

இரு மன்னர்களுக்கிடையில் போர் நிகழும் போது, அப்போரில் வென்ற மன்னன், தோற்ற மன்னனையும் அவர்தம் வீரர்களையும் சிறைபிடித்துக் கைதிகளாக வைக்கும் வழக்கம் நடைமுறையில் இருந்திருக்கின்றது.

சேரமான் யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறைக்கும் பாண்டியன் தலையானங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனுக்கும்

போர் நடந்தது. இப்போரில் சேரன் தோல்வியுற்றான். பாண்டியனால் சிறைப்படுத்தப்பட்டான். பின் பாண்டியனின் சிறையில் இருந்து தப்பிச் சென்றான் என்ற செய்தியை,

"நீடுகுழி அகப்பட்ட
பீடுடைய வெறுழ்முன்பிற்
கோடு முற்றிய கொல்களிறு
நிலைகலங்கக் குழிகொன்று
கிளைபுகலத் தலைக்கூடியாங்கு"(17)

என்ற பாடல் விளக்குகிறது.

சேரமான் கணைக்கால் இரும்பொறைக்கும் சோழன் கோச்செங்கணானுக்கும் இடையே கழுமலம் என்னும் இடத்தில் நிகழ்ந்த போரில் சேரமான் தோல்வியுற்றான். அவன் சோழனால் குடவாயிற்கோட்டம் என்னும் இடத்தில் சிறை வைக்கப் பெற்றான். சிறையில் வாடிய சேரன் தாகத்தால் வருந்தினான். சேரன் சிறைக் காவலனிடம் பருக நீர் கேட்டு, அவன் காலந்தாழ்த்திக் கொண்டு வந்த, நீரைப் பருகாமல் மானம் கருதி உயிர்துறந்தான் என்பதனை,

"தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத்து ஒரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீ தணிய
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோவிவ் வுலகத் தானே"(18)

என்னும் பாடல் சுட்டுகிறது.

இம்மூன்று பாடல்களின் வழி கரிகாலன், மாந்தரஞ்சேரல் இரும்பொறை, சேரன் கணைக்கால் இரும்பொறை போரில் தோற்றதும்,

சிறையில் அடைபட்டதும், தப்பிச் சென்றதும் ஆகிய இரு செய்திகளும் அறியப்படுகின்றன. 'சிறையிருந்த' செய்தி குறிப்பினால் அறியமுடிகிறது.

## 3.5 தண்டனையின் தன்மை

குற்றம் இழைப்பவர்களுக்கு வழங்கப்படும் தண்டனை என்பது அவர்களைக் குற்றம் செய்வதிலிருந்து தடுப்பதற்கும், குற்றங்கள் பெருகாமல் இருப்பதற்கும் ஏற்றதொரு கருவியாகக் கருதப்படுகிறது. "குற்ற வழக்குகளில் குற்றங்களுக்கு ஏற்றவாறு தண்டனை வன்மையாகவும் மென்மையாகவும் இருந்து வந்தது"[19] என்று மா.இராசமாணிக்கனார் சுட்டுவர். எல்லா விதக் குற்றங்களுக்கும் ஒரே மாதிரி தண்டனைகள் வழங்கப்படவில்லை. குற்றத்தின் தன்மை கண்டு அதற்கொப்ப தண்டனை வழங்கப் பெற்றது.

தண்டனை என்பது எங்ஙனம் அமைய வேண்டும் என்பதைக் கலித்தொகை, ஒருவர் தமக்கு உறவினர், தெரிந்தவர் என்று கருதாது, ஒருபக்கம் சாயாது துலாக்கோல் போல அவர் செய்த குற்றத்திற்கேற்ப தண்டனை வழங்குதல் வேண்டும் என்பதை,

"முறையெனப் படுவது கண்ணோடா துயிர்வெளவல்"[20]

என்ற அடி சுட்டுகிறது. குற்றம் செய்தவர்கள் எவர் என்று பாராமல், ஒருபால், மனந்திரியாமல் குற்றத்தின் தன்மையையும் அக்குற்றம் உண்மையாகவே இழைக்கப்பட்டதா என்பதையும் ஆய்ந்தறிய வேண்டும். உண்மையைக் கண்ட பின்னர் குற்றத்தை மட்டுமே நோக்கி அதற்கொப்பத் தண்டனை வழங்கப்பட வேண்டும் என்று நெய்தலங்கானல் இளஞ்சேட் சென்னியை ஊன்பொதி பசுங்குடையார் அறிவுறுத்தியுள்ளார். இதனை,

“வழிபடு வோரை வல்லறி தீயே
பிறர்பழி கூறுவோர் மொழிதே றலையே
நீ மெய் கண்ட தீமை காணின்
ஒப்ப நாடி அத்தக ஒறுத்தி
வந்தடி பொருந்தி முந்தை நிற்பிற்
றண்டமும் தணிதிநீ பண்டையிற் பெரிதே”(21)

என்ற பாடல் உணர்த்துகிறது.

குற்றவாளியைத் தண்டிப்பது அவனைத் திருத்துவதற்கு என்று இருந்தாலும் தண்டனையின் முக்கிய நோக்கம் சமுதாயத்தைக் காப்பதாகும். அக்காலத்தில் “பெரும்பாலும் குற்றம் கண்டே தண்டனை விதிக்கப்பட்டது”(22) என்று பழந்தமிழாட்சி என்னும் நூல் குறிப்பிடுகின்றது.

### 3.6 குற்றங்களின் வகைகள்

சங்ககாலத்தில் குற்றங்கள் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டன. அவை,

1. அரசியலுக்கு மாறான குற்றங்கள்
2. அறநூலுக்கு மாறான குற்றங்கள்
3. தெய்வத்திற்கு மாறான குற்றங்கள்

என்பனவாகும். அரசியலுக்கு மாறான குற்றங்கள் என்பவை “இறையிறுக்காமை, உறுபொருள் கவர்தல், பகையொற்று, அறைபோதல், அரசனது பொருள் கவர்தல், அரசனது இன்பப் பொருள் நுகர்தல், ஊருக்கு அல்லது நாட்டிற்கு இரண்டகஞ் செய்தல், அரசற்கிரண்டகஞ் செய்தல், அரசாணை மீறல், கொள்ளையடித்தல், கலகஞ் செய்தல்”(23)

என்பனவாகும். "குடி, பொய், களவு, காமம், கொலை என்பன"[24] அறநூலுக்கு மாறான குற்றங்களாகும். இவை ஐம்பெருங் குற்றங்கள் என அழைக்கப்பட்டன. தெய்வத்திற்கு மாறான குற்றங்கள் "ஒப்பிப்பிணி செய்யாமை, கோயிட் பொருட்கவர்வு என்பன"[25]வாகும்.

## 3.7 தண்டனை வகைகள்

மேற்கூறிய மூவகைக் குற்றங்கள் புரிந்தோர்க்கும் பொதுவான தண்டனையாகக் குடவோலையிடப் பெறாமை இருந்தது.

அரசியலுக்கு மாறான குற்றங்களுக்கு "இறையிறுக்காமைக்குச் சொத்துப் பறிமுதலும், உறுபொருள் கவர்தலுக்குச் சிறையும், பிறவற்றிற்குக் கொலையும்"[26] தண்டனையாகும்.

தெய்வத்திற்கு மாறான குற்றங்களுக்கு அவற்றின் தன்மைக்கேற்ப தண்டனைகள் வழங்கப்பட்டன. இதனை, "தெய்வத்திற்கு மாறான குற்றங்கட்குத் தண்டமும், குற்றவாளி கோயில் வினைஞனாயின் சிறுபான்மை வேலை நீக்கமும் தண்டனையிலிருந்தன. கோயில் வினைஞருள் கீழோர் குற்றத்தை மேலோரும், மேலோர் குற்றத்தை ஊரவையார் நாட்டதிகாரி, அரசனால் விதந்து விடுக்கப்பட்ட அதிகாரி, அரசன் ஆகியவருள் ஒருவர் அல்லது பலரும்; கேட்டுத் தீர்ப்பது வழக்கம்"[27] என்பது விளக்கும்.

அறநூலுக்கு மாறான குற்றங்களுக்குக் கடுமையான தண்டனைகள் அளிக்கப் பெற்றன. இதனை, அறநூலுக்கு மாறான குற்றங்களுள் பொய்க்குத் தண்டமும்; களவிற்குப் பொருள் மீட்போடு மானக்கேடும், பொருள் மீட்கப் பெறாதவிடத்துத் தண்டமும்; தண்டம் இறுக்கப்படா

விடத்துச் சிறையும், காமத்திற்கு மானக்கேடும்; கொலைக்குக் கொலையும் தண்டனையாகும்"[28] என்று ஞா.தேவநேயன் குறிப்பிட்டுள்ளார்.

## 3.8 சங்க இலக்கியத்தில் குற்றங்களும் தண்டனைகளும்

சங்ககாலத்தில் மேற்கூறிய முறையில் குற்றங்கள் தண்டனைகள் வகைப்படுத்தப்பட்டு இருப்பினும் இம்முறையைச் சங்க இலக்கியத்தில் கிடைத்த தரவுகளின் அடிப்படையில் செயல்படுத்த வாய்ப்புகள் மிக அருகிக் காணப்படுகின்றன. சங்ககாலச் சமுதாயத்தில் நிகழ்ந்த குற்றங்களையும், அதற்கு மன்னரும் அறங்கூறு அவையத்தாரும் அளித்த தண்டனைகளையும் பின்வருபவை சித்தரிக்கின்றன.

### 3.8.1 நன்னன் நால்வர்

நன்னன் என்னும் பெயரில் சங்க காலத்தில் நால்வர் இருந்தனர். அவர்கள் முறையே,

1. கொண்கான நன்னன்
2. கடம்பின் பெருவாயில் நன்னன்
3. நன்னன்
4. நன்னன் சேய் நன்னன்

முதலானோர் ஆவர்.

### 3.8.2 கொண்கான நன்னன்

இவன் ஏழில், பாழி, பாரம் என்னும் மலைகளோடு தொடர்புபடுத்திக் கூறப்படுகிறான். அகநானூறு (142, 152, 173, 208, 258, 356, 392, 396), நற்றிணை (270, 391) மதுரைக்காஞ்சி (618-619) முதலான இலக்கியங்கள் இக்கொண்கான நன்னனைச் சிறப்பித்துக் கூறுகின்றன.

### 3.8.3 கடம்பின் பெருவாயில் நன்னன்

இவன் வியலூர் என்னும் ஊருக்குத் தலைவன். கொண்கான நன்னனிடமிருந்து இவன் வேறானவன் ஆவான். அகநானூறு (97, 199), பதிற்றுப்பத்து (பதி.40, பதி.ப.4, 88) முதலானவற்றின் மூலம் கடம்பின் பெருவாயில் நன்னனைப் பற்றி அறிய முடிகிறது.

மாமூலனார், கொண்கான நன்னனை ஏழில், பாழி, பாரம் என்பவற்றோடும் கடம்பின் பெருவாயில் நன்னனை வியலூரோடு தொடர்புபடுத்தியும் கூறுவதன் மூலம் இவ்விருவரும் ஒருவரல்லர் வேறு வேறு என்பது புலனாகும். இம்மன்னனது ஊர் வியலூர் என்பதனை அகநானூறு(97) குறிப்பிடுகிறது.

### 3.8.4 நன்னன்

இந்நன்னன் பற்றிய குறிப்புகள் குறுந்தொகை (73, 292), புறநானூறு (151) முதலானவற்றில் கிடைக்கிறது. கொண்கான நன்னனை அகநானூறு, நற்றிணை முதலானவற்றில் சிறப்பாகக் குறிப்பிடும் பரணர் குறுந்தொகையில் நன்னனை நரகிற்குச் செல்வான் என்று இழிவாகக் கூறுகிறார். இதனால் கொண்கான நன்னனும், இந்நன்னனும் வேறானவர் என்பது புலனாகும். இவனே புலவர்களால் 'பெண்கொலை புரிந்த நன்னன்' என்று இடித்துரைக்கப் பெற்றான்.

### 3.8.5 நன்னன் சேய் நன்னன்

இவன் 'நவிர' மலைக்குத் தலைவன் ஆவான். இவனது ஆறு சேயாறு. அவன் பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றான கூத்தராற்றுப்படை என்னும் மலைபடுகடாத்தின் பாட்டுடைத் தலைவன். இந்நன்னனை

இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் என்னும் புலவர் மட்டுமே சிறப்பித்துக் கூறியுள்ளார்.

மேற்குறித்த செய்திகளின்வழி நன்னன் என்னும் பெயருடைய மன்னர் நால்வர் சங்ககாலத்தில் இருந்தனர் என்பதனை அறிய முடிகிறது.

### 3.8.6 பெண் கொலை புரிந்த நன்னன்

நன்னன் என்னும் குறுநில மன்னன் ஒருவன் இருந்தான். அவனுடைய ஆற்றங்கரைத் தோட்டத்திலுள்ள அரியதொரு மாமரத்தின் கனி ஆற்றில் விழுந்து அடித்துச் செல்லப் பெற்றது. ஆற்றிலே நீராடிக் கொண்டிருந்த பெண் ஆற்றிலே அடித்து வரப்பெற்ற மாங்கனியை அரசனது காவல் மரத்தினின்றும் உதிர்ந்த கனி என்பதை அறியாது தின்று விட்டாள். இதனைக் கண்ட காவலர்கள். அப்பெண்ணை நன்னனிடம் அழைத்துச் சென்றனர். அரசரது பொருளைக் கவர்தலுக்கு மரணமே தண்டனையாகும். கோசர்குடிப் பெண் அரசர்க்குரிய காவல் மரமான மாமரத்தில் விளைந்த கனியை உண்டது என்பது அரசனது பொருள் கவர்தல் என்னும் குற்றமாகும். இதற்குத் தண்டனை கொலையாகும்.

கோசர் குடிப்பெண் அறியாது தின்ற மாங்கனிக்காக நன்னன் அவளுக்கு மரணதண்டனை விதித்தான். அப்பெண்ணின் தந்தை அவளது எடைக்கு எடை பொன்னும் எண்பத்தொரு களிறுகளும் கொடுப்பதாகக் கூறியும் அதனைக் கேளாது அவளுக்குத் தண்டனை வழங்கியதை,

"மண்ணிய சென்ற ஒண்ணுத லரிவை
புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு
ஒன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்"(29)

என்னும் அடிகள் சுட்டுகின்றன.

### 3.8.7 ஆராயாமல் அளித்த தண்டனை

ஆற்றில் மிதந்து வந்த கனியைத் தின்ற பெண் குற்றவாளி அல்லள். மாங்கனியைப் பறித்துண்ண வேண்டும் என்பது அவளது நோக்கமுமல்ல. இது எதிர்பாராது நேரிட்ட ஒரு விளைவாகும். அரசர்க்குரிய உரிமைப் பொருள் என்பதனையறியாது அப்பெண் செய்த செயல் குற்றமாகாது. இருப்பினும் அரசனது பார்வையில் அது குற்றமாகத் தென்பட்டுள்ளது. நன்னன் அப்பெண்ணின் மனநிலை, வயது, நிகழ்ந்த சூழல் முதலானவற்றை ஆராய்ந்து அதன்பின் குற்றம் நிகழ்ந்துள்ளதா என்பதை உறுதி செய்து தண்டனை வழங்கியிருக்க வேண்டும். நன்னன், செய்த குற்றத்திற்குத் தண்டனை வழங்க வேண்டும் என்ற ஒன்றைத் தவிர வேறு எதனையும் கருத்தில் கொள்ளாது விட்டு விட்டான். குற்றம் செய்தது பெண் என்றும் பாராமல் பாரபட்சமற்ற முறையில் தண்டனை அளித்தான்.

### 3.8.8 நன்னன் பெற்ற பழி

பெண்ணென்றும் பாராது அப்பெண்ணிற்கு மரண தண்டனை விதித்ததால் புலவர்களால் 'பெண்கொலை புரிந்த நன்னன்' என்று இடித்துரைக்கப் பெற்றான். நன்னன் நரகத்திற்குத் தான் செல்வான் என்று பரணர் பாடியுள்ளார். இதனை,

"பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரையத்துச் செலீஇயரோ"[30]

என்ற அடிகள் சித்தரிக்கின்றன. இதிலிருந்து அரசனது காவல் மரத்துப் பொருளையோ, உரிமைப் பொருளையோ கவர்தல் என்னும் குற்றத்திற்கு மரணமே தண்டனையாக வழங்கப் பெற்றது என்பது அறியப்படுகிறது. நன்னன் கோசர் குடிப்பெண்ணிற்குத் தண்டனை வழங்கியதோடு

இவ்வழக்கு முடிந்து விடவில்லை. கோசர்கள், அறியாது தின்ற மாங்கனிக்காகத் தம் குடிப்பெண்ணிற்கு மரண தண்டனை வழங்கியதற்கு தம் எதிர்ப்பைத் தெரிவிக்கும் வண்ணம் அகுதை என்னும் வள்ளலிடம் பரிசாகப் பெற்றிருந்த களிறுகளைக் கொண்டு நன்னனின் காவல் மரத்தை வேரோடு பிடுங்கியெறிந்ததை,

"....  ....  ..... நன்னன்
நறுமா கொன்று நாட்டில் போக்கிய
ஒன்றுமொழிக் கோசர் போல"(31)

என்ற அடிகள் விளக்குகின்றன. குற்றம் புரியும் நோக்கோடு செய்வதே குற்றமாகும். அப்படியிருக்க எதிர்பாராது நிகழ்ந்த இச்செயலுக்குத் தண்டனை வழங்கியது சரியான தீர்ப்பாகாது. நன்னன் விரைவாகத் தீர்ப்பளித்தது வரலாற்றில் அவனுக்குப் 'பெண்கொலை புரிந்தவன்' என்ற அவப்பெயரை உண்டாக்கியது. அரசன் வழங்கியது தீர்ப்பில்லை. அது கொலை என்று அரசனின் தவற்றை எடுத்துரைக்கும் துணிவு சங்ககாலத்தில் தமிழ்ப்புலவர்களுக்குத் தான் இருந்துள்ளது. புலவர்கள் அரசனைப் புகழ்ந்து பாடுவதை மட்டும் தனது தொழிலாகக் கருதாமல் தவறிழைக்கும் போது சுட்டிக் காட்டவும் தவறவில்லை. ஒரு தமிழ்ப் புலவனுக்கு மன்னனின் தீர்ப்பை விமர்சிக்கும் வலிமை இருந்துள்ளது. இதிலிருந்து அற்றைநாட் புலவர்களுக்கும் தமிழுக்கும் எந்தளவுக்கு உயர்வும் சிறப்பும் இருந்தன என்பது நன்கு புலனாகிறது.

### 3.8.9 நன்னன் மரபினரை பாடாதொழிதல்

நன்னனது மரபினரும் அவனது தவறான தீர்ப்பால் புலவர்களால் இடித்துரைக்கப் பெற்றனர். ஒருவன் செய்த குற்றத்திற்கு அவனது பரம்பரையையும் பழிப்பது தொன்றுதொட்டு வழங்கிவரும் ஒரு மரபு.

இளங்கண்டீரக்கோ, இளவிச்சிக்கோ இருவரும் இணைபிரியாத நண்பர்கள் ஆவர். அவர்களிருவரும் ஒருங்கிருந்த போது பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் அங்கு வந்து இளங்கண்டீரக்கோவை மட்டும் கட்டித் தழுவி, இளவிச்சிக்கோவைத் தழுவாது விட்டுவிட்டார். விச்சிக்கோ இதற்கு என்ன காரணம் என்று புலவரிடம் கேட்க அதற்கு அவர் இளவிச்சிக்கோ நன்னன் மரபினர் என்பதாலேயே தழுவாது விடுத்தேன் என்று கூறியதை,

"\. . . .      . . . .      . . . . பொலந்தேர்

நன்னன் மருகன் அன்றியும் நீயும்

முயங்கற் கொத்தனை . . . .      . . . ."(32)

என்ற அடிகள் விளக்குகின்றன. இதன்மூலம் நன்னன் செய்த தவற்றிற்கு அவனது பரம்பரையையே பாடாதொழிவது அறியப்படுகிறது.

## 3.9 பசு மேய்தலும் கண்களைக் கெடுத்தலும்

துளு நாட்டைச் கோசர் என்னும் மரபினர் சீரும் சிறப்புமாகக் கோலோச்சி வந்தனர். அவர்களது ஆட்சிப் பகுதிக்குள் அன்னி என்பவன் வாழ்ந்து வந்தான். அவனது மகளது பெயர் மிஞிலி என்பதாகும். ஒரு முறை அன்னியின் பசு கோசரின் வயற்பகுதியில் நுழைந்து அங்கு விளைந்திருந்த பயிற்றை மேய்ந்து விட்டது. இச்செயலைக் காவலர்கள் கோசரிடம் தெரிவித்தனர். கோசர் முன்னிலையில் இவ்வழக்கு விசாரணைக்கு வந்தது. அவரிடம் அன்னி, பசு பயிரை மேய்ந்தது உண்மைதான் அதற்காகத் தன்னை மன்னிக்கும்படியும் வேண்டினான். இருப்பினும் கோசர் அதனைச் செவிமடுத்துக் கேளாது தண்டனையாக அன்னியின் கண்களைக் குத்திக் குருடாக்கினர். பசுவை முறையாகக்

காவல் செய்யாத குற்றத்திற்கு அன்னிக்குத் தண்டனை மிகக் கொடிய முறையில் வழங்கப் பெற்றதை,

“பாசிலை அமன்ற பயிறா புக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
. . . . . . . . . . . . . . . . . . ”(33)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

நாட்டில் தலைமைப் பொறுப்பில் இருப்பவர்கள் தாம் செய்யும் எச்செயலையும் சிந்தித்து செயல்படுத்த வேண்டும். அஃறிணை உயிரான பசு பயிரை மேய்ந்த குற்றத்திற்கு அதன் உரிமையாளனான அன்னியைப் பழிவாங்கியது மிகக் கொடிய செயலாகும். கோசர் பசு சேதப்படுத்திய அளவிற்கு அன்னிக்குத் தண்டம் விதித்து இருப்பின் இச்செயல் விமர்சனத்திற்குள்ளாயிருக்காது.

### 3.9.1 கோசரைப் பழிவாங்கல்

கோசர் புரிந்த கொடூரச் செயலினால் சினமுற்ற அன்னியின் மகள் மிஞிலி, கோசரைப் பழிவாங்க உண்ணாமலும், புத்தாடை அணியாமலும் இருந்தாள். மிஞிலி, திதியன் என்னும் சிற்றரசன் உதவியோடு அக்கோசரை வென்று தனது சினம் தணிந்தாள். இதனை,

“ஊர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்தும் உண்ணாள் வாலிதும் உடாஅள்
சினத்திற் கொண்ட படிவ மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்

செருவியல் நன்மான் றிதியர்க் குறைத்தவர்

இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய

அன்னி மிஞிலி போல"(34)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. தந்தையின் கண்ணைக் குத்தி அதன் வனப்பைக் கெடுத்த கோசரை மிஞிலி வென்ற செய்தியை,

". . . .   . . . .   . . . . தந்தை

கண்கவின் அழிந்ததன் றப்பற் றெறுவர

வொன்றுமொழிக் கோசர் முரண் போகிய

கடுந்தேர்த் திதியன் அழுந்தை கொடுங்குழை

அன்னி மிஞிலி இயலும்"(35)

என்ற அடிகள் விளக்குகின்றன. அக்காலத்தில் குற்றங்களுக்குத் தண்டனை வழங்குதலில் கண்களைக் குத்திக் கெடுத்தல் என்பது கொடுமையானதாகும்.

இப்பாடலின் வழி மிஞிலியின் பழிவாங்கும் நோக்கம் வெளிப்படுகிறது. அன்னி கண்ணைக் குத்திக் கெடுத்த கோசரை மிஞிலி திதியன் என்பவருடன் சேர்ந்து அவரைக் கொன்று தனது பழிவாங்கலை நிறைவேற்றினாள்.

## 3.10 கள்ளூர்த் தலைவனது குற்றமும் அவன் பெற்ற தண்டனையும்

சங்க காலத்தில் களவு, கற்பு என்னும் இருவகைப் பிரிவுகள் இருந்தன. தலைமக்களது திருமணத்திற்கு முன்னுள்ள உன்னதத் தொடர்பு களவு என்பதாகும். கள்ளூர் என்னும் ஊரில் தலைமக்கள் களவு இன்பத்தில் ஈடுபட்டு மகிழ்ந்து திளைத்தனர். தலைவன் தலைவியிடத்து

அன்பு கொண்டது போல் நடித்து அவளது இளமை நலனை அனுபவித்து விட்டுப் பின்பு தான் இதற்கு முன் தலைவியைக் கண்டதில்லை என்று பொய் கூறினான். சான்றோர் கூடிய அறங்கூறு அவையத்தில் தலைவன் செய்த குற்றத்திற்கும் பொய் கூறியதற்கும் தண்டனையாகப் பெரிய மரத்தின் கிளைகளில் கட்டி வைத்து அவன் தலையின் மீது சுடுநீற்றைக் கொட்டினர். இதனை மதுரைத் தமிழ்க் கூத்தனார் காவன் மள்ளனார்.

"....  ....  ....  கள்ளூர்த்
திருநுதற் குறுமகள் அணிநலம் வௌவிய
வறனி லாளன் அறியேன் என்ற
திறனில் வெஞ்சூள் அறிகரி கடாஅய்
முறியார் பெருங்கிளை செறியப் பற்றி
நீறுதலைப் பெய்த ஞான்றை
வீறுசால் அவையத் தார்ப்பினும் பெரிதே"(36)

என்ற அடிகளில் கூறியுள்ளார்.

### 3.10.1 பெண்நலம் நுகர்தல் குடிக்கு இழுக்கு

அக்காலத்தில் பெண்ணைக் காதலித்துக் கைவிட்ட குற்றத்திற்கு கொடுமையான தண்டனை வழங்கப் பெற்றுள்ளது. அறங்கூறவையத்தார் கள்ளூர்த் தலைவன் பெண்ணை ஏமாற்றிய குற்றத்திற்குத் தண்டனையாகச் சுடுநீற்றினைத் தலையில் கொட்டினர். அக்காலத்தில் அகவாழ்க்கையில் களவு ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்றாக இருந்ததால் தான் பெண்ணைக் காதலித்துக் கைவிடுதல் முதலான தவறுகள் நிகழ்ந்தன.

தலைவன் தலைவியை ஏமாற்றிய செய்தியை இருபாடல்களில் கலித்தொகை(40, 135) குறிப்பிடுகிறது.

பூவில் தேன் குடித்த வண்டு அப்பூவைவிட்டு அகல்வது போல தலைவியிடம் இன்பம் நுகர்ந்த தலைவன் அவளை விட்டு அகன்ற செய்தியை,

"பெண்டிர் நலம் வௌவித் தன்சாரல் தாதுண்ணும்

வண்டிற் றுறப்பான் மலை . . . . . . . ."[37]

என்ற அடிகளின் வழி கபிலர் விளக்கியுள்ளார்.

தலைவன் தலைவியிடம் இன்பம் நுகர்ந்துவிட்டு அவளை மணம் புரியாது காலம் தாழ்த்துதல் அவனது குடிக்குப் பெரிய குற்றமாகும் என்பதனை நல்லந்துவனார்,

"கடிமலர்ப் புன்னைக்கீழ் காரிகை தோற்றாளை
தொடி நெகிழ்ந்த தோளாகத் துறப்பா யான் மற்றுநின்
குடிமைக்கண் பெரியதோர்க் குற்றமாய்க் கிடவாதோ"[38]

என்ற அடிகளில் குறிப்பிட்டுள்ளார்.

## 3.11 அரசாணை மீறுதல்

பாலை நிலத்துச் சிற்றரசன் தன் ஏவலின் கீழ் பணிபுரிபவர்களிடம், காட்டு வழியில் வரும் வழிப்போக்கர்கள் கொண்டு வரும் பொருளைக் பறிக்குமாறு ஆணையிட்டான். ஒருமுறை அவ்வழியே வந்த மக்கள் எவ்விதப் பொருளையும் கொண்டுவராததால் அவர்களை எவ்விதத் துன்புறுத்தலுக்கும் உட்படுத்தாது வீரர்கள் விட்டுவிட்டனர். அரசனிடம் இதனைச் சென்று தெரிவித்தனர். வழிப்போவார் ஒன்றும் கொண்டு வரவில்லையென்றாலும் அவர்களது உயிரையாவது எடுத்திருக்க வேண்டும். அவ்வாறு எடுக்காதது மறவர்கள் செய்த குற்றம் என்று

கூறி அம்மறவர்களுக்குப் புலித்தோலையும் யானைத் தந்தத்தையும் தண்டமாக விதித்ததைக் கடுந்தொடைக் காவினார்,

"சுரங்கெழு கவலை கோட்பாற் பட்டென
வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்
கைப்பொருள் இல்லை யாயினும் மெய்க்கொண்
டின்னுயிர் செகாஅர் விட்டகல் தப்பற்குப்
பெருங்களிற்று மருப்பொடு வரியதள் இறுக்கும்
அறனில் வேந்தன் ஆளும்"(39)

என்ற பாடலடிகளில் சுட்டியுள்ளார். வழிப்போக்கர் கைப்பொருள் ஒன்றும் கொண்டுவரவில்லையெனினும் அவர்தம் உயிரையாவது எடுத்திருத்தல் வேண்டும் என்ற அரசனின் எண்ணமே ஏவலர்க்குத் தண்டம் விதித்தற்குக் காரணமாகும். அரசனது ஆணையை யாரும் மீறக் கூடாது, மீறினால் தண்டனை கொலையாகும். ஆனால் இவ்விடத்தில் கொலைத் தண்டனை கொடுக்கப்படாது தண்டம் மட்டும் விதிக்கப்பட்டுள்ளது.

பாலை நிலத்து மறவர் சுரவழியே வந்த வாட்போரில் சிறந்த வணிகரின் தலையை வெட்டியதை மதுரைக் காஞ்சிப்புலவர்,

"விளரூன் தின்ற வீங்குசிலை மறவர்
மைபடு திண்தோள் மலிர வாட்டிப்
பொறைமலி கழுதை நெடுநிறை தழீஇய
திருந்துவாள் வயவர் அருந்தலை துணித்த"(40)

என்ற பாடலில் குறிப்பிட்டுள்ளார். வழிப்போக்கரைத் துன்புறுத்தலும் மனிதவுயிரை மனிதன் எடுக்கும் கொடூரமும் அக்கால மக்களிடம் இருந்துள்ளது. மேற்கூறிய பாடலில் கூறப்பெற்ற செய்தி அரசனது

ஆணையின்படி நிகழ்ந்தது போன்ற குறிப்பில்லை. அரசாணை மீறப் பெற்றதற்கு ஏவலர்க்குத் தண்டம் விதிக்கப் பெற்றது. இது அக்காலத்தில் பெருங்குற்றமாகக் கருதப் பெற்றது. ஆறலைத்தல் பாலைநிலத் தொழிலாக இருந்ததால் வழிப்பறி குற்றமாகக் கருதப்படவில்லை.

### 3.11.1 பற்களைப் பிடுங்குதல்

சோழன் தன் ஆட்சிக்கு உட்பட்ட எழினி என்பவனைத் தன்னுடன் யானை வேட்டைக்கு அழைத்தான். ஆனால் எழினி சோழனுடன் செல்ல இசையவில்லை. இதனால் சினமுற்ற சோழன் மத்தி என்பவனைக் கல்வியறிவில்லாத எழினி மீது போர் தொடுக்குமாறு ஏவினான். அரசநெறியினை அறியாத எழினியும் களத்தின் முதலிலேயே அகப்பட்டு வீழ்ந்துபட்டான். அவனது பல்லைப் பிடுங்கி வெண்மணி என்னும் கோட்டை வாயிற் கதவில் பதித்ததை மாமூலனார்,

"கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி
நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தார்ப் பட்ட
கல்லா வெழினி பல்லெறிந் தழுத்திய
வன்கண் கதவின் வெண்மணி வாயில்
மத்தி . . . . . . . . . . . . . . . ."(41)

என்ற அடிகளில் சித்தரித்துள்ளார். மேற்கூறிய பாடற் கருத்தின்படி வேந்தனது ஆணையை மீறுதல் என்னும் குற்றத்திற்குத் தண்டனை கொலையாகும். ஆணையை மீறிய எழினியைக் கொலை செய்ததோடு அவனது பற்களையும் பிடுங்குதல் மிகவும் கடுமையான தண்டனையாகும். இது முறையற்ற செயலாகும்.

### 3.11.2 கணைக்கால் இரும்பொறையின் இரக்கமின்மை

சேரன் கணைக்கால் இரும்பொறை கடற்கரைச் சோலையையுடைய தொண்டி என்னும் நகருக்குத் தலைவன். இவன் மூவன் என்பவனைப் போரில் வென்றான். சேரன் போரில் தான் வென்றதைக் கொண்டாடும் விதமாக மூவனைக் கொன்று அவனது பற்களைப் பிடுங்கிக் கொண்டு வந்து தனது கோட்டை வாயிற் கதவில் பதித்தான். இதனைப் பொய்கையார் என்னும் புலவர்,

> ". . . . . . . . . . . . . . . மூவன்
>
> முழுவலி முள்ளெயி றழுத்திய கதவிற்
>
> கானலந் தொண்டிப் பொருநன் . . . ."(42)

என்ற அடிகள் விளக்குகின்றன.

போரில் வென்றவர் தோற்றவரது பல்லைப் பிடுங்கித் தமது கோட்டை வாயிற் கதவில் பதித்தல் என்பது பண்டை வழக்கமாக இருந்துள்ளது.

போரில் ஒருவர் மற்றொருவரை வெல்வது இயல்பான நிகழ்ச்சி. போரில் தோற்றவர் வெளியே தலைகாட்ட முடியாமல் மிகவும் துன்பப்பட்டு வருந்தி நிற்பர். தோற்பவருக்கு அதுவே பெரிய தண்டனையாகவும் இருக்கும். அதுமட்டும் போதாதென்று அவர்தம் பல்லையும் பிடுங்குதல் என்பது மிகவும் கொடுமையான நிகழ்ச்சியாகும்.

போரின் காரணமாக நிகழ்ந்த இச்சொல் புலவர்களால் இடித்துக் கூறப்பெறவில்லை.

## 3.12 இறை விதித்தல்

இறை, வரி, புரவு என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்களாகும். "குடிமக்களைப் புரத்தல் காரணமாக எழுந்தமையின் புரவு என்றும் அரசனிடத்து குறித்த காலத்தில் இறுக்கப்பட வேண்டியமையின் இறை எனவும் பட்டது."(43)

அரசரின் கடமை மக்களைப் புரத்தல். மக்களைக் காத்தற் பொருட்டுப் படை முதலியவற்றை அரசர் அமைத்தனர். அரசாங்கத்திற்குரிய வேறு செலவிற்கும் அரசர் குடிமக்களை எதிர்பார்த்தனர். இத்தகைய செலவிற்கென விதிக்கப்பட்டு அரசனுக்குத் தரப்படுவதே வரி.

மன்னன் தன் கீழ் வாழும் மக்களுக்கு முறையான வரியை விதிக்க வேண்டும். முறையான வரிவிதிக்காவிடில் அம்மன்னனது செங்கோல் வளையும். மக்கள் பசி, பட்டினியால் வாடி விடுவர் அம்மன்னனை முதலாகக் கொண்டு விளங்கும் சமுதாயம் உலகத்தில் செல்வாக்கு இழந்து விடும். மன்னன் தன் மனம் போன போக்கில் வரி விதித்தல் கூடாது என்று புலவர்களும் மன்னர்களும் குறிப்பிட்டுள்ளனர். இறுக்கும் இறையின்றி மிக்க இறைபெறுதலை அக்கால அரசர் வெறுத்தனர்.

### 3.12.1 பழி தூற்றல்

பாண்டிய நெடுஞ்செழியன் தான் பகைவரை வெல்லாவிடில், எம் அரசன் கொடிய வரி பெறும் அரசனென்று குடிமக்கள் கருதிக் கண்ணீர் பரப்பிப்

பழி தூற்றும் தன்மையனாவேன் என்று கூறியதை,

"கொடியனெ மிறையெனக் கண்ணீர் பரப்பிக்
குடிபழி தூற்றும் கோலே னாகுக"(44)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இப்பாடற் கருத்தின்படி மிகுவரி இறுத்தல் என்பது குடிகளுக்கு அளிக்கப்படும் துன்பம். எனவே அது மக்களுக்கு இழைக்கும் குற்றமாகும் என்பது உணரப்படுகிறது.

சோழன் நலங்கிள்ளி முறைமைக்கு மேலான இறை பெறும் அரசனை மிகுதியில்லாத ஆண்மையையுடைய உள்ளஞ் சிறியோன் என்று கூறியதை,

"குடிபுர விரக்கும் கூரி லாண்மைச்
சிறியோன் . . . . . . . . . . . . ."(45)

என்ற அடிகள் குறிப்பிடப்படுகின்றன.

இறை தொடர்பான பாடல்கள் பட்டினப்பாலை (116-125). புறநானூறு (35, 72, 75, 184), பெரும்பாணாற்றுப்படை (81) முதலான இலக்கியங்களில் காணப்படுகின்றன.

### 3.12.2 இறையிறுக்காமை

வெள்ளைக்குடி நாகனார் என்னும் புலவர் தன் வறுமையைக் கூறிக் கிள்ளிவளவனிடம் நிலத்திற்கு வரி நீக்கம் பெற்றார் என்பதனை,

"குடிபுறந் தருகுவை யாயினின்
அடிபுறந் தருவே ரடங்கா தோரே"(46)

என்ற பாடலடிகள் சுட்டுகின்றன. அரசியலுக்கு மாறான குற்றங்களுள்

ஒன்று இறையிறுக்காமை. இதற்குரிய தண்டனை சொத்துப் பறிமுதலாகும். வெள்ளைக்குடி நாகனார் கிள்ளிவளவனிடம் வரி நீக்கம் பெறவில்லையெனில் இறையிறுக்காமைக்கு உரிய தண்டனையாகத் தனது சொத்துக்களை இழந்திருப்பார். இறை என்பது அக்காலத்தில் இன்றியமையாததாகக் கருதப்பெற்றது. மிகை வரியைப் புலவர்களும், மன்னர்களும் தவறு என்று குறிப்பிட்டுள்ளனர்.

## 3.13 பொய்க்கரி

சங்ககாலத்தில் 'கரி' என்ற சொல் தற்போது சாட்சி என்ற பொருளில் ஆளப்பட்டு வருகிறது. ஒருவர் தான் அறியாத ஒன்றை அறிந்தது போலவும், அறிந்த ஒன்றை அறியாதது போலவும் சான்றோர் கூடிய அவையில் கூறுவது 'பொய்க்கரி' என்று அழைக்கப்படும். பொய்க்கரி என்பதற்கு "பொய்சாட்சி, பொய்ச்சான்று"(47) என்னும் பொருள்களுண்டு.

அக்காலத்தில் வழக்கினை நடத்தி முடிவு செய்வதற்குச் சாட்சிகளை விசாரிக்கும் மரபு வழக்கிலிருந்தது. பொய், ஐம்பெரும் குற்றங்களுள் ஒன்றாகக் கருதப்பட்டது.

### 3.13.1 பொய்க்கரிக்குத் தண்டனை

கள்ளூர் என்னும் ஊரின் தலைவன் தலைவியது இன்ப நலனை நுகர்ந்து விட்டு; பின் அவளை அறியேன் என்று அறங்கூறு அவையத்தில் பொய் கூறினான். அறங்கூறவையத்தார் இவ்வழக்கை விசாரித்து அதற்குத் தண்டனையாக அத்தலைவனது தலையில் கொட்டியதை,

"திறனில் வெஞ்சூள் அறிகரி கடாஅய்"(48)

என்ற அடி சுட்டுகிறது.

### 3.13.3 மரத்தின் கவினழிதல்

பொய்க்கரி உரைப்பவர் அழகான மரத்தின் கீழ் தங்கினால் அம்மரம் வெம்மையால் வாடித் தன் கவினை இழந்து விடும் என்பதனை,

"கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி

எரிபொத்தி என்நெஞ்சம் சுடுமாயின் எவன்கொல்லோ"(49)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

### 3.13.3 ஆன்றோர் செயல்

அறிவால் நிறைவுற்ற சான்றோர்க்குத் தாம் கண்டறிந்ததொன்றை மறைத்துப் பொய்க்கரி கூறும் இயல்பில்லை என்பதனை,

"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை"(50)

என்ற அடி உணர்த்துகிறது.

### 3.13.4 திங்களின் இயல்பு கெடுதல்

பலவாய கதிர்களையுடைய திங்கள் தலைவன் இருக்கும் இடத்தை அறிந்தும் அவ்விடத்தைத் தலைவி கேட்டும் கூறவில்லை. அதனால் சினமுற்ற தலைவி திங்களிடம் நீ அறிந்த அளவு சான்று கூறாமல் பொய்யை மேற்கொண்டது காரணமாக நல்ல அழகிழந்த என்தோள் போல வாட்ட முற்று நாள்தோறும் உனது கதிர் சிறுகச் சிறுகக் குறையும். அதனாலே நீ தலைவனைக் காட்டுவது இயலாது என்று கூறியதை,

"பங்குசெறிந் தன்ன பல்கதி ரிடையிடைப்

பான்முகந் தன்ன பசுவெண் ணிலவின்

. . . . . . . . . . . . . . . . . . .

. . . . . . . . . . . . . . . . . . .

அறிகரி பொய்த்தலின் ஆகுமோ அதுவே"[51]

என்ற அடிகள் சிறப்பிக்கின்றன. அஃறிணைப் பொருளான திங்களும் பொய் கூறினால் தன் இயல்பில் மாறிவரும் என்பதனை மேற்கூறிய பாடலடிகள் விளக்குகிறது. சங்க காலத்தில் பொய்க்கரி கூறுதலைச் சான்றோர் அறவே வெறுத்து ஒதுக்கியுள்ளனர்.

## 3.14 எண்வகை மணங்கள்

அக்காலத்தில் மக்களிடத்தில் எண்வகை மணங்கள் வழக்கிலிருந்ததை,

"மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்"[52]

என்ற நூற்பா விளக்கும். அவை,

1. பிரமம்
2. பிரசாபத்தியம்
3. ஆரிடம்
4. தெய்வம்
5. காந்தர்வம்
6. அசுரம்
7. பைசாசம்
8. இராக்கதம்

என்பனவாகும்.

### 3.14.1 இராக்கத மணம்

மறுவில்லாத மதிபோல விளங்கும் முகத்தினையுடைய மகளிரை வலிதிற் கொண்டு சென்று புரியும் மணம் இருந்தது. இதனை,

"மையின் மதியின் விளங்கு முகத்தாரை

வெளவிக் கொளலும் அறனெனக் கண்டன்று"[(53)]

என்ற அடிகள் சுட்டுகின்றன. மகளிரை வலிதிற் மணம் புரிதல் எண்வகை மணங்களுள் இராக்கதம் என்பதில் அடங்கும். இது அக்காலத்தில் குற்றமாகக் கருதப்பட்டு அதற்குத் தண்டனை வழங்கப்படவில்லை. இராக்கதமும் ஓர் அறமாகக் கருதப்பட்டது.

### 3.15 தற்கொலை

உடலிலுள்ள உயிர், எவ்வித முயற்சியுமின்றி முதுமையாலோ, நோய் காரணமாகவோ உடலை விட்டுப்பிரிதல் மரணம் எனப்படும். அவ்வாறின்றி சுயமுயற்சியாலோ, பிறராலோ உடலை விட்டு உயிர் பிரிக்கப்படுதல் கொலை எனப்படும். ஒருவர் தன்னுடலை விட்டுத் தானே தன் உயிரைப் பறித்தலைத் 'தற்கொலை' என்பர். கொலை, அக்காலத்தில் குற்றமாகக் கருதப் பெற்றது. ஆனால் தற்கொலை முயற்சி குற்றமாகக் கருதப் பெறவில்லை. சங்ககாலத்தில் வழக்கிலிருந்த வடக்கிருத்தல், உடன்கட்டை, மடலேறுதல் முதலான மூன்றையும் தற்கொலை முயற்சிகளாகக் கருத இடமுண்டு.

#### 3.15.1.1 வடக்கிருத்தல்

மனம் நொந்து போன மன்னரும், போரில் புறப்புண்பட்டு நாணி வருந்தும் வடக்கு நோக்கி அமர்ந்து உண்ணா நோன்பிருந்து உயிர் துறப்பது வடக்கிருத்தல் எனப்படும். வடக்கிருத்தலுக்கு "வானுலகம் விரும்பினோர் இவ்வுலக நுகர்ச்சியைத் துறந்து பட்டினியால் உடலை மெலிவித்து, யோக முயற்சியால் உயிரை நீத்தற்குத் தாம் வாழ்ந்த

இடத்தை விட்டு வடதிசையில் சென்று தங்குதலும் மீளாமல் நியமத்துடன் வடக்கு நோக்கிச் செல்லுதலும் மரபு. இதனை உத்ரகமனம் என்றும் மகாப்பிரத்தானம் என்றும் கூறுவர். தமிழில் இதனை வடக்கிருத்தல் என்பர்"(54) என்று கலைக்களஞ்சியம் விளக்கம் கூறுகிறது.

'பாட்டும் தொகையும்' என்னும் நூல் "உயிர் துறக்குந் துணிவுடன் வடக்கு நோக்கி இருந்து பிரயோ பவேச விரதத்தை மேற்கொள்ளுதல்"(55) என்று பொருள் கூறுகிறது. "உண்ணாமையை மேற்கொண்டு சாதற்காக வடக்கு முகமாக அமர்ந்திருத்தல்"(56) என்று வடக்கிருத்தலுக்குக் கழகத் தமிழகராதி பொருள் சுட்டுகிறது.

### 3.15.1.2 புதல்வர்களின் மண்ணாசை

கோப்பெருஞ்சோழன் தன் புதல்வர்களின் மண்ணாசை காரணமாகப் பெருந்துயரடைந்து வடக்கிலிருந்து உயிர் துறந்தான். வடக்கிருந்த சோழனை மனமுருகப் பாடியவர்கள் பிசிராந்தையார், புல்லாற்றூர் எயிற்றியனார், பொத்தியார், கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் முதலானோர் ஆவர்.

### 3.15.1.3பூதனாரின் புலம்பல்

கருவூர்ப் பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார் சோழனிடம், ஆற்று நடுவேயுள்ள தீவில் மரநிழலில் இருந்து உண்ணா நோன்பால் உடம்பை வாட்டி வடக்கிருத்தலை மேற்கொண்டிருக்கும் வேந்தே! நின் கருத்துப்படியே சான்றோர் பலர் வடக்கிருப்ப அவருள் ஒருவனாய் யானும் முற்பட வாராமையால் என்னோடு புலந்து வாய் பேசாது இருக்கின்றனை போலும் என்று கல்லும் கனியக் கூடிய,

"உள்ளாற்றுக் கவலைப் புள்ளி நீழல்
முழூஉ வள்ளூர முணக்கு மள்ள
புலவுதி மாதோ நீயே
பலரா லத்தைநின் குறியிருந் தோரே"(57)

என்ற பாடலைப் பாடினார்.

### 3.15.1.4 புறப்புண் பட்டமை

சேரமான் நெடுஞ்சேரலாதன் 'வெண்ணி' என்னும் இடத்தில் கரிகால் வளவனொடு போர் புரிந்தான். அப்போரில் வளவன் எறிந்த வேல் நெடுஞ்சேரலாதன் மார்பில் பாய்ந்து முதுகுவழிச் சென்று புறப்புண்பட்டது. போரில் புறப்புண்பட்டதால் மிகவும் நாணி நெடுஞ்சேரலாதன் தன் வாளுடன் வடக்கிருந்ததை,

"கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலை
பொருந்துபுண் ணாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென"(58)

என்னும் அடிகளும்,

"தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தனன் . . . . . . . . . ."(59)

என்னும் அடிகளும் சித்தரிக்கின்றன.

### 3.15.2.1 உடன்கட்டை

கணவனை எரியூட்டும் சிதையில் மனைவி தீப்பாய்ந்து உயிரை விடுவது 'உடன்கட்டை' எனப்படும். "இடைக்கற்பென்பது கணவனுடன்

தானும் உயிர் மடிதலாகும். அதனைப் பெண்டிர் கணவனின் சிதையிலோ அல்லது தீ வளர்த்தோ தீப்புகுதல் அல்லது உயர்ந்த மலையில் ஏறிக் குதித்து உயிர்விடலாகிய வரை பாய்தலின் மூலம் நிறைவேற்றுவர்."(60) உடன்கட்டை ஏறி உயிர்விடுதலை 'இடைக்கற்பு' என்பர்.

### 3.15.2.1 பெருங்கோப்பெண்டு உடன்கட்டை ஏறுதல்

பாண்டிய நாட்டின் வடபகுதியான ஒல்லையூர் நாட்டைச் சோழர்கள் கைப்பற்றினர். பூதப்பாண்டியன் சோழனோடு போர் செய்து வென்று ஒல்லையூர் பகுதியைத் தமது எல்லைக்குள் கொண்டு வந்தான். இதனால் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் என்று புலவர்களால் அழைக்கப் பெற்றான். அவனது பெயரால் நாஞ்சில் நாட்டில் 'பூதப்பாண்டி' என்ற ஊரொன்று உள்ளது. பூதப்பாண்டியன் பாண்டிய நாட்டைச் சிறப்புற ஆட்சி செய்தான். அவன் இறந்தவுடன் அவனது மனைவி பெருங்கோப்பெண்டு என்பவள் கல்வி கேள்விகளையும், அரசியல் நீதிகளையும் நன்கு பயின்றுணர்ந்த மறமங்கையாதலால் கணவன் இறந்தவுடன் தீப்பாய்ந்து உயிரைவிடக் கருதினாள். சான்றோர் கூறியும் பாண்டிய நாட்டிற்கு நல்ல வேந்தர் இல்லாத போதும் அவள் உடன்கட்டை ஏறத்துணிந்தாள். தன்னைத் தடுத்த சான்றோரிடம்,

"பல்சான் றீரே பல்சான் றீரே
செல்கெனச் சொல்லா தொழிகென விலக்கும்
பொல்லாச் சூழ்ச்சிப் பல்சான் றீரே
அணில்வரிக் கொடுங்காய் வாள் போழ்ந்திட்ட
காழ்போ னல்விளர் நறுநெய் தீண்டா
தடையிடைக் கிடந்த கைபிழி பிண்டம்

வெள்ளெட் சாந்தொடு புளிப்பெய் தட்ட
வேளை வெந்தை வல்சி யாகப்
பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்
உயவற் பெண்டிரே மல்லே மாதோ
பெருங்காட்டுப் பண்ணிய கருங்கோட பீமம்
நுமக்கரி தாகுக தில்ல வெமக்செம்
பெருந்தோட் கணவன் மாய்ந்தென வரும்பற
வள்ளித ழவிழ்ந்த தாமரை
நள்ளிரும் பொய்கையும் தீயுமோ ரற்றே"[61]

என்ற பாடலைப் பாடினாள்.

பெருங்கோப்பெண்டு கைம்மை நோன்பு நோற்பதினால் ஏற்படும் வேதனைகளைக் கூறி, அதனால்தான் அவற்றை விடுத்து உடன்கட்டை ஏறப் போவதாகக் கூறினாள். அவள் தன்னைத் தடுத்த சான்றோரிடம் கணவன் இறந்தவுடன் தீப்புகுக என்று கூறாமல் தன்னைத் தடுப்பதை எண்ணி வருந்தினாள். அவள் பூதப்பாண்டியன் இறந்தவுடன் அவன் சிதையில் விழுந்து உயிர் துறந்தாள். அவள் உடன்கட்டை ஏறிய செய்தியைப் பேராலவாயர் என்ற புலவர், பெருங்கோப்பெண்டு உடன்கட்டை ஏறிய இடம் காட்டிடத்துள்ள காடுகிழாள் கோவிலுக்கு முன்பாகும். அரசமாதேவி தீப்புகுவதற்குக் கோயிலின் முன் தீ மூட்டப்பட்டிருந்தது. தீயானது நன்கு எரியத் துவங்கியதும் பெருங்கோப்பெண்டு நீராடித் தன் கூந்தலின் ஈரம் உலராது நீர் வழிய, மிகுதியான வருத்தத்துடன் கண்களில் நீர் வழிய வலம் வந்தாள். பின் தீயுள் பாய்ந்து உயிர் துறந்தாள் என்று பாடியுள்ளதை,

"யானை தந்த முளிமர விறகிற்
கானவர் பொத்திய ஞெலிதீ விளக்கத்து
மடமான் பெருநிரை வெகுதுய லெடுப்பி
மந்தி சீக்கு மணங்குடை முன்றிலின்
நீர்வார் கூந்த லிரும்புறந் தாழப்
பேரஞர்க் கண்ணள் பெருங்காடு நோக்கித்
தெருமரு மம்ம தானேதன் கொழுநன்
முடிவுகண் டுயிலாக் கடியுடை வியனகர்ச்
சிறுநனி தமிய ளாயினும்
இன்னுயிர் நடுங்குந்த னிளமைபுறங் கொடுத்தே"(62)

என்ற பாடல் விளக்குகிறது.

மேற்கூறிய பாடல்களின் வழி பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோபெண்டு தீப்பாய்ந்த செய்தி உணரப்படுகிறது. புலவர்கள் பெருங்கோப்பெண்டை உடன்கட்டை ஏற வேண்டாமென்று கூறினரேயன்றி அதனைக் குற்றமாகக் கருதவில்லை.

"சதி என்னும் உடன்கட்டை ஏறும் பழக்கம் சங்ககாலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை"(63) என்னும் கருத்து பொருந்தாது. புறநானூற்றுக் குறிப்புகளின்படி மேற்கூறிய செய்தி பொருந்தி வராது.

### 3.15.3 மடலேறுதல்

காதலும் வீரமும் தமிழர்தம் இரு கண்கள். காதல் மணம் தமிழரின் இயல்பு மணம். காதலுற்ற தலைவியும் தலைவனும் முறையே அறத்தொடு நிற்றல், மடலேறுதல் ஆகிய அறச் செயல்களின் வழி வரைவுக்கு முயலுவர். தலைவன்தன் காதல் நிறைவேறாதபோது தலைவியைப்

பெறுதல் பொருட்டு மடலேறுவான். தலைவியின்பால் கொண்டுள்ள ஆறாக்காதல் காரணமாகக் காதலியை மணத்தல் வேண்டும் என்னும் நோக்கம் கொண்ட தலைவன் மடலூர்ந்து தன் காதலைச் சான்றோருக்கு முறையாக அறிவித்துக் களவைக் கற்பாக்கும் திறன் போற்றற்குரியது. தலைவனின் மடலேற்றம் குறித்த நிகழ்வுகளைச் சங்கப் புலவர்கள் பதிவு செய்துள்ளனர்.

தலைவன் தலைவியைப் பெறுதற் பொருட்டு மடலேறும் தன் எண்ணத்தினைத் தோழியிடம் வெளிப்படுத்துதல், மடலூர்ந்து தம் காதலை உலகுக்கு அறிவித்தல், சான்றோர்தம் உதவியை நாடுதல், தலைவன் மடலேறியதால் ஊரில் அலர் எழுதல், அலருக்கு அஞ்சிய பெற்றோர் தலைவியைத் தலைவனுக்கே மணம் முடித்தல் முதலான மடல்மா குறித்த நிகழ்வுகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன.

### 3.15.3.1 மடல்மா

மடலேறுதல் பற்றி, "மடல்மா - பனங்கருக்குக் குதிரை, மடலேறுதல் - மடலேந்திக் குதிரை மேலேறி அலர் உண்டாக்கும் செயற்பாடு. காம எண்ணம் முதிர்ந்து தலையெடுத்து நிற்கும்பொழுது, ஆண்மகன் தாம் காதலித்த தலைமகளைக் கூடுவதற்கு விரும்பி மேற்கொள்ளும் ஒரு வகை செயலே மடலேறுதல்"[(64)] எனவும், "தோழி தலைவனது விருப்பத்திற்குச் செவி சாய்க்காது காலந்தாழ்த்தும் போது தலைவன் மடலூரும் தன் எண்ணத்தை அவளிடம் வெளிப்படுத்த, அதற்கு அஞ்சிய தோழி தலைவனை மடல் விலக்கி, தலைவியின்பால் குறையிரந்து அவளைத் தலைவனுடன் இணைத்து வைப்பாள்"[(65)] எனவும் ந.சுப்புரெட்டியார் விளக்குவர்.

இக்கருத்தையே தி.சு.பாலசுந்தரம்பிள்ளை "பனைமடல் கருக்குகளாற் செய்யப்பட்ட ஒரு பொய்க்குதிரையின் மேல் காற் சதைகளறுந்து இரத்தங்குழைந்து கசியும்படி ஏறி தலைவியின் உருவத்தையும் தம் பெயரையும் ஒரு படத்திலெழுதிக் கையிற் பிடித்துக் கொண்டு தலைமகள் இருக்கும் வீட்டிற்கு அருகில் தெருவில் நான்கு முனைகள் கூடும் நடுவிடத்தில் அக்குதிரையைப் பிறரால் இழுப்பித்து வரச் செய்து வெளிப்படையாக எல்லார்க்கும் தனது கருத்தை ஆரவாரத் செய்தலாகும்"(66) என்று குறிப்பிடுவர்.

மேலும் "சங்க காலத்தில் மணத்திற்குமுன் ஒருவன் ஒருத்தியின் உருவமும் பெயரும் எழுதிய ஓலையுடன் குதிரை மேலேறிக் கொண்டு, அவளுக்கும் தனக்குமுள்ள தொடர்பைக் கூறிக் கொண்டு அவளூர்த் தெருவிடைச் செல்லும் அதற்கு உரிமையுடன் களவொழுக்கம் இருந்து வந்துள்ளது"(67) எனவும் குழந்தை குறிப்பிடுவர்.

களவு நிலையில் தலைவியைப் பெறத் தலைவன் மேற்கொள்ளும் முயற்சிகள் யாவும் தோழியிடம் பயிலாத போது, தன்பால் மிக்கெழும் காமக் காழ்ப்பினால் நாணத்தையும், ஆண்மையையும் இழந்து, தலைவன் மடலேறத் துணிவான். அப்பொழுது அவன் உடம்பெல்லாம் நீறுபூசி மார்பில் எலும்பு மாலையும் தலையில் எருக்கம்பூ மாலையும் அணிந்து, கையில் தலைவியின் உருவம் எழுதிய கொடியினைத் தாங்கி, பனங்கருக்காற் செய்த குதிரைக்கு மயிற்பீலி, பூளைப்பூ உழிஞைப்பூ மற்றும் ஆவிரம்பூ ஆகியவற்றால் தொடுத்த மலர்மாலையையும் ஒலிக்கும் மணியையும் அதன் கழுத்தில் அணிவித்து, அதன்மேல் ஏறி அதனைப் பிறரால் இழுக்கச் செய்து, தலைவியின் வீட்டருகில் நாற்சந்தியில் நின்று,

தலைவிக்கும் தனக்குமுள்ள காதலைப் பல்லோர் அறிய வெளிப்படுத்துவான். தலைவியைப் பெறுதற் பொருட்டு மேற்கொள்ளும் தலைவனின் இச்செயலே 'மடலூர்தல்' எனப்படும். இதனை,

"மாஎன மடலும் ஊர்ப; பூவெனக்
குவிமுகிழ் எருக்கம் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப;
பிரிதும் ஆகுப; காமம் காழ்க்கொளினே"(68)

என்ற சங்கப் பாடலால் அறியலாம்.

### 3.15.3.2 மடல் மரபு

மடல்மா கூறுதல் மற்றும் மடலூர்தல் போன்றவை தலைவனோடு மட்டுமே தொடர்புடைய நிகழ்வுகளாகும். தலைவியைப் பிரிந்து உயிர் வாழ்தலைவிட மடலேறியேனும் அவளைப் பெறுவதே மேல் என்ற எண்ணம் கொண்ட தலைவன், காதல் நிறைவேறாத பொழுது மடலூர்ந்து தன் காதலை வெளிப்படுத்துவான். ஆனால் தலைவி எத்தகு நிலையிலும் மடலேறுதல் வழக்கம் இல்லை.

மடலேறத் துணிந்த தலைவன் தன் வருத்தத்தை வெளிக்காட்டாது அடக்கும் மனதிட்பமும் மடலேறாத அவளது மன உறுதியினையும் எண்ணி வியக்கின்றான்.

தலைவி எத்தகைய காமமிக்க கையறுநிலையிலும் மடலூர்தல் இல்லை. இதனைத் தொல்காப்பியர்,

"எத்திணை மருங்கினும் மகடூ மடன்மேல்
பொற்புடை நெறிமை இன்மையான"(69)

என்று குறிப்பிடுகின்றார்.

பெண்கள் இயல்பாகவே அடக்கமும் நாணமும் மிக்கவர்களாதலால் மடலேறும் வழக்கம் கொண்டிலர் என்பதை அறியலாம்.

### 3.15.3.3 மடல் வகை

"மடலினை ஐந்திணை மடல், பெருந்திணை மடல் என இரு வகைப்படுத்துவர்."(70) ஐந்திணை மடல் - மடல்மா கூறுதல்; பெருந்திணை மடல் - மடலேறி வருதல், ஐந்திணை மடலுக்கும் பெருந்திணை மடலுக்கும் நுண்ணிய வேறுபாடுண்டு. தலைவன் மடலேறுவேன் என்று தோழியிடம் வாயளவிற் சொல்லுதல் ஐந்திணை மடலாகும். இதனைத் தொல்காப்பியர்,

"மடல்மா கூறும் இடனுமார் உண்டே"(71)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம். தலைவன் மடலேறுவேன் என்று வாயளவிற் சொல்வதோடு நில்லாமல் மடலேறி வந்து அலருண்டாக்கும் செயற்பாடு பெருந்திணை மடல் ஆகும். "இதனை, ஏறிய மடற்றிறம்"(72) என்று தொல்காப்பியர் குறிப்பிடுவார். இதில் ஏறிய என வரும் இறந்த கால வினை பெருந்திணை இலக்கணத்தைச் சுட்டுவதாகும்.

ஐந்திணை மடல் - காதல் கைகூடாத நிலையில் தலைவியைப் பெறுதற் பொருட்டு மடலூர எண்ணும் தலைவன் தன் எண்ணத்தினைத் தோழி கேட்க முன்னிலைப் புறமொழியாகவும், உலகியல் மேல் வைத்துக் குறிப்பாகவும், தன் நெஞ்சுக்குச் சொல்வான் போலவும் வெளிப்படுத்துதல் ஐந்திணை மடலின் பாற்படும். மடலேறத் துணிந்த தலைவன் தன்நிலை குறித்துத் தோழியிடம் என் காதல் மடல் தந்தது; அலர் எருக்கம்பூ மாலை தந்தது; மாலைக்காலம் காதல் நோய் தந்தது; நிலவு தனிமைத்

துன்பம் தந்தது; வாடைக்காற்று வாட்டம் தந்தது; அன்றில் பறவையின் அழுகுரல் வருத்தம் தந்தது. இதனால் என்நிலை என்னாகுமோ? யான் இரங்கத் தக்கவனாயினேன்(நற்.152)என்று கூறுகின்றான். மேலும் சேட்படுத்திய தோழியிடம் "இனி மடலேறித் தன் கருத்தை நிறைவேற்றும் பரிகாரம் ஒன்று இருத்தலால் அது செய்து யான் தலைவியை அடைவேன்" (குறுந்.173)என்றும், "நீ மறுத்தாலும் யான் மடலூர்ந்து தலைவியை அடைவேன்" (குறுந்.14) என்றும் "மடலேறி அறங்கூறும் அவையத்துச் சான்றோரின் துணைக் கொண்டு தலைவியை மணப்பேன்" (குறுந்.276) என்றும் கூறுகின்றான். இவ்வாறு தலைவன் மடலேறும் தன் எண்ணத்தினைத் தோழியிடம் சொல்லி, குறையிரந்து நிற்றல் ஐந்திணை மடலாகும்.

பெருந்திணை மடல் - தலைவன் தலைவியை மணக்கவியலாத நிலை ஏற்படும் பொழுது, மடலூர்ந்து தன் காதலை வெளிப்படுத்திச் சான்றோர் துணையால் தலைவியை மணத்தல் பெருந்திணை மடலாகும். மடலூர்ந்து வரும் தலைவன் "காதலி தந்த காதல் நோயினால் இரவும் பகலும் தூங்காது யான் மடலேறும் நிலையுற்றேன் என்றும், என் காம நோய்க்கு மருந்தாக இம்மடல்மா விளங்குகிறது என்றும், என்னைச் சுடும் காமத் தீயினுக்கு நிழல் போல் இம்மடல்மா விளங்குகின்றது என்றும் இம்மடல்மாவைத் தெப்பமாகக் கொண்டு காமக் கடலினை நீந்துவேன் என்றும் (கலி.139) தன் காதல் துயரினைக் கண்டோரிடம் கூறி வெளிப்படுத்துவான். மேலும் சான்றோரிடம் என் காதலி எனக்கு அருளவும், அதனால் என் காதல் நோய் நீங்கவும் வழி செய்யுமாறும் வேண்டுவான் (கலித்.140) தலைவனின் இத்தகு நிலை கண்ட ஊரார் அவன் மீது இரக்கங்கொள்வதுடன் தலைவியின் பெற்றோரையும் பழியும்

கூறுவர். அப்பழிக்கு அஞ்சிய தலைவியின் சுற்றத்தார் பகைவர் பாண்டிய மன்னனுக்கு அஞ்சித் திறை கொடுத்தார் போன்று தலைவியைத் தலைவனுக்கு மனம் முடித்துத் தருவர். இதனை,

"வருந்த மாஊர்ந்து மறுகின் கண்பாட
திருந்திழைக்கு ஒத்த கிளவிகேட்டு, ஆங்கே
பொருந்தாதார் போர்வல் வழுதிக்கு அருந்திறை
போலக் கொடுத்தார் தமர்"(73)

என்ற சங்கப் பாடலால் அறியலாம்.

தலைவன் தலைவியின் அன்பைப் பெறாது வருந்தும் நிலையில் அவள் அன்பைப் பெறுதல் பொருட்டு விரும்பி மேற்கொள்ளும் ஒரு முயற்சியே மடலூர்தல் எனக் கருதப்படுகின்றது. தலைவன் மடலேறும் தன் எண்ணத்தைத் தோழியிடம் வாயளவிற் சொல்லி அவள்பால் குறையிரத்தல் ஐந்திணை மடலாகவும் அவ்வாறு இன்றி மடலேறி வந்து தன் காதலை வெளிப்படுத்துதல் பெருந்திணை மடலாகவும் அமைந்துள்ளதைக் காணலாம். காமமுற்ற தலைவன் மடல்மா கூறுதல் மற்றும் மடலேறுதல் முதலியவற்றிற்கு உரியவனாகின்றான். ஆனால் தலைவி எத்தகு காமம்மிக்க கையறுநிலையிலும் மடலேறித் தன் காதலை வெளிப்படுத்துதல் இல்லை என்பதனையும் அறிய முடிகின்றது. தன் காதல் கைகூடாத காலத்தில் தலைவன் மடலேறித் தற்கொலைக்கு முயன்று இருப்பதைக் காண முடிகின்றது. ஆனால் இத்தகைய மடலேறும் செயலில் பெண்கள் ஈடுபடுவதில்லை என்பதையும் அறிய முடிகின்றது. எவ்வகையில் நோக்கினும் மடலேறுதல் என்பது தற்கொலைக்கு முயன்றதையே பறைசாற்றுகின்றது. உடன்கட்டை ஏறுதல், வடக்கிருத்தல் போன்று மடல் ஏறுதலையும் தற்கொலையின் ஒரு

நிலையாகக் கருதப்படுகின்றது. எனவே, தலைவன் மடல்மா ஏறுதலும் குற்றமாகக் கருதப்படுகின்றது. ஆனால் தலைவன் மடலேறி இறந்ததாக எந்தவொரு சங்க இலக்கியப் பாடலும் குறிப்பாகச் சுட்டிக்காட்டவில்லை. அவன் மடல் ஏறுவதாகவே கூறி இருப்பதைச் சில பாடல்கள் விளக்கிக் காட்டி உள்ளன.

மேற்குறித்த கருத்துக்களின்வழி வடக்கிருத்தல், உடன்கட்டையேறுதல், மடலேறுதல் முதலானவை தற்கொலைக்குச் சமமாகக் கருதப்படுகின்றன. இவற்றிற்குத் தண்டனை வழங்கப்படவில்லை. இவற்றைத் தடுக்க எவ்வித முயற்சிகளும் செய்யப்படவில்லை. இதனை, “தற்கொலையைத் தடுப்பதற்குச் சட்ட முறையான தடையும் அக்காலத்திலில்லை”(74) என்னும் கருத்து விளக்கும்.

அக்கால அரசும், அறங்கூறு அவையமும் மேற்கூறியவற்றைக் குற்றமாகக் கருதி தண்டனை வழங்கியிருப்பின் இது போன்றவை பெருகாமல் தடுக்கப்பட்டிருக்கும்.

### 3.16 கடம்பின் பெருவாயில் நன்னனது செயல்

இவன் பாரம் என்னும் மலைக்குத் தலைவன். இவன் சேரன் தளபதிகளுள் ஒருவனான பிண்டன் என்பவனைப் போரில் வென்றான். இதனைப் பரணர்,

“உறுபகை தரூஉம் மொய்ம்மூசு பிண்டன்
முனைமுரண் உடையக் கடந்த வென்வேல்
இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்ப்
பாரத்துத் தலைவன், ஆர நன்னன்”(75)

என்ற அடிகளில் விளக்கியுள்ளார்.

### 3.16.1 கூந்தலைத் திரித்தல்

நன்னன் பிண்டனை வென்று அவனது உரிமை மகளிரைச் சிறைபிடித்து வந்தான். பிண்டனது உரிமை மகளிரது கூந்தலை அறுத்து அதனைக் கயிறாகத் திரித்து அக்கயிற்றிலே யானையைக் கட்டியதை,

". . . .  . . . .  . . . . பொற்புடை
விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்
வேந்தர் ஒட்டிய ஏந்துவேல் நன்னன்
கூந்தல் முரற்சியிற் கொடிதே"(76)

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன.

### 3.16.2 செங்குட்டுவனின் வெற்றிச் செருக்கு

கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன், சோழர் படைத் தலைவர்களுள் ஒருவனான பழையன் என்பவனைப் போரிலே வென்றான். சேரன் பழையனது உரிமை மகளிரது கூந்தலை அறுத்து அதனைக் கயிறாகத் திரித்தான். அக்கயிற்றைக் கொண்டு பழையனது யானைகளைக் கட்டினான். இதனைப் பரணர்,

"பழையன் காக்கும் கருஞ்சினை வேம்பின்
முழாரை முழுமுத றுமியப் பண்ணி
வாலிழை கழிந்த நறும்பல் பெண்டிர்
பல்லிருங் கூந்தன் முரற்சியாற்
குஞ்சர வொழுகை பூட்டி . . . ."(77)

என்ற அடிகளில் சித்தரித்துள்ளார்.

நன்னன், செங்குட்டுவன் பற்றிய இரு செய்திகளையும் பரணர் குறிப்பிட்டுள்ளார். பற்களைப் பிடுங்கிப் பதித்தல் போல பகை மன்னரின்

உரிமை மகளிரின் கூந்தலை அறுத்துக் கயிறாகத் திரித்தலும் ஒரு போர் மரபாக இருந்துள்ளது.

மன்னர்கள் புரியும் போர்களின் காரணமாகப் பெண்களும் பாதிப்பிற்குள்ளாகியுள்ளனர். அக்கால மன்னர்கள் பலர் பெண்ணென்றும் பாராது அவமானப்படுத்தியுள்ளனர். அக்காலத்தில் ஆண், பெண் என்ற பாகுபடின்றி இருதரப்பினரும் தண்டனையிலிருந்து தப்பவில்லை. தோற்ற மன்னரது மனைவியரைத் துயரத்தில் ஆழ்த்துவது வென்ற மன்னரது வலிமையைவிட அவரது கொடூர மனத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது. இச்செயல் புலவர்களால் குற்றமென்று கடியப்பெறவில்லை.

## 3.17 ஒற்று

நலங்கிள்ளியினது பகுதியைச் சேர்ந்தவன் இளந்தத்தன் என்னும் புலவன். இவன் நெடுங்கிள்ளியிடம் பரிசில் பெற வந்தான். இவனைப் புலவனென்று அறியாத நெடுங்கிள்ளி ஒற்றனென்று கருதி அவனைக் கொல்ல உத்தரவிட்டான். கோவூர்க்கிழார் என்னும் புலவர் நெடுங்கிள்ளியை அணுகி இளந்தத்தன் ஒரு புலவன், அவன் ஒற்று வந்தவனல்லன் என்று கூறி மரண தண்டனையிலிருந்து காப்பாற்றினார். இதனால் "ஆட்சி முறையில் சிறந்த உறுப்பாகவும், படை அமைப்பின் சிறந்த உறுப்பாகவும் ஒற்று எண்ணப்பட்டது"(78) என்பதனை அறிய முடிகிறது. இச்செய்தி நேரிடையாகப் பாடலில் இடம்பெறவில்லை. புறநானூற்றில் 44, 47 முதலான பாடல்களின் உரைக்குறிப்புகளின் வழி பெறப்படுகிறது.

### 3.17.1 ஒற்றுக்கு மரண தண்டனை

ஒற்று வருதலாகிய குற்றத்திற்குத் தண்டனை கொலையாகும். இதனை, "புற ஆட்களின் ஒற்று பெருங்குற்றமாகக் கருதப்பெற்றது: அவ்வொற்றறை விசாரணையின்றிக் கொல்ல மன்னன் உத்தரவிடுவதுண்டு"(79) என்பது விளக்கும். சங்ககால வாழ்வியல் என்னும் நூல் இச்செய்தியை "வேற்று நாட்டு அல்லது பகைப் புலத்து ஒற்றர்கள் பிடிபட்டால் உடனடியாகக் கொல்லப்பட்டனர்"(80) என்று குறிப்பிடுகிறது.

எனவே, பகையொற்று அக்காலத்தில் குற்றமாகக் கருதப் பெற்றது தெரிய வருகிறது. அதற்குரிய தண்டனை கொலையாகும். கோவூர்க்கிழார் நெடுங்கிள்ளியிடம் இளந்தத்தனைப் பற்றிக் கூறவில்லையெனில் அவன் ஒரு புலவரைக் கொன்ற அவச்சொல்லிற்கு ஆளாகியிருப்பான்.

### 3.18 குழந்தைகளைக் கொல்ல நினைத்த கிள்ளிவளவனது கொடுமை

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சோழர் குலத்தோருள் தலை சிறந்தவன். இவனை ஆலத்தூர் கிழார், ஐயூர் முடவனார், வெள்ளைக்குடி நாகனார், கோவூர் கிழார், எருக்காட்டூர்த் தாயங் கண்ணனார், மாறோக்கத்து நப்பசலையார் முதலானோர் சிறப்பித்து பாடியுள்ளனர்.

கிள்ளிவளவன் தனது பகைவனான மலையமானது குழந்தைகளைத் தன்னிடத்திற்கு அழைத்து வந்தான். அவன் அக்குழந்தைகளை யானைக்

காலால் இடறவிட்டுக் கொல்ல நினைத்தான். அங்கு வந்த கோவூர்க் கிழார் சோழரது குடிச் சிறப்புகளையும், குழந்தைகளைக் கொல்லுதல் தகாத செயல் என்றும் கூறி அக்குழந்தைகளை யானைக் காலால் இடறுவதினின்றும் தடுத்ததை,

"நீயோ, புறவி னல்ல லன்றியும் பிறவும்
இடுக்கண் பலவும் விடுத்தோன் மருகனை
இவரே, புலனுழு துண்மார் புன்க ணஞ்சித்
தமது பகுத் துண்ணுந் தண்ணிழல் வாழ்நர்
களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த
புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி
விருந்திற் புண்கணோ வுடையர்
கேட்டனை யாயினீ வேட்டது செயம்மே"(81)

என்ற பாடல் சுட்டுகிறது.

கிள்ளி வளவன், புறாவிற்காகத் தன் தசையையே அரிந்து கொடுத்த சிபிச் சக்கரவர்த்தியும்; கன்றைக் கொன்ற தன் ஒரே மகனைத் தேர்க்காலில் இட்டுக் கொன்ற மனுநீதிச் சோழனும் தோன்றிய சிறந்த மரபில் தோன்றியவன். அவன் மலையமான் குழந்தைகளைக் கொல்ல எண்ணியது மிகப் பெரிய குற்றமாகும். கோவூர்க்கிழார், கிள்ளிவளவன் செய்ய நினைத்தது குற்றம், பாவம் என்று கருதியதால் தான் அப்பாவச் செயலினின்று அவனைக் காப்பாற்றினார்.

கிள்ளிவளவனைப் புலவர் தடுத்திராவிட்டால் குழந்தைகளைக் கொன்ற இழிச் செயலிற்குள்ளாகியிருப்பான். அவனைப் புலவர்களும் பாடாது விடுத்திருப்பர். அவனது மரபினரும், மக்களும் மிகு பழியைப்

பெற்றிருப்பர். மேற்கண்ட செய்திகளின் அடிப்படையில், மன்னர் குற்றமிழைப்பதற்கு முன்பே புலவர்கள் அதனைத் தடுத்து நிறுத்தியமையை அறிய முடிகிறது.

## 3.19 மன்னிக்கப்பட்ட குற்றங்கள்

அக்காலத்தில் ஒரு சில குற்றங்கள் மன்னிக்கப்பட்டன. அவற்றை 'மன்னிக்கப்பட்ட குற்றங்கள்' என்றழைப்பர்.

### 3.19.1 பெருஞ்சேரல் இரும்பொறை

இவன் செல்வக்கடுங்கோ வாழியாதலின் மகன். இவனது தாய் வேளாவிக் கோமான் பதுமன் தேவி. இவன் தகடூர்க்குரிய அதியமானோடு போர் புரிந்து அவனது தகடூரை வென்றமையால் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சிறப்புப் பெயர் பெற்றான்.

### 3.19.2 புலவர் வருகை

இரும்பொறையைக் காண மோசிகீரனார் என்னும் புலவர் வந்தார். அவர் வந்த நேரம் மன்னன் அங்கு இல்லை. மோசிகீரனார் வெகுதூரம் பயணம் செய்து வந்தமையால் களைப்புடன் மன்னன் வெற்றி முரசு வைக்கும் கட்டிலின் மேல் ஆழ்ந்து உறங்கிவிட்டார். அக்காலத்தில் முரசுக் கட்டிலில் படுத்தல் குற்றமாகும். இதன் சிறப்பை "முரசாவது ஏதேனுமொன்றை அறிவித்தற்கு, அல்லது யாரேனும் ஒரு சாரரை அழைத்தற்கு அடிக்கப்படும் பேரிகை என்னும் பெரும்பறை. அது கொடை (தியாக) முரசு, முறை (நியாய) முரசு, போர் (வீர) முரசு என மூவகைப்பட்டதாகக் கூறப்படும். அவற்றுள் சிறந்தது போர் முரசு. அதற்குத் தனியே ஒரு கட்டில் உண்டு. அது முரசுக் கட்டில் எனப்படும்"[82] என்பது விளக்கும்.

### 3.19.3 கவரி வீசுதல்

இம்முரசுக் கட்டிலில் துயின்ற மோசிகீரனாருக்கு அங்கு வந்த மன்னன் அவர் செய்த குற்றத்திற்குத் தண்டனை வழங்காமல் அவருக்குக் கவரி வீசினான். திடீரென்று குளிர்ந்த காற்றுப்பட்டதால் கண்விழித்த புலவர், மன்னன் கவரி வீசுவதையும், தான் துயின்றது முரசுக் கட்டில் என்பதையும் அறிந்து மிகவும் வருத்தமடைந்தார். புலவர் மன்னனிடம் முரசுக் கட்டிலில் படுத்த தன்னை வாளால் வெட்டி இரு கூறாக்காமல் எதற்குக் கவரி வீசினாய் என்று வினவியதை,

"மாசற விசித்த வார்புறு வள்பின்
மைபடு மருங்குல் பொலிய மஞ்ஞை
ஒலிநெடும் பீலி யொண்பொறி மணித்தார்
பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டி
குருதி வேட்கை யுருகெழு முரசம்
மண்ணி வாரா வளவை யெண்ணெய்
நுரைமுகந் தென்ன மென்பூஞ் சேக்கை
அறியா தேறிய வென்னைத் தெறுவர
இருபாற் படுக்கநின் வாள்வா யொழித்ததை"[83]

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

இப்பாடற் கருத்தின்படி முரசுக் கட்டிலில் படுத்துறங்குதலாகிய குற்றத்திற்குத் தண்டனை வாளால் வெட்டி இருகூறாக்குதல் என்பது பெறப்படுகிறது. இருப்பினும் மோசிகீரனாரைத் தண்டிக்காமல் மன்னன் அவருக்குக் கவரி வீசியது அவனது பெருமையையும், புகழையையும் காட்டுகிறது. இரும்பொறைக்குப் புலவர் செய்த குற்றத்தை மன்னிக்கும்

தன்மை இருந்திருக்கிறது. மன்னரது மன்னிக்கும் இயல்பு அவனைப் புலவரைக் கொன்றவன் என்ற பழிச் சொல்லிலிருந்தும் காத்தது. இவ்விடத்துப் புலவர் தமது புலமையின் காரணமாகத் தாம் செய்த குற்றத்திற்குத் தண்டனை பெறாமல் மன்னிக்கப்பட்டுள்ளார்.

குற்றம் புரிவோரின் சமூக மதிப்பு, புலமை போன்றவற்றிற்கு ஏற்பவும் மன்னனின் மனப் பக்குவத்திற்கேற்பவும் தண்டனைகள் வழங்கப்படாமலும் இருந்துள்ளமையை மேற்கூறிய செய்தி மூலம் அறிய முடிகிறது.

### 3.20 மன்னிப்பில்லாக் குற்றம்

சங்க காலத்தில் மக்கள் செய்த குற்றங்கள் சில மன்னிக்கப் படவில்லை. இவற்றை மன்னிப்பில்லாத குற்றங்கள் எனலாம். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சோழ வேந்தருள் சிறப்பு வாய்ந்தவன். இவனிடம் ஆலத்தூர்கிழார் என்னும் புலவர் பரிசில் பெற்றுத் திரும்பும் பொழுது மன்னன் அவரிடம் தன்னைப் பார்க்க மீண்டும் வருவீர்களா என்று கூறினான். அதற்குப் புலவர் ஆனினது முலையாற் பெறும் பயனைக் கெடுத்த அறமில்லாதோர்க்கும், மாட்சிமை பொருந்திய அணிகலன்களையுடைய மகளிரது கருவைச் சிதைத்தோர்க்கும், அந்தணரைப் பிழைத்தோர்க்கும் கூட மன்னிப்புண்டு. ஆனால் ஒருவர் செய்த நன்றியை மறப்பவர்க்கு மன்னிப்பே கிடையாது என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

“ஆன்முலை யறுத்த வறனி லோர்க்கும்
மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்
குரவர்த் தப்பிய கொடுமை யோர்க்கும்

வழுவாய் மருங்கிற் கழுவாயு முளவென
நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்
செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
அறம்பா டிற்றே . . . . . . . . ."(84)

என்ற பாடலடிகளில் விளக்கியுள்ளார். "ஆன்முலையறுத்தல், மகளிர் கருச்சிதைத்தல், அந்தணர்த் தப்புதல் முதலானவை அக்காலத்தில் குற்றங்களாகக் கருதப்பட்டாலும் அவற்றிற்குத் தண்டனையில்லை. மன்னிப்பு அளிக்கப்பட்டுள்ளது. மேற்கூறியவை குற்றங்களாகக் கருதப்பட்டுள்ளதை, "ஆன்முலையறுத்தலும், கருச்சிதைத்தலும், அந்தணர்த் தப்புதலும் பெருங்குற்றங்களாகக் கருதப்பெற்றன"(85) என்பது விளக்கும்.

செய்ந்நன்றி மறத்தலாகிய குற்றத்திற்கு மன்னிப்பே கிடையாது. ஆனால் அதற்குத் தண்டனை வழங்கப்பட்டதாகக் குறிப்பில்லை.

### 3.21 எரிபரந்தெடுத்தல்

பகைவரின் நாட்டைத் தீயிட்டுக் கொளுத்துதல் எரிபரந்தெடுத்தல் எனப்படும். இதனைப் புறப்பொருள் வெண்பாமாலை மழபுலவஞ்சி என்கிறது. மழபுலவஞ்சி ஒரு போர் மரபாக இருந்தபோதிலும் எழில்மிக்க நகரங்களையும், ஊர்களையும் தீக்கிரையாக்கி அழித்தல் என்பது ஒரு வகையில் குற்றமாகும். இச்செயல் மிகவும் கொடூரமானதாகக் கருதப்படுகின்றது. ஆனால் சங்கச் சான்றோர் ஊர்களையும் நாட்டையும் எரியூட்டுவதைக் குற்றமாகக் கருதவில்லை. அதற்குத் தண்டனை வழங்கியதாகவும் குறிப்புக் காணப்படவில்லை. நாட்டின் நீதிபதியாக விளங்கிய அரசனே எரியூட்டி அழித்ததே அதற்குக் காரணமாகக் கருதப்

படுகின்றது. மன்னர்களே இச்செயலில் ஈடுபட்டிருக்கின்றனர். அதனைத் தடுக்க எவரும் முன்வரவில்லை.

வென்ற மன்னன் தோற்றவரது ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்தியதை நற்றிணை, பதிற்றுப்பத்து, புறநானூறு முதலான நூல்கள் குறிப்பிடுகின்றன. வென்ற அரசன் தனது வெற்றியை நிலைநாட்ட தோற்றவனது ஊரைத் தீயிட்டுக் கொளுத்தியது பெருங்குற்றமாகும். தோற்ற மன்னன் மீண்டும் தன்மீது போர் தொடுக்கக் கூடாது என்ற எண்ணத்திலேயே வென்றவன் அவனது ஊரை எரியூட்டுகின்றான். இதுபோன்ற கொடுஞ்செயல் செய்து விட்டானே என்ற எண்ணமே தோற்றவன் மீண்டும் வென்றவன் மீது போர் தொடுக்கக் காரணமாக அமைந்தது. தம் நாட்டை மீண்டும் நல்வழிப்படுத்த வேண்டும். வென்ற மன்னரைத் தாம் வெற்றி கொள்ள வேண்டும் என்ற உள்ள உறுதி பிறப்பதன் காரணமாக மீண்டும் போர் செய்யத் துணிவர். எனவே எரிபரந்தெடுத்தலால் போர் மூளும் அபாயம் ஏற்பட்டது. இக்காரணத்தால் இச்செயல் குற்றமாகக் கருதப்படுகின்றது.

### 3.21.1 நாட்டை எரியூட்டல்

பண்டை மன்னர்கள் பிறநாட்டினை எரியூட்டித் தன் வெற்றியை நிலைநாட்டினர். இந்நிலையில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பகைவர் நாட்டைத் தீயிட்டுக் கொளுத்தியிருப்பதைக் காணமுடிகின்றது. அவன் வைத்த தீயின் மீது காற்றுப்பட்டு நான்கு திசைகளிலும் பரவி எரிந்தது. ஊரெங்கும் புகை பரவியது. மேலும் பகைவரது காவற் காட்டை அழித்து அந்நகருக்குள் நுழைந்து எரியூட்டினான். இதனைக் குமட்டூக் கண்ணனார்,

"யாண்டுமுதலைப் பெயர வேண்டுபுலத் திறுத்து
முனையெரி பரப்பிய துன்னருந் சீற்றமொடு
மழைதவழ்பு தலைஇய மதின்மர முருக்கி
நிரைகளி றொழுகிய நிரைய வெள்ளம்
பரந்தாடு கழங்கழி மன்மருங் கறுப்பக்
கொடிவிடு குருஉப்புகை பிசிரக் கால்பொர
அழல்கவர் மருங்கி னுருவறக் கெடுத்துத்
தொல்கவி னழிந்த கண்ணகன் வைப்பின்"(86)

என்ற பதிற்றுப்பத்து அடிகளில் விளக்கிக் காட்டுவர். இதனைப் போலவே எரிபரந்தலெடுத்த செய்தியை,

"அம்புடை யாரெயி லுள்ளழித் துண்ட
அடாஅ வடுபுகை அட்டுமலர் மார்பன்"(87)

என்ற பாடலடிகளும் குறிப்பிடுகின்றன.

தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை பகைவர் நாட்டையழிக்க எரித்த தீயானது பகைவர் ஊர்களைக் கவர்ந்து உண்டது. நாற்றிசைகளையும் தீயின் புகை, மிகுதியாக எழுந்து மறைத்திருக்கின்றது என்பதை,

"ஊரெரி கவர வுருத் தெழுந் துரைஇப்
போர்சுடு கமழ்புகை மாதிர மறைப்ப"(88)

என்ற பதிற்றுப்பத்து அடிகளில் அரிசில் கிழார் சுட்டுவர். இப்பாடலடிகளின் வழி அரசர்கள் பிறநாட்டினை எரியூட்டி அழித்திருப்பதைக் காண முடிகின்றது.

### 3.21.2 ஊரை எரியூட்டல்

கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன் பகைகொண்டு பகைவரது ஊர்களைத் தீயிட்டு எரித்தான். இதனால் அத்தீயின் அனல்பட்டு மன்னன் அணிந்திருந்த மாலை வாடியிருக்கின்றது. இதனை,

"முனைசுடு கனையெரி யெரித்தலிற் பெரிதும்
இதழ்கவி னழிந்த மாலையொடு சாந்துபுலர்
பல்பொறி மார்ப . . . . . . . . . . . . . ."(89)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன.

சோழன் கிள்ளிவளவனும் சேரனது கழுமலம் என்னும் ஊரினை வென்று பின் அவ்வூரைத் தீயிட்டு அழித்திருப்பதை,

". . . . . . . . . . . . . குட்டுவன்
அகப்பா அழிய நூறிச் செம்பியன்
பகல்தீ வேட்ட . . . . . . . . . . . . ."(90)

என்று நற்றிணைப் பாடலடிகள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.

புறநானூற்று ஏழாவது பாடலில் கருங்குழலாதனாரும், பதினாறாவது பாடலில் பாண்டரங் கண்ணனாரும் ஊரை எரிபரந்தலெடுத்த செய்தியைக் கூறியிருப்பது சிந்திக்கத்தக்கது.

சோழன் கரிகாலன் சோழ வேந்தருள் குறிப்பிடத் தகுந்தவன். சிறுவயது முதலே கற்றறிந்த சான்றோர் போல் தீர்ப்பளித்துப் புகழ் பெற்றவன். இரும்பிடர்த் தலையார் என்னும் புலவரிடம் கல்வி கற்றவன். தன் பகைவரும் இரவு பகல் பாராது போர் செய்து வென்று அவர்தம் ஊர்களைத் தீயிட்டுக் கொளுத்தியிருக்கின்றான். அதன் காரணமாகவே

அவ்வூர் மக்கள் அழுது புலம்பியதை,

> "அல்லையு மிரவு மெண்ணாய் பகைவர்
> ஊர்சுடு விளக்கத் தழுவிளிக் கம்பலைக்
> கொள்ளை மேவலை . . . . . . . . . ."(91)

என்று புறநானூற்றுப் பாடலடிகள் சுட்டுகின்றன. இவ்வரசனைப் போலவே இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்பவன் பகைவரது விளை நிலங்களைக் கவர்ந்து அவரது மனையிடத்திருந்த மரத்தையே விறகாகக் கொண்டு அவர்தம் ஊரை எரித்தான். அவர் நாட்டில் கரும்பை அல்லாத பிற காடறியாத ஊரை, காவலையுடைய நல்ல நாட்டை தீயிட்டுக் கொளுத்தினான் என்று மேலும் ஒரு புறநானூற்றுப் பாடல்(புறநா.16: 1-19) சுட்டுகின்றது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், கடல்பிறக்கோட்டிய செங்குட்டுவன், தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, கிள்ளிவளவன், கரிகாலன், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலான அரசர்கள் பகைநாட்டினையும், ஊரினையும் தீயிட்டுக் கொளுத்தியிருப்பதைச் சங்கப் பாடல்கள் தெளிவாக விளக்குகின்றன.

மேற்கூறிய பாடல்கள் வழி எரிபரந்தெடுத்தல் என்ற நிகழ்ச்சி நடைபெற்றதை அறிய முடிகின்றது. வென்ற மன்னர்கள் தோல்வியுற்ற மன்னரது நாடுகளைத் தீக்கிரையாக்கி அழிப்பது கண்டிக்கத்தக்கதானாலும் அது குற்றமாகக் கருதப்படவில்லை. எனினும் மன்னன் வெற்றி பெற்றதோடு பகை மன்னரது நாடுகளையும் எரியூட்டிச் சேதப்படுத்தியது ஏற்றுக்கொள்ளக் கூடிய செயல் அல்ல. அக்கால மன்னர்களே நீதி அரசர்களாக விளங்கியதால் இதனைப் போர் மரபு என்னும் கட்டுக்

கோப்புக்குள் கொண்டு வந்தனர். ஆனாலும் வளமும் அழகும் பொருந்திய நாட்டைத் தீயிட்டு அழிப்பது தண்டிப்பதற்குரிய குற்றமாகும். அக்கால அறங்கூறவையங்கள் குற்றமாகக் கருதாமலும் அதற்குத் தண்டனை வழங்காமலும் விடுவித்தது மன்னரின் அதிகாரம் பொருட்டே என்பதை அறிய முடிகின்றது.

## 3.22 ஆநிரை கவர்தல்

புறத்திணை இலக்கணத்தில் முதலாவதாக இடம்பெறும் திணை 'வெட்சி'யாகும். பகைவரின் ஆநிரைகளைக் கவர்தல் இத்திணைப் பொருள். தொல்காப்பியம் இத்திணையின் கீழ் 16 துறைகளையும், புறப்பொருள் வெண்பாமாலை 19 துறைகளையும் கூறியுள்ளன. இத்துறைகள் அனைத்தும் ஆநிரை கவர்தலை வரிசையாகச் சுட்டிச் செல்கின்றன. பகைவரின் ஆநிரைகளைக் கவர்தலைப் போர் மரபாகப் புற இலக்கணம் சுட்டினாலும் இது நியாயமானதா? அறச்செயலா? என்பது ஆய்வுக்குரியதாகும்.

வெட்சித் திணையின்படி ஆநிரை கவர்தலை,

"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவின்
ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்"[92]

எனத் தொல்காப்பியம் சுட்டுகின்றது. இதனை அடியொற்றிப் புறப் பொருள் வெண்பாமாலையும்,

"வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும்
சென்று இகன்முனை ஆதந் தன்று"[93]

என்ற தொகுவில் ஆநிரை கவர்தலைக் குறிப்பிடுகின்றது.

வெட்சித்திணைப் பொருளாகக் கருதப்படும் நிரை கவர்தல் போர் மரபாக இருந்தாலும் பிறரது பொருளைத் திருடுதல் போன்றதே ஆகும். எனவே நிரையைப் பறிகொடுத்தவர் மீண்டும் கைப்பற்றியவரிடமிருந்து நிரையை மீட்கப் போரிடுவர். இந்நிலையில் இருவருக்கும் இடையே பகை நிகழ அடிப்படைத் தூண்டுகோலாக அமைவதே ஆநிரை கவர்தலாகும். எனவே ஆநிரை கவர்தல் என்பதும் குற்றமாகக் கருதப்படுகின்றது. எனினும் இது குற்றம் எனவோ, தண்டனை வழங்கப்பட்டதாகவோ பாடல்கள் குறிப்பிடவில்லை. இதனையும் அரசனே முன்னின்று செயல்படுத்தியதால் நாட்டு மக்களோ, பிற அறமன்றத் தலைவர்களோ எதிர்த்துத் தீர்ப்பு வழங்க முடியவில்லை. அதனால் நாட்டில் அரசன் வைத்ததே சட்டம். அவன் கீழ்ப்படிதான் குடிமக்களும் குற்றங்களையும் தண்டனைகளையும் ஏற்று வாழ்ந்து வந்திருக்கின்றனர் என்பதை அறிய முடிகின்றது.

### 3.22.1 ஆநிரை கவரக் காரணம்

சங்க காலத்தில் ஆநிரை கவர நாடு பிடிக்கும் கொள்கையே காரணமாக இருந்திருக்கின்றது. எனினும் பகைவர் நாட்டிலுள்ள பிற உயிரினங்களும் துன்பப்படக்கூடாது என்று சங்க கால அரசர்கள் நினைத்திருக்கின்றனர். ஆதலால் அப்பகைவர் நாட்டிலுள்ள ஆவும், பார்ப்பனரும், பெண்டிரும், பிணியுடையாரும், புதல்வனைப் பெறாதவர்களும், பாதுகாப்பான இடங்களுக்குச் செல்ல அறிவுறுத்தியிருக்கின்றனர். இக்கருத்தை,

“ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்

பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்

தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்

பொன்போற் புதல்வர் பெறாஅ தீரும்

எம்அம்பு கடிவிடுது நும்மரண் சேர்மின்என"(94)

என்ற புறநானூற்றுப் பாடல் வலியுறுத்தி நிற்கின்றது. இவ்வறிவுறுத்தலை உணர்ந்து உயர்திணையாகிய மக்கள் பாதுகாப்பான இடம்தேடிச் செல்வர், ஆனால் அஃறிணை உயிர்களாகிய ஆநிரைகள் வெளிச் செல்லாமல் போர் நடக்கும் இடத்திலேயே தங்கும். இவற்றைப் பாதுகாக்கும் பொருட்டாகப் போரிடக் கருதிய வேந்தன் போரிடும் முன்னர் அவற்றைக் கைப்பற்றித் தனது நாட்டிற்குக் கொண்டு வருவான். இவ்வாறு ஆநிரைகள் வருந்தாமலும், கொல்லப்படாமலும் தவிர்க்கும் பொருட்டுச் சங்ககாலத்தில் ஆநிரைகள் கவரப்பட்டிருத்தல் வேண்டும். இவ்வாறு வெட்சியார் தாம் கைக் கொண்ட ஆநிரைகள் வருந்தாதபடி வழியின்கட் செலுத்தியதை,

"அருஞ்சுரத்தும் அகன் கானத்தும்

வருந்தாமல் நிரையுய்த் தன்று"(95)

என்ற புறப்பொருள் வெண்பாமாலையின் கொளுவும் சுட்டிக் காட்டுகின்றது.

நன்மனம் கொண்ட வெட்சியார் பகைவரின் நாட்டினைத் தாக்கும் போது அவ்விடத்து ஆநிரைகள் இருப்பின் அவை பெரிதும் வருந்தும் என்றே அஞ்சியிருப்பர். அஃறிணையாயினும் ஓர் உயிரானது வருந்தாமல் பாதுகாப்பது முற்றிலும் அறமேயாகும். அவ்வகையில் ஆநிரை கவர்தலும் அறச்செயலாகவே கருதப்பட்டிருத்தல் வேண்டும்.

இக்கருத்து இவ்வாறிருக்க, படை கொண்டு செல்லும் மன்னன் பகை நாட்டிலுள்ள ஆநிரைகள் மட்டும் பாதுகாப்பாக இருக்க வேண்டும் என்று கருதி அவற்றை மட்டும் கவர்ந்து வந்தது ஏன் என்ற வினா தோன்றுகின்றது. காக்கப்பட வேண்டியவை ஆநிரைகள் மட்டும் தானா? எருமை, ஆடு, நாய் போன்ற பிற உயிர்களுந்தானே. அவ்வாறிருக்க ஆநிரைகளை மட்டும் கவர்ந்து வந்தது உள்நோக்கம் கொண்டதாகும். அவ்வாறு கொண்டு வந்த ஆக்களை வழியில் வெட்சி வீரர்கள் அறுத்துத் தின்றும் சென்றிருக்கின்றனர். இதைப் போலவே தாய்ப் பசுவைக் கவர்ந்து செல்ல கன்றுக்குட்டி நெடுந்தொலைவு கண்களில் கண்ணீர் ஒழுக நடந்து வந்திருக்கின்றது. இதுவும் பாதுகாப்பு வேண்டி ஆநிரை கவரப்படவில்லை என்பதை நிறுவுகின்றது. ஆநிரை தவிர களிறு, எருமை, ஆடு போன்றவற்றைக் கவர்ந்து வந்ததாகச் சங்க இலக்கியப் பாடல்கள் சுட்டவில்லை. எனவே, ஆநிரை கவர்தலைப் படை கொண்டு செல்லும் மன்னன் ஏதோ உள்நோக்கம் கொண்டே செய்தான் என்று கருத இடமுண்டு. அது நாடு பிடித்தல் எனும் கொள்கையே யாகும். "வெட்சிப்போரின் தலைமைச் செயல் நிரை கவர்தலே. நிரை கவர்தல், நிரையைக் காப்பதற்காக என்பர். அது சரியன்று. கவர்ந்த நிரையைக் கவர்ந்தோர், தமக்குத் தாமே பகிர்ந்து (பாதீடு) கொள்வர். கடுங்கண் மழவர் கவர்ந்த நிரையைக் கொன்று தின்பர்"[96] என்பதால் நிரையைக் கவர்தல் காப்பதற்கன்று என்பது அறியப்படும்.

வெட்சியார் ஆநிரைகளைக் கவர்ந்த பின்பு அவற்றை ஊர்ப் பொதுமன்றத்தில் வைத்துப் பங்கிட்டுக் கொள்வதும் (துறை பாதீடு) கொடை வழங்குவதும் (துறை-கொடை) உண்டு. ஆநிரை கவர்தல் அறமாயின் கொடை வழங்குதலும், கொலைத் தொழில் புரிவதும்

நடைபெற்றிருக்காது. பாதுகாத்தலை மட்டுமே நோக்கமாகக் கொண்டு ஆநிரை கவர்ந்திருப்பாராயின் போர் முடிந்தவுடன் அவற்றை உரியவரிடம் திருப்பிக் கொடுத்திருப்பர். இதனைச் சிறந்த பண்பாடாகவும் சமுதாயம் போற்றியிருக்கும். இதற்கு மாறாக ஆநிரைகளைக் கவர்ந்தவுடன் பாதீடு செய்வதும், கொடை வழங்குவதும், கொலை செய்வதும் செய்து வந்திருக்கின்றனர். ஆகையால் கவர்ந்த ஆநிரைகளை உரியோரிடம் திருப்பிக் கொடுக்கும் நோக்கம் அவர்களிடம் இல்லை. எனவே இத்தகையச் செயலைச் சங்க காலச் சமுதாயம் ஆதரிக்கவும் இல்லை. புறத்தைப் பற்றிய 400 பாக்களைக் கொண்ட புறநானூற்றில் ஆநிரை கவர்தலும் (புறநா. 257, 258, 262, 269, 297) மீட்டலும் (புறநா. 259,260,261,263,264,265,270,287,290,291,298) 16 பாடல்களில் மட்டுமே சுட்டப்பட்டுள்ளது. ஆநிரை கவர்தலைப் போர் அறமாக ஏற்றுக் கொண்ட போதும் புலவர்கள் அதனை விரும்பிப் பாடவில்லை என்று கருத இடமுண்டு. இக்காரணங்களின் அடிப்படையில் நோக்கும் போது ஆநிரை கவர்தல் என்பது நாடு பிடிக்கும் கொள்கையையே காட்டுகின்றது.

பெரும்பாணாற்றுப்படையில் ,

> "கேளா மன்னர் கடிபுலம் புக்கு
> நாளா தந்து நறவுநொடை தொலைச்சி
> இல்லடி கள்ளின் தோப்பி பருகி
> மல்லன் மன்றத்து மதவிடை கெண்டி"(97)

என்று ஆநிரை கவர்தல் குறிக்கப்படுகின்றது.

அகநானூற்றில் பசுக்களைக் கவர்ந்து சென்ற கள்வர்களைப் பசுக்களின் உரிமையாளர் தேடுவது போல, உடன்போக்கில் சென்ற

தலைவியை அவளின் உறவினர் தேடினர் என ஆநிரை கவர்தல் சுட்டப்படுகின்றது. இதனை,

"அத்தக் கள்வர் ஆதொழு அறுத்தென
பிறபடு பூசலின் வழிவழி ஓடி"(98)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

ஆநிரை கவர்ந்து சென்றதை அறிந்த கரந்தை வீரர்கள் அதனை மீட்கச் செல்வதும் உண்டு. அவ்வாறு ஆக்களை மீட்கச் சென்று போரிட்ட பொழுது கரந்தை வீரர்கள் இறந்தும் இருக்கின்றனர். இக்கருத்தை,

". . . . . குறும்படை மழவர்
முனைஆத் தந்து முரம்பின் வீழ்த்த
வில்ஏர் வாழ்க்கை விழுத்தொடை மறவர்
வல்ஆன் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகல் பீலி சூட்டிக் துடிப்பெடுத்துத்
தோப்பிக் கள்ளொடு துருஉப்பலி கொடுக்கும்
போக்கு அருங் கவலைய புலவுநாறு அருஞ்சுரம்"(99)

என்ற அகநானூற்றுப் பாடலடிகள் குறிப்பிட்டுக் காட்டுகின்றன.

"ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்"(100)

என்ற பாடலடியில் பகைவரது பசு மந்தைகளைக் கவர்ந்து கொண்டு செல்லுகின்ற கள்வர்களின் முதல்வன் எனப் பாண்டிய மன்னன் புகழப்படுகின்றான். மதுரைக் கணக்காயரின் இப்பாடல் ஆநிரை கவர்தலைப் புகழ்வது போன்று அமைந்தாலும் உண்மையில் அது புகழ்ச்சி அல்ல. அவன் கள்வர்களின் முதல்வன் என்றே இங்குச் சுட்டப்பட்டிருப்பதைக் காணமுடிகின்றது. பாண்டிய மன்னன்

புகழப்படுகின்றானே அன்றி அவனது களவு புகழப்படவில்லை. களவு என்னும் சொல்லிற்குத் "திருட்டு, வஞ்சனை, திருடிய பொருள் பிறர் பொருளை மறைவாகக் கவருதல்"(101) என்று பொருள் கூறுகின்றது கழகத் தமிழகராதி. இவற்றுள் எப்பொருளையும் சான்றோர் வெளிப்படையாகப் புகழார் என்பதை அறிய முடிகின்றது. எனவே சங்கச் சான்றோர் ஆநிரை கவர்தலைப் பாடல்களில் வடித்திருந்தாலும் அதனை முற்றிலும் ஏற்றுக் கொண்டனர் என்று கூற இடமில்லை.

மேற்கூறிய கருத்துக்களின் அடிப்படையில் நோக்கும் பொழுது ஆநிரை கவர்தலைப் போர் அறமாகச் சங்க காலச் சமுதாயம் ஏற்றுக் கொண்ட போதும் அதனைப் போற்றவில்லை என்று குறிப்பிட இடமுண்டு. ஆநிரை கவர்தலைப் புலவர்களும், சான்றோர்களும், நீதிபதிகளும் குற்றமாக வெளிப்படுத்தாவிட்டாலும் மனதளவில் அதனைக் குற்றமாகக் கருதியிருக்க வழிவகை உண்டு.

### 3.23 உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்கள்

மனிதவுறவுகள் விலை மதிக்க முடியாதவை. அஃறிணை உயிர்களுக்கு இல்லாத ஒரு பெருஞ்சிறப்பு பகுத்தறிவு பெற்ற மனிதவுயிர்களுக்குண்டு. இனக்குழு சமுதாயத்தில் உறவுமுறை சிறப்பிடம் பெறுகிறது. அவ்வகையில் மனித உறவுகள் உன்னதமானவை. உறவுகள் தங்களுக்குள் இழைத்துக் கொள்ளும் துன்பங்களை உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்கள் என்றழைக்கலாம். இவை நான்கு வகையாகப் பகுக்கப்படுகின்றன. அவை,

1. கணவன் மனைவிக்கு இழைக்கும் குற்றம் (பரத்தமை)
2. உடன்போக்கு

3. புதல்வரது மண்ணாசை

4. சகோதரனின் பதவியாசை

என்பனவாகும்.

### 3.23.1 பரத்தமை

கணவன் தன் மனைவிக்குத் துரோகம் செய்து பிற பெண்களுடன் உறவு கொள்வது பரத்தமை ஒழுக்கமாகும். இது சங்க காலத்தில் குற்றமாகக் கருதவில்லை என்றாலும் இது கடியப்பட வேண்டிய குற்றமாக உள்ளது. இவ்வொழுக்கப் பிரிவினைத் தொல்காப்பியரும் சுட்டிக் காட்டுவர். பரத்தையிற் பிரிவு நான்கு நிலத்தாருக்குமுண்டு. இதற்கு நிலத்திரிபில்லை என்பதனை,

"பரத்தை வாயில் நால்வர்க்கும் உரித்தே

நிலத்திரிபு இன்று அஃதே என்மனார் புலவர்"[102]

என்ற நூற்பா விளக்குகிறது. பரத்தமையை எவ்விடத்தும் சிறப்பித்தும் புகழ்ந்தும் குறிப்பிடவில்லை. தொல்காப்பியர் காலத்தில் பரத்தமை ஒழுக்கம் இருந்ததைப் போலவே சங்க காலத்திலும் இருந்து வந்திருக்கின்றது. சங்ககாலப் புலவர்களும் அவ்வகையிலேயே தம் காலத்திலிருந்த பரத்தமையைப் பாடல்களாகப் பாடியுள்ளனர்.

பரத்தமை குறித்த பாடல்கள் அகநானூறு,[103] ஐங்குறுநூறு,[104] கலித்தொகை,[105] குறுந்தொகை,[106] நற்றிணை,[107] பரிபாடல்[108] முதலான இலக்கியங்களில் காணப்படுகின்றன.

இப்பரத்தமை ஒழுக்கத்தைச் சுட்டும் பாடல்கள் தலைவன் தலைவியைப் பிரிந்து பரத்தையுடன் கூடி மகிழ்தல், தலைவியின் அணிகலன்களைப் பரத்தையருக்குக் கொடுத்தல், தலைவி தலைவன்

பரத்தமை ஒழுக்கம் கொண்டமைக்கு வருந்துதல், அவனிடம் ஊடல் கொள்ளுதல், வாயில் மறுத்தல், தலைவியும் தோழியும் பரத்தை காரணமாகப் பிரிந்த தலைவனை எள்ளி நகையாடல், சான்றோர் பரத்தைப் பிரிவு தவறு என்று தலைவனுக்கு அறிவுறுத்துதல் ஆகிய பொருள்களில் அமைகின்றன.

### 3.23.1.1 பரத்தையருடன் புனலாடுதல்

தலைவன் பரத்தையுடன் புனலாடியதை,

"அடுத்தடுத்து ஆடுவார் புல்லிக் குழைந்து
வயப்படு மான்மதச் சாந்தார் அகலத்தான்
எடுத்தவேய் எக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலும் தோற்றம்
கொடித்தேரான் வையைக்கு இயல்பு"(109)

என்ற பரிபாடல் அடிகள் மூலம் காணமுடிகின்றது.

### 3.23.1.2 தலைவியின் வருத்தம்

தலைவன் பரத்தையுடன் புனலாடி மகிழ்ந்திருக்க, தலைவி தனித்திருந்து மனம் வெதும்பி வருந்தியிருக்கின்றாள். இதனை ஐங்குறுநூறு,

"அறுசில் கால வஞ்சிறைத் தும்பி
நூற்றிதழ்த் தாமரை பூச்சினை சீக்குங்
காம்புகண் டன்ன தூம்புடை வேழத்துத்
துறைநணி யூரனை யுள்ளியென்
னிறையே ரெல்வளை நெகிழ்போ டும்மே"(110)

எனத் தலைவி கைவளையல்கள் நெகிழ வருந்தியிருப்பதைக் கூறுகின்றது.

### 3.23.1.3 அணிகலன்களைப் பரத்தைக்குக் கொடுத்தல்

தலைவியின் அணிகலன்களைப் பரத்தைக்குக் கொடுத்தமையும் பரத்தை அவற்றை அணிந்து கொண்டு புனலாட வந்ததையும், ஊரார் அவனையும், அவளையும் எள்ளி நகையாடியமையையும், பரத்தையோ வெட்கியவளாகக் கூட்டத்துள் விரைந்து புகுந்து மறைந்தமையும் குறிக்கப்படுகின்றன. இதனை,

"அயலயல் அணிநோக்கி ஆங்காங்கு வருபவர்
இடுவளை ஆரமோடு ஈத்தா னுடனாகக்
கெடுவளை பூண்டவள் மேனியிற் கண்டு
நொந்தவள் மாற்றாள் இவளென நோக்கத்
தந்த கள்வன் சமழ்ப்பு முகம் காண்மின்
செருச் செய்த வாளி சீற்றத் தவையன்ன
நேரிதழ் உண்கணார் நிரைகா டாக
ஓடி ஒளித்தொய்யப் போவாள் நிலைகாண்மின்"(111)

என்ற பரிபாட்டடிகள் குறிப்பிடுகின்றன.

### 3.23.1.4 பொது மகளிரைக் கூடுதல்

புறநானூற்றுப் பாடல்கள் பரத்தை ஒழுக்கத்தைத் தகாதது, தவறானது எனச் சுட்டுகின்றன. சோழன் நலங்கிள்ளி, நெடுங்கிள்ளியைத் தான் போரில் வெல்லாவிடின் பொது மகளிரைக் கூடியவனாவேன் என வஞ்சினம் கூறுகிறான். இக்கருத்தை,

"வன்றிணி நீண்முளை போலச் சென்றவண்
வருந்தப் பொரேஎ னாயிற் பொருந்திய
தீதி னெஞ்சத்துக் காதல் கொள்ளாப்

பல்லிருங் கூந்தன் மகளிர்

ஒல்லா முயக்கிடைக் குழைகவென் றாரே"[112]

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

புறநானூற்றின் 143 முதல் 147 வரையிலான ஐந்து பாடல்களும் வையாவிக் கோப்பெரும் பேகன் தனது மனைவி கண்ணகியைத் துறந்து நல்லூர்ப் பரத்தையொடு புறத்தொழுக்கம் கொண்டொழுகியதைக் குறிப்பிடுகின்றன. இவற்றுள் 143வது பாடலில் கபிலரும் 144,145 ஆகிய இரு பாடல்களில் பரணரும், 146வது பாடலில் அரிசில் கிழாரும், 147வது பாடலில் பெருங்குன்றூர் கிழாரும் பேகனுக்கு அறிவுறுத்துகின்றனர்.

"பசித்தும் வாரேம் பாரமு மிலமே

களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்

நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி

அறஞ்செய் தீமோ அருள்வெய் யோயென

இஃதியா மிரந்த பரிசிலஃ திருளின்

இனமணி நெடுந்தே ரேறி

இன்னா துறைவி யரும்படர் களைமே"[113]

என்ற அடிகள் சுட்டுகின்றன. நம்பி வந்த மனைவியைக் கைவிட்டுப் பரத்தையுடன் உறவு கொள்ளும் தலைவனின் செயல் எப்போதும் எல்லோராலும் குற்றமாகவே கருதப்படும். கபிலர் முதலான புலவர்களும் இதனை மறைமுகமாகச் சுட்டினர். இவற்றின் மூலம் பரத்தமை ஒழுக்கமானது கணவன் மனைவிக்கு இழைக்கும் குற்றம் எனக் கருதக்கூடும்.

### 3.23.2 உடன்போக்கு

பெற்றோரின் ஒப்புதல் இல்லாது காதல் கொண்ட தலைவி தலைவனுடன் சென்று விடுதல் உடன்போக்கு எனப்படும். இதனைத் தொல்காப்பியம்,

"கொடுப்போர் இன்றியும் கரண முண்டே

புணர்ந்துடன் போகிய காலை யான"(114)

என்ற நூற்பாவின் வழி விளக்கும்.

உடன்போக்கு உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்களுள் தலையாயது. உடன்போக்கு அகமரபாக இருந்தபோதிலும் தலைவி பெற்றுப் பேணி வளர்த்த பெற்றோரை துறந்து தலைவனுடன் செல்லுதல் மிகவும் துயரமானதாகும்.

உடன்போக்கைச் சங்க இலக்கியப் பாடல்கள் நன்கு சித்தரித்துள்ளன. சங்க இலக்கியத்தில் அகநானூறு,"(115) ஐங்குறுநூறு,"(116) கலித்தொகை,"(117) குறுந்தொகை,"(118) நற்றிணை"(119) முதலானவற்றில் உடன்போக்குப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. ஐங்குறுநூற்றில் உடன்போக்குப் பாடல்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்வதும், அவள் சென்றபின் செவிலி, நற்றாய் முதலியோர் தலைவியை நினைந்து புலம்புவது, வருந்துவது போன்றும் அமைந்துள்ளன.

சங்க காலத்தில் உடன்போக்கைக் குற்றமாகக் கருதாமல் இருந்திருப்பின் அதற்காகக் கலங்கித் துன்புற்றிருக்க மாட்டார்கள். அவர்களும் உடன்போக்கை உறவுகளுக்கு இழைக்கும் குற்றம் என்றே கருதியிருக்க வேண்டும்.

பெற்றோரின் துன்பத்தைவிடத் தனது காதல் பெரிது என்று கருதும் தலைவியைப் போன்ற பெண்கள் மனதில் இது போன்ற தவறு இழைத்து விட்டோமே என்று எப்பொழுதும் ஒரு குற்றவுணர்ச்சி இருந்து கொண்டேயிருக்கும்.

தொல்காப்பியர் உடன்போக்கிற்குப் பின் செவிலி, நற்றாய்க்குக் கூற்று நிகழும் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

"தன்னும் அவனும் அவளும் சுட்டி
மன்னு நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
போகிய திறத்து நற்றாய் புலம்பலும்
ஆகிய கிளவியும் அவ்வழி உரிய"(120)

என்ற நூற்பா சுட்டும்.

தொல்காப்பியர் உடன்போக்கைச் சரியானது என்று கூறவில்லை. ஏனெனில் பெற்றோரது புலம்பலையும், வேதனையையும் அவர் தமது இலக்கண நூலில் வெளிப்படுத்தியுள்ளார். அவர் மனதளவில் உடன்போக்கை ஏற்காது தமது காலச் சமுதாயத்தில் நிகழ்ந்ததைத் தெரியப்படுத்தியுள்ளார்.

### 3.23.2.1 உடன்போக்கு மேற்கொள்ளல்

காதல் கொண்ட தலைவனும் தலைவியும் தோழியின் துணையுடன் தலைவியது தந்தையின் காவல் நிறைந்த இடத்தைவிட்டு உடன்போக்குச் சென்ற செய்தியினை,

"தொடிமாண் சுற்றமும் எம்மும் உள்ளாள்
நெடுமொழித் தந்தை அருங்கடி நீவி"(121)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன.

### 3.23.2.2 உடன்போக்கிற்கு அஞ்சிய நற்றாய்

தலைவி தலைவனுடன் உடன்போக்கு மேற்கொண்டவுடன் செவிலியும் நற்றாயும் புலம்பித் தவித்தனர். நற்றாய் ஊரார் அலர் தூற்றும்படி தலைவி தனது குடும்பத்தை வைத்துவிட்டாளே என்று வருந்தினாள். நற்றாய் இவற்றையெல்லாம் கேட்க விடாது கூற்றுவன் தன்னைக் கொண்டு செல்லாததை எண்ணிப் புலம்பியதை,

"செழுந்தண் மனையோடு எம்மிவண் ஒழியச்
செல்பெருங் காளை பொய்மருண்ட சேய்நாட்டுச்
. . . .  . . . .  . . . .   . . . . .  . . . . .
. . . .  . . . .  . . . .   . . . . .  . . . . .
தாவின்று கழிகளற் கொள்ளாக் கூற்றே"(122)

என்ற அடிகள் மெய்ப்பிக்கின்றன.

ஒரே ஒரு மகளைப் பெற்ற தாய் அவளது பிரிவை எண்ணி வருந்தித் துன்புற்றாள். உறவினர் இனிப் புலம்பி என்ன செய்வது உன் துயரத்தைத் தாங்கிக் கொள் என்றனர். அங்ஙனம் தாங்கிக் கொள்ள முடியாது என்ற நற்றாய் புலம்பியதை,

"ஒருமகள் உடையேன் மன்னே அவளுந்
செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு
பெருமலை அருஞ்சுரம் நெருனற் சென்றனள்
இனிடயே தாங்குநின் அவலம் என்றிர் அதுமற்று
யாங்ஙனம் ஒல்லுமோ அறிவுடை யீரே"(123)
உள்ளின் உள்ளம் வேமே

என்ற பாடலடிகள் சித்தரிக்கின்றன.

### 3.23.2.3 செவிலியது புலம்பல்

தலைவி, நிழல் அடங்கியற்றுப் போன நீர் இல்லாத அரிய பாலை வழியிலே வீரக்கழலையுடைய தலைவன் தன்னைப் பாதுகாக்க, விரைந்து சென்று நீர் இல்லாத சுனையின் பக்கத்தில் உலர்ந்து வெப்பமான கலங்கிய நீரைக் குடிப்பதற்கு எங்ஙனம் பழகிக் கொண்டாள் என்று செவிலி தலைவியது மென்மைத் தன்மைக்கு இரங்கியதை,

"நிழல் ஆன்ற அவிந்த நீர்இல் ஆரிடைக்
கழலோன் காப்பக் கடுகுபு போகி
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . .
கோல்அமை குறுந்தொடித் தளிர்அன் னோளே"(124)

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

தண்ணிய அருளையும் ஒளிவீசும் கூரிய நெடிய வேலையுமுடைய இளைய வீரனோடு இளமையும் மாமை நிறத்தையும் கொண்ட தலைவி சென்ற பாலை நிலத்தில் சூரியனே நீ மிகுந்த வெயிலே இல்லாது அமைந்த மரநிழல் பொருந்தியதாய், மலையிடத்தேயுள்ள சிறுவழிகள் மணல் மிகவும் பரவப் பெற்றதாய்க் குளிர்ந்த மழையையும் பெய்விப்பாயாக என்று மகட்போக்கிய செவிலி தெய்வத்திடம் வேண்டியதை,

"ஞாயிறு காயாது மரநிழல் பட்டு
மலைமுதல் சிறுநெறி மணல்மிகத் தாஅய்
தண்மழை தலையின் றாகத் தண்ணளிச்
சுடர்வாய் நெடுவேற் காளையொடு
மடமா அரிவை போகிய சுரனே"(125)

என்ற பாடல் விளக்குகிறது.

### 2.23.2.4 நற்றாய் தலைவனின் தாயைப் பழித்தல்

நற்றாய் தன் மகளைப் பிரிந்துத் தான் வருந்துவது போல தலைவனின் தாயும் வருந்துவாள் என்று புலம்பினாள். நற்றாய் தலைவியது தோழியரைக் காணும் போதெல்லாம் தான் துன்புறுவது போல் தனது மகளைப் பலவாய பொய்ம்மொழி கூறி அழைத்துக் கொண்டு சென்ற தலைவனின் தாயும் அவனைப் பெற்றதாலே பெரிய துன்பத்தை அடைவாள் என்பதனை,

"பூங்கண் ஆயங் காண்தொறும் எம்போல்
பெருவிதுப் புறுக மாதோ எம்மிற்
பொம்ம லோதியைத் தன்மொழிக் கொளீஇக்
கொண்டுடன் போக வலித்த
வன்கட் காளையை ஈன்ற தாயே"(126)

என்ற பாடலடிகள் சிறப்பிக்கின்றன.

மேற்கண்ட பாடல்களின் வழி தலைவி உடன்போக்கு மேற்கொண்டதையும், அவளது சுற்றத்தார் வருந்துவதையும் அறியமுடிகிறது. நற்றாயும் செவிலியும் மகளை நினைத்து வருந்திப் புலம்புவது மிகவும் வேதனையளிக்கும் செய்தியாகும். தலைவியது உடன்போக்குப் பெற்றோர்க்கு அளிக்கும் பெருந்துயரங்களுள் தலைமையானதாகக் கருதப்படுகிறது.

### 3.23.3 புதல்வரது மண்ணாசை

சோழ மன்னர்களுள் கோப்பெருஞ்சோழன் குறிப்பிடத்தக்க சிறப்பு வாய்ந்தவன். இவனது நண்பர்களுள் சிறப்பு வாய்ந்தவர்கள் பிசிராந்தையார் பொத்தியார் என்னும் இரு புலவர்கள் ஆவர்.

கோப்பெருஞ்சோழன் உறையூரை ஆட்சி செய்து வந்தான். இம்மன்னனது புதல்வர்கள் மண்ணாசை கொண்டு கோப்பெருஞ்சோழனுக்கு எதிராகப் போர் செய்யக் கருதினர். சோழனும் போர் செய்ய முடிவு செய்தான். பின் புலவர்கள் சந்து செய்வித்தான். இருப்பின் தன்மீது தன் புதல்வர்களே மண்மீது கொண்ட ஆசையின் காரணமாகப் போருடற்றக் கருதியதை நினைந்து மனம் வருந்தினான். அதன் காரணமாகச் சோழன் வடக்கு நோக்கியமர்ந்து உண்ணா நோன்பிருந்து உயிர் துறந்தான். இதனை, புறநானூற்றிலுள்ள 67, 212-223 வரையிலான பாடல்கள் தெரிவிக்கின்றன.

சோழனது புதல்வர்கள் சிற்றினச் சேர்க்கையின் காரணமாக அறிவினை இழந்தனர். அதன் காரணமாகப் போருடற்றத் துணிந்தனர். சோழனும் அவர்களைத் தண்டிப்பதற்கு எண்ணி எதிர்த்துப் போர் செய்யக் கருதினான். பின் புல்லாற்றூர் எயிற்றியனார் என்னும் புலவர் சோழர் குடியின் பெருமையையும் கோப்பெருஞ்சோழனின் வலிமையையும் கூறி போர் செய்யவிடாது தடுத்தார். இதனை,

"மண்டமர ரட்ட மதனுடை நோன்தாள்
வெண்குடை விளக்கும் விறல்கெழு வேந்தே
. . . .  . . . . .  . . . . .  . . . . .
விதும்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே"[127]

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

சோழன் போரிடுவதைத் தவிர்த்து மானவுணர்ச்சி காரணமாக வடக்கு நோக்கியமர்ந்து உண்ணா நோன்பிருந்து உயிர்விட்டான். இதனைக் கேள்வியுற்ற அம்மன்னனது நண்பர்களான பொத்தியாரும், பிசிராந்தையாரும் அவன்மேல் கொண்ட பேரன்பின் காரணமாக

வடக்கிருந்து உயிர்விட்டனர். பிசிராந்தையார் வடக்கிருந்த செய்தியைப் புறநானூற்று 218ஆம் பாடலும் பொத்தியார் வடக்கிருந்த செய்தியைப் புறநானூற்று 223ஆம் பாடலும் குறிப்பிடுகின்றன. ஒருவன் இறக்கும் போதுதான் அவனது பெருமை தெரியும் என்பதற்கேற்ப சோழன் இறந்த பின்பு அவனது நண்பர்களான பிசிராந்தையாரும் பொத்தியாரும் வடக்கிருந்து உயிர்விட்டனர்.

தம் தந்தை தங்களால் வடக்கிருந்து உயிர் துறக்கப் போகிறாரே என்று தெரிந்தும் சோழனது புதல்வர்கள் சோழனைப் பார்த்துப் பேசி மன்னிப்புக் கேட்டிருப்பின் இலக்கியத்தில் இச்செய்தி இடம் பெறாது போயிருக்கும். கோப்பெருஞ்சோழனது புதல்வர்கள் தாம் செய்த குற்றத்திற்கு மன்னிப்பு கேட்டதாகக் குறிப்பில்லை. தந்தை மீது போர் தொடுக்க நினைத்த புதல்வர் பொருட்டு தந்தை உயிர்விட்டது உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்களுள் அளப்பரியது.

மகன்கள் கொடுத்த தீராத் துன்பத்தின் காரணமாகவே கோப்பெருஞ்சோழனும் அவரது நண்பர்களும் வடக்கிருந்து உயிர் துறந்தனர். வடக்கிருந்து உயிர் துறக்கக் காரணம் ஏதோ ஒரு துன்பம், இன்னல் காரணமாக அமையும். இங்குச் சோழனது வடக்கிருத்தலுக்குப் புதல்வரது பதவியாசையே காரணமாக அமைந்துள்ளது. அப்பதவியைப் பறித்த புதல்வர்களே வடக்கிருந்த குற்றத்திற்குக் காரணமாகின்றனர்.

### 3.23.4 சகோதரனின் பதவியாசை

குமணன் முதிர மலையைச் சார்ந்த நாட்டை ஆண்டவன். இவன் கடையேழு வள்ளல்களுக்குப் பின் தோன்றியவன். இவனது நாடு செல்வ வளம் நிறைந்தது. குமணன் புலவர், பாணர், கூத்தர் முதலான பலருக்கும்

பெருங்கொடை நல்கிப் புகழ் பெற்றவன். இம்மன்னனை, பெருஞ்சித்திரனார் (புறநா.158, 159, 160, 161, 162, 16) பெருந்தலைச் சாத்தனார் (புறநா. 164, 165) என்னும் இரு புலவர்களும் புகழ்ந்து பாடியுள்ளனர். இவனது புகழைக் கண்ட குமணனது தம்பியாகிய இளங்குமணனுக்குப் பொறாமை உண்டாயிற்று. இளங்குமணனைப் பொறாமையும் சிற்றினச் சேர்க்கையும் தீயவனாக்கியது. எனவே, அவன் குமணனை நாட்டை விட்டுக் காட்டிற்குத் துரத்தியதை உரைக்குறிப்பு மட்டும் விளக்குகிறது.

குமணன் காட்டிற்குச் சென்றபின் இளங்குமணன் ஆட்சிப் பொறுப்பேற்றான். அப்பொழுது பெருந்தலைச் சாத்தனார் என்னும் புலவர் வறுமையின் காரணமாகக் குமணனது நாட்டிற்கு வந்தார். நாட்டில் நிகழ்ந்த செய்தி அவருக்கு வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் ஏற்படுத்தியது. இளங்குமணன் மனவலிமை இல்லாதவன் என்பதனை உணர்ந்து அவனைத் திருத்த புலவர் விரும்பினார். எனவே புலவர் காட்டிலே இருந்த குமணனிடம் சென்று தனது ஏழ்மை நிலையைக் கூறிப் பரிசில் வேண்டினார். குமணன், தனது தலையைக் கொண்டு சென்று தன் தம்பி இளங்குமணனிடம் அளித்துப் பரிசில் பெறுமாறு கூறினான். இவ்வாறு கூறிக்கொண்டே குமணன் பெருந்தலைச் சாத்தனாரிடம் தன் வாளையெடுத்துக் கொடுக்க, புலவரும் அதனை வாங்கிக் கொண்டு இளங்குமணனிடம் சென்றார். புலவர் இளங்குமணனிடம், குமணன் கூறியதையும் அதனால் அவன் அளித்த வாளைப் பெற்று வந்ததையும் கூறினார். புலவரது கூற்றால் இளங்குமணன், குமணனது நற்குணங்கள் முழுவதையும் உணர்ந்து நல்லறிவு பெற்றுத் தனது அண்ணனிடம் சென்று தன் தவற்றிற்கு மன்னிப்புக் கேட்டான். பின் முதிரமலைக்குக் குமணனே ஆட்சிப் பொறுப்பேற்று நல்லாட்சி நடத்தினான்.

மேற்கூறிய செய்திகள் அனைத்தும் உரைக்குறிப்புகளிலும், துறைக் குறிப்புகளிலும் காணப்படுகின்றன. பெருந்தலைச் சாத்தனார் குமணனுக்கும் இளங்குமணனுக்கும் இடையே தலையிட்டு அவர்களது பிரச்சினைகளைத் தீர்த்து நல்வழிப்படுத்தினார். இல்லையெனில் இளங்குமணன் பதவியாசையின் காரணமாகத் தனது அண்ணனான குமணனை நாட்டை விட்டுக் காட்டிற்குத் துரத்தியதோடு அவனது தலையையும் கொய்து கொன்றிருப்பான்.

இளங்குமணன் அரசாட்சிக்காகத் தனது அண்ணனையே கொலை செய்தவன் என்ற அவப்பெயருக்கு ஆளாகித் தீய மன்னர்களது வரிசையில் இடம் பெற்றிருப்பான்.

தனது உடன்பிறந்த சகோதரனைப் பதவியாசையின் காரணமாகக் காட்டிற்குத் துரத்தியும் கொலை செய்யவும் உத்தரவிடுவது உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்களுள் முதன்மையானது.

குமணன் பற்றிய பாடல்கள் புறநானூற்றில் காணப்படுகின்றன. குமணனின் சிறப்புகள் பாடல்களிலும் அவனை இளங்குமணன் துன்புறுத்தியது உரைக் குறிப்புகளினால் மட்டுமே அறியப்படுகிறது.

மேற்கூறிய நான்கு வகைகளும் அக்காலத்தில் குற்றங்களாகக் கருதப்படவில்லை.

## 3.24 தொகுப்புரை

❇ சங்க காலத்தில் களவும், குற்றமும் இருந்த காரணங்களினால் அரசன் நாட்டைக் காவல் புரிய ஆணையிட்டிருக்கின்றான். அவ்வகையில் காவல் புரிந்த காவலர்கள், தெருக்காவலர், ஊர்க்காவலர், நகரக் காவலர் என மூவகைப்பட்டனர்.

❇ வழிப்போவோருக்கு இடர் ஏற்படாவண்ணம் காவல் புரிவோர் தெருக்காவலர் எனப்பட்டனர்.

❇ ஊரைக் காவல் புரிவோர் ஊர்க்காவலர் என்றழைக்கப்பட்டனர். இரவில் இவர்கள் மணியொலியை எழுப்புவதுண்டு.

❇ நகர் முழுவதும் காவல் செய்பவர்கள் நகர்க் காவலர்கள் ஆவர். கள்வர்களும் அறியாது அவர்களைப் பின் தொடர்ந்து சென்று கைது செய்வது இவர்களது சிறந்த பணியாகும்.

❇ இத்தகைய காவலர் போக, ஒவ்வொரு மனையிலும் மனைக் காவலரை நியமித்திருக்கின்றனர். இவர்கள் மனையைக் காவல் புரிந்திருக்கின்றனர்.

❇ நாட்டில் இக்காவல்களையும் மீறி குற்றம் நடைபெற்றிருக்கின்றது. அவர்களுக்குத் தண்டனையளிக்கச் சிறைகளும் அமைக்கப்பட்டிருந்தன. சங்ககாலத்தில் சிறைகள் இருந்ததைப் புறநானூறும், பட்டினப்பாலையும் விரிவாக விளக்குகின்றன.

❇ குற்றம் இழைப்பவருக்குத் தண்டனையளிப்பது இயல்பாகும். அவரவர் செய்த குற்றங்களுக்கேற்பத் தண்டனை அளிக்கப்பட்டு இருக்கின்றது.

❄ அரசியலுக்கு மாறான குற்றங்கள், அறநூலுக்கு மாறான குற்றங்கள், தெய்வத்திற்கு மாறான குற்றங்கள் என்று குற்றங்கள் வகைப்படுத்தப்பட்டிருந்தன.

❄ ஒவ்வொரு குற்றத்தின் தன்மைக்கேற்பத் தண்டனையின் வகைகளும் இருந்திருக்கின்றன.

❄ கொண்கான நன்னன், கடம்பின் பெருவாயில் நன்னன், நன்னன், நன்னன் சேய் நன்னன் என்ற நான்கு நன்னன்களைச் சங்க நூல்கள் எடுத்துக்காட்டுகின்றன.

❄ இவர்களில் ஆற்றில் மிதந்து வந்த மாம்பழத்தைச் சுவைத்ததற்காக கோசர்குலப் பெண்ணைக் கொலை புரிந்த நன்னனே பெண் கொலை புரிந்த நன்னன் என்று சுட்டப்படுகின்றான்.

❄ ஆராயாமல் அளித்த தண்டனையே இக்கொலைக்கு அடிப்படைக் காரணமாக அமைகின்றது.

❄ இதனால் இவன் நரகத்திற்குச் செல்வான் என்று புலவர்களால் பாடப்பட்டிருக்கின்றான்.

❄ புலவர்கள் இந்நன்னனை அன்றி இவனது மரபினரையும் பாடாதொழிந்திருக்கின்றனர்.

❄ இக்கொலைகார நன்னன் தண்டனை கொடுத்ததைப் போலவே கோசர் எனும் சிற்றரசனும் தண்டனை கொடுத்திருப்பதை அறிய முடிகின்றது.

❄ அன்னி என்பவனின் பசு தன் வயலில் புகுந்து மேய்ந்து விட்டது என்பதற்காகக் கோசர் அன்னியின் கண்களைக் குத்திக் குருடாக்கினர். இச்செயலுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனை மிகவும் கொடூரமானதாகக் கருதப்படுகின்றது.

❉ அன்னியின் மகள் மிஞிலி தன் தந்தையைக் கொன்ற கோசரைத் திதியன் எனும் சிற்றரசனின் உதவியுடன் பழிவாங்கியிருக்கின்றாள். இதனால் பழி வாங்கும் குற்றமும் நடைபெற்றிருக்கின்றது.

❉ மாங்கனி உண்டது, பசு மேய்ந்தது முதலிய சிறு தவறுகளுக்குக் கூட மிக அதிக தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

❉ கள்ளூர்த் தலைவன் என்பவன் ஒரு தலைவியுடன் களவில் ஈடுபட்டுப் புணர்ந்தான். பின் சான்றோர் நிறைந்த அவையில் நான் அவளைக் கண்டதில்லை என்று பொய் கூறினான். இதனால் அவனை மரத்தில் கட்டி வைத்துச் சுடுநீற்றைக் கொட்டித் தண்டனை கொடுத்திருக்கின்றனர்.

❉ பெண்நலம் நுகர்தல் குடிக்கு இழுக்கு என்பதைக் கலித்தொகை சுட்டுகின்றது.

❉ தன் காவலரிடம் பாலை நிலத்தரசன் ஒருவன், வழிப்போவாரைக் கொன்று அவரது பொருள்களைக் கவர்ந்துவர உத்தரவிட்டிருக்கிறான். அவ்வீரர்கள் வழிப்போவோரிடம் பொருள்கள் இல்லாததால் உயிருடன் விட்டுவிட்டனர். அவர்களைக் கொல்லாமல் உயிருடன் விட்ட குற்றத்திற்கு அரசன் புலித்தோலையும், யானைத் தந்தத்தையும் தண்டமாக விதித்தான். அரசு ஆணை மீறியவர்களுக்குத் தண்டனை கொடுக்கப்பட்டிருக்கின்றது.

❉ பாலை நில ஆறலைத்தல் என்னும் வழிப்பறி குற்றமாகக் கருதப்படவில்லை.

❉ மத்தி என்பவன் சோழனுடன் வேட்டைக்கு வர மறுத்த எழினி என்பவனின் மீது போர் தொடுத்து வென்று அவனது பற்களைப் பிடுங்கி வந்து வெண்மணி எனும் கோட்டை வாயிற் கதவில் பதித்திருக்கின்றான். உறுப்புக்களைக் கெடுத்தும் குற்றம் புரிந்தனர்.

❈ அரசன் மிகையான வரி விதித்தலும் ஒரு குற்றமாகக் கருதப்பட்டது.

❈ கிள்ளி வளவனிடம் வெள்ளைக்குடி நாகனார் தன் வறுமையைக் கூறி வரி நீக்கம் பெற்றிருப்பது மிகைவரி விதித்தலுக்குச் சான்றாக விளங்குகின்றது.

❈ வரி செலுத்தாதவரது சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டன.

❈ பகைவரை வெல்லாவிடின் குடிமக்கள் கூறும் பழிக்கு ஆளாவதாகக் கூறியிருப்பது பகை அக்காலத்தில் அது குற்றமாகக் கருதப்பட்டிருக்கின்றது என்பதனை அறியமுடிகின்றது.

❈ பொய்ச்சாட்சி கூறுதலே பொய்க்கரி என்று கூறப்பட்டது. கள்ளூர்த் தலைவன் அவையத்தில் கூறிய பொய்ச்சாட்சிக்குத் தண்டனையாகச் சுடுசாம்பலைத் தலையில் கொட்டியிருக்கின்றனர்.

❈ பொய்ச்சாட்சி கூறியவர் அழகான மரத்தினடியில் தங்கினாலும் அம்மரம் வாடிவிடும் என்று கலித்தொகை பொய்ச்சாட்சியின் தீமையை எடுத்துக்காட்டுகின்றது.

❈ ஆன்றோர்கள் பொய்ச்சாட்சி கூறியதில்லை. ஐம்பெரும் குற்றங்களுள் ஒன்றாகப் பொய் கருதப்பட்டது.

❈ மகளிரை வலியக் கொண்டு திருமணம் நடத்துவது வழக்கில் இருந்தது.

❈ வடக்கிருத்தல், உடன்கட்டை ஏறுதல், மடலேறுதல் போன்றவை தற்கொலை முயற்சிக் குற்றமாகக் கருதப்பட்டது. ஆனால் இவற்றிற்கு எவ்விதத் தண்டனையும் அளிக்கப்படவில்லை.

❈ சேரமான் கணைக்கால் இரும்பொறை, மூவன் என்பவனைப் போரில் வென்று அவன் பற்களைப் பிடுங்கிக் கோட்டை வாயிலில் பதித்திருக்கின்றான்.

❄ கடம்பின் பெருவாயில் நன்னன், பிண்டன் என்பவனை வென்று அவனது உரிமை மகளிரைக் கைப்பற்றி, அவர்களது கூந்தலை மழித்துக் கயிறாகத் திரித்து அக்கயிற்றினால் களிறுகளைப் பிணித்தான். இது பெண்களுக்கெதிரான குற்றமாகவும் கருதப்படுகின்றது.

❄ கடல் பிறக்கோட்டிய சேரன் செங்குட்டுவனும் பழையனை வென்று அவனது மகளிரின் கூந்தலை அறுத்து அதனைக் கயிறாகத் திரித்து யானையைக் கட்டி வந்ததனை அறிய முடிகின்றது.

❄ நெடுங்கிள்ளியிடம் பரிசு பெறவந்த இளந்தத்தன் என்னும் புலவரை ஒற்றன் எனக் கருதிக் கொலை புரிய ஆணையிட்டான். கோவூர்க் கிழார் புலவரைக் காப்பாற்றி நன்மை புரிந்தார். ஒற்று எனும் குற்றத்திற்கு மரணம் தண்டனையாகக் கொடுக்கப்பட்டிருப்பதை உணர முடிகிறது.

❄ கிள்ளிவளவன் குற்றம் புரிந்தோரை யானையின் காலில் இட்டு தண்டனை கொடுத்துக் கொலைக் குற்றம் செய்யமுயன்றிருக்கிறான்.

❄ முரசுக் கட்டிலில் அறியாமல் படுத்துறங்கிய மோசிகீரனாருக்கு இரும்பொறை கவரி வீசி, அவர் அறியாமல் செய்த குற்றத்தை மன்னித்திருக்கின்றான்.

❄ ஆனினது முலையை அறுத்தோர்க்கும், மகளிரின் கருவைச் சிதைத்தோர்க்கும், அந்தணரைப் பிழைத்தோர்க்கும் மன்னிப்பு வழங்கப்பட்டது. ஆனால் செய்ந்நன்றி மறப்பவருக்கு மன்னிப்பு வழங்கப்படவில்லை என்பதை அறிய முடிகின்றது.

❉ பகை நாட்டின் மீது படை கொண்டு செல்லும் மன்னன் அந்நாட்டைத் தீக்கிரையாக்குவதும் குற்றமாகும். ஊரையும், நாட்டையும் எரியூட்டி அழித்ததைச் சங்க பாடல்கள் சுட்டிக் காட்டுகின்றன.

❉ ஆநிரை கவர்தல் என்பது நாடு பிடிக்கும் கொள்கையைப் பிரதிபலிக்கின்றது.

❉ ஆநிரை கவர்தல் என்பது அவற்றைக் காக்கவே என்று கூறப்பட்டாலும் அவ்வாறு கவரப்பட்ட ஆநிரைகளைக் கொன்று தின்றிருக்கின்றனர்.

❉ காக்கப்பட வேண்டியது ஆநிரை மட்டுமல்ல, யானை, குதிரை, ஆடு போன்ற பிற உயிரினங்களும் நாட்டிலுள்ளன. இவற்றையெல்லாம் காக்காமல் ஆநிரை மட்டும் கவர்ந்து சென்றது நாடு பிடிக்கும் உள்நோக்கம் கருதியேயாகும்.

❉ ஆநிரைகளைக் கொலை புரிந்த குற்றத்திற்கும் ஆளாகியிருக்கின்றனர்.

❉ உறவுகளுக்கெதிரான குற்றங்களும் நடந்திருக்கின்றன.

❉ கணவன் மனைவிக்கு இழைக்கும் குற்றம், உடன்போக்கு, புலவரது மண்ணாசை, சகோதரனின் பதவியாசை போன்றவை உறவுகளுக்கு இழைக்கப்படும் குற்றங்காளாகும்.

❉ பரத்தையருடன் புணர்ந்து கணவன் மனைவிக்குக் குற்றம் புரிந்தான்.

❉ அரசர்களும் பரத்தையரைச் சேர்ந்திருக்கின்றனர்.

❉ பிள்ளைகள் உடன்போக்கு மேற்கொண்டு தன் பெற்றோருக்கு மன உளைச்சலை ஏற்படுத்தியிருக்கின்றனர்.

❄ தலைவன் தலைவி உடன்போக்கால் நற்றாய், செவிலி போன்றோர் புலம்பியிருப்பதைக் காணமுடிகின்றது.

❄ மண்ணாசை கொண்டு புதல்வர்களும் தந்தையுடன் போரிட்டுக் குற்றம் புரிந்தனர்.

❄ பதவி ஆசை கொண்டு தம்பியும், அண்ணனுக்குக் குற்றம் செய்ததைக் காணமுடிகின்றது.

❄ புலவர்கள் மன்னனை நேரிடையாக தண்டிக்கும் அதிகாரமும் வலிமையும் அற்றவர்கள் அப்பொழுது குற்றம் புரிந்த மன்னர்கள் நரகம் புகுவர் எனப் பழித்துக் கூறுவதும் அவன் சிந்தை கெடுக பாடாதொழிக என அறம் பாடுவதும், வசை பாடுவதும் சங்க காலத்தில் வழக்கில் இருந்துள்ளன. இதுவும் மனதளவில் குற்றம். புரிந்தவர்களுக்கு வழங்கப்படும் தண்டனையாகும்.

# சான்றெண்விளக்கம்

1. நற்.387: 4-5.
2. பெரும்.39-41.
3. மதுரைக்: 310-312.
4. முல்லைப்: 50.
5. நற். 132: 8-9.
6. மேலது, 40: 1
7. அகநா.124: 14-15.
8. மேலது, 122: 6.
9. குறிஞ்சிப்: 240.
10. மதுரைக்: 643-647.
11. அகநா.2: 14.
12. மேலது, 22: 16.
13. மேலது, 162: 7.
14. நற். 98: 9.
15. மு.முத்துவேலு, சங்கத்தமிழ் கூறும் சட்டநெறி, ப.88.
16. பட்டினப்: 221-227.
17. புறநா. 17: 15-19.
18. மேலது, 74: 3-7.
19. மா.இராசமாணிக்கனார், தமிழக ஆட்சி, ப.99.
20. கலித். 133: 13.
21. புறநா. 10: 1-6.
22. ஞா.தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.119.
23. மேலது, ப.116.

24. மேலது, ப.116.

25. மேலது, ப.116.

26. மேலது, ப.118.

27. மேலது, ப.118.

28. மேலது, ப.118.

29. குறுந்.292: 1-4.

30. மேலது, 292: 5-6.

31. குறுந்.73: 2-4.

32. புறநா. 151: 17-19.

33. அகநா.262: 4-6.

34. மேலது, 262: 6-12.

35. மேலது, 196: 8-12.

36. மேலது, 256: 15-21.

37. கலித்.40: 24-25.

38. மேலது, 135: 6-8.

39. அகநா.109: 9-14.

40. மேலது, 89: 10-13.

41. மேலது, 211-11-12.

42 நற். 18: 2-4.

43. புறநானூற்றில் அறம், ஆராய்ச்சி ஏடு, ப.42.

44. புறநா. 72: 11-12.

45. மேலது, 75: 4-5.

46. மேலது, 35: 33-34.

47. கழகப்புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.714.

48. அகநா.256: 18.

49. கலித். 34: 10-11.

50. குறுந். 184: 1.

51. நற்.196: 1-9.

52. தொல். 1038: 4.

53. கலித். 62: 14-15.

54. கலைக்களஞ்சியம் தொகுதி ஒன்பது, ப.98.

55. எஸ்.ராஜம், பாட்டும் தொகையும், ப.143.

56. கழகப்புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.810.

57. புறநா. 219: 1-4.

58. அகநா.56: 10-12.

59. புறநா. 65: 9-11.

60. க.காந்தி, தமிழர் பழக்கவழக்கங்களும், நம்பிக்கைகளும், ப.94.

61. புறநா. 246: 1-15.

62. மேலது, 247: 1-10.

63. ந.க.மங்கள முருகேசன், இந்தியச் சமுதாய வரலாறு, ப.172.

64. ந.சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், பக்.116-117.

65. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.117.

66. தி.சு.பாலசுந்தரம்பிள்ளை, பண்டைத்தமிழர் இன்பியல் வாழ்க்கை,ப.30.

67. புலவர்குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப.50.

68. குறுந். 17: 1-4.

69. தொல்.: 981.

70. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், பக்.60-61.

71. தொல்.: 1048.

72. மேலது, 997.

73. கலித். 141: 22-25.

74. ஞா.தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.118.

75. அகநா.152: 9-12.

76. நற். 270: 7-10.

77. பதிற்.பதி: 13-17.

78. மா.இராசமாணிக்கனார், தமிழக ஆட்சி, ப.128.

79. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.236.

80. மேலது, ப.234.

81. புறநா.46: 1-8.

82. ஞா.தேவநேயன், பழந்தமிழாட்சி, ப.26.

83. புறநா. 50: 1-9.

84. மேலது, 34: 1-7.

85. ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.232.

86. பதிற். II 5: 1-8.

87. மேலது, II 10: 20-21.

88. மேலது, VIII 1: 9-10.

89. மேலது, V 8: 10-12.

90. நற்.14: 3-5.

91. புறநா. 7: 7-9.

92. தொல். 1003.

93. பொ.வே.சோமசுந்தரனார், புறப்பொருள் வெண்பாமாலை, ப.5.

94. புறநா. 9: 1-5.

95. பொ.வே.சோமசுந்தரனார், புறப்பொருள் வெண்பாமாலை, ப.16.

96. க.ப.அறவாணன், அற்றைநாட் காதலும் வீரமும், ப.358.

97. பெரும். 140-143.

98. அகநா. 7: 14-15.

99. மேலது, 35: 1-10.

100. மேலது, 342: 6.

101. கழகப்புலவர் குழு, கழகத் தமிழகராதி, ப.305.

102. தொல். 1170.

103. அகநா. 6, 16 ,26, 36, 46, 56, 66, 79, 86, 96, 106, 116, 126, 136, 146, 156, 166, 176, 186, 196, 206, 216, 226, 236, 246, 256, 266, 276, 286, 296, 306, 316, 326, 336, 376, 386, 396.

104. ஐங்குறு: மருதத்திணைப் பாடல்கள் (100).

105.கலித்: மருதத்திணைப் பாடல்கள்.

106.குறுந்.8, 10, 19, 31, 3 , 34, 35, 45, 46, 50, 53, 61, 75, 80, 85, 89, 91, 93, 107, 113, 127, 138, 139, 157, 164, 169, 171, 178, 181, 196, 202, 203, 231, 238, 258, 271, 293, 295, 305, 309, 330, 354, 359, 364, 367, 368, 370, 384, 393, 399.

107. நற். 20, 30, 40, 50, 90, 100, 120,, 150, 170, 180, 200, 210, 216, 230, 250, 260, 280, 290, 300, 310, 320, 330, 340, 350, 360, 370, 380, 400.

108. பரி. 6, 12 16, 20. 22.

109. மேலது, 16: 43-47.

110. ஐங். 20: 1-5.

111. பரி.20: 32-39.

112. புறநா. 73: 10-14.

113. புறநா. 145: 4-10.

114. தொல். 1089.

115. அகநா. 7, 15, 17, 35, 49, 55, 63, 89, 95, 99, 105, 117, 121, 145, 153, 165, 189, 195, 203, 207, 219, 221, 257, 259, 261, 263, 275, 283, 285, 315, 321, 325, 369, 383, 385, 397.

116. ஐங்குறு. 200, 203, 235, 236, 254, 280, 286, 303, 305, 312, 313, 361, 363, 364, 371, 372, 373, 375, 376, 377, 378, 379, 380, 381, 382, 383, 384, 385, 386, 387, 388, 389, 390, 391, 392, 393, 394, 395, 396, 397, 398, 399, 400 (44).

117. கலித். 9, 20. (2)

118. குறுந். 7, 18, 44, 84, 115, 124, 144, 149, 217, 229, 262, 343, 356, 369, 378, 383, 388, 390, 396 (19).

119. நற். 2, 9, 10, 12, 29, 66, 79, 110, 143, 149, 162, 179, 179, 184, 198, 202, 264, 271, 279, 293, 305, 324, 362, 384 (23).

120. தொல். 982.

121. அகநா. 17: 6-7.

122. நற்.271: 3-4, 12.

123. மேலது, 184: 1-6.

124. குறுந். 356: 1-2,8.

125. மேலது, 378: 1-5.

126. நற்.293: 5-9.

127. புறநா.213: 1-2, 24.

4.1 முன்னுரை

4.2 சங்க காலம்

4.3 தற்காலம்

4.4 அறங்கூறு மன்றமா? நீதிமன்றமா?

4.5 வழக்கு

4.6 நாடு பிடித்தல்

4.7 குற்றங்கள் தண்டனைகள் ஓர் ஒப்பீடு

4.7.1 எதிர்பாராத விளைவு

4.7.2 பயிரை அழித்த பசு

4.7.3 கற்பழித்தல்

4.7.4 கொள்ளையடித்தல்

4.7.5 பொய்க்கரி

4.7.6 பெண்ணைக் கடத்துதல்

4.7.7 தற்கொலை முயற்சி

4.7.7.1 வடக்கிருத்தல்

4.7.7.2 உடன்கட்டை ஏறுதல்

4.7.7.3 மடலேறுதல்

4.7.8 விலங்குகளைத் துன்புறுத்துதல்

4.7.9 கருச்சிதைத்தல்

4.7.10 எரிபரந்தெடுத்தல்

4.8 உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்கள்

4.8.1 பரத்தமை

4.8.2 உடன்போக்கு

4.9 தொகுப்புரை

## 4.1 முன்னுரை

காலமாற்றத்திற்கேற்ப மனித மனங்களின் நிலைகளும் மாறிக்கொண்டே இருக்கும். மக்களின் மன மாற்றத்திற்கேற்ற மக்கள் தொகுதியின் இருப்பிடமான சமுதாயமும் தன் நிலையில் பிறழும். மனிதர்கள் தம் மனநிலைகளை நல்வினையிலிருந்து தீவினைக்கும், தீவினையிலிருந்து நல்வினைக்கும் கால மாற்றத்திற்கேற்ப மாற்றிக் கொண்டேயிருப்பர். ஒரு காலத்தில் குற்றமாகக் கருதப்பட்டது பிறிதொரு காலத்தில் குற்றமாகக் கருதப்படாமல் இருக்கலாம். குற்றமாகக் கருதப்படாதது குற்றமாகக் கருதப்படலாம். இதற்குக் காரணம் மனித மனங்களின் பிறழ்ச்சியே ஆகும். சங்க காலத்திலும் தற்காலத்திலும் குற்றங்களும் தண்டனைகளும் எவ்விதம் ஒன்றுபட்டும் அல்லது வேறுபட்டுமுள்ளன என்பதனைக் காண்பது இவ்வியலின் நோக்கமாகும்.

## 4.2 *சங்ககாலம்*

தமிழர் வாழ்வில் காலங்களுள் மிகவுயர்ந்ததாகக் கருதப்படுவது சங்ககாலம். இது பொற்காலம் என்றும் அழைக்கப்படுகிறது. மன்னர்களும், அவர்தம் சொற்படி அறங்கூறவையத்தார்களும் நாட்டு மக்களிடையே குற்றங்களைக் கண்டறிந்து அதற்குத்தக தண்டனைகளை வழங்கியுள்ளனர். சங்ககாலத்தில் குற்றங்களை உரிமையியல், குற்றவியல் என்றெல்லாம் பிரித்து அதற்கேற்ப தண்டனை வழங்கவில்லை. சான்றோரது நுண்மாண் நுழைபுலத்தின் வழி குற்றங்கள் கண்டறியப்பட்டு அதற்குரிய தண்டனைகள் சமூகத்தின் பெரும்பான்மை ஒப்புதலின்படி வழங்கப்பட்டன. புலவர்களும் சந்து செய்விக்கும் தன்மையராக விளங்கினர். தற்போது வழக்குரைஞர் செய்யும் பணியை அக்காலத்தில்

புலவர்கள் செய்துள்ளனர். இவர்கள் இதற்கென எவ்வித ஊதியத்தையும் பெறவில்லை என்பதை அறியமுடிகிறது.

## 4.3 தற்காலம்

மறுமலர்ச்சிக் காலம் என்றழைக்கப்படும் தற்காலத்தில் குற்றங்கள், உரிமையியல், குற்றவியல் என்று பாகுபாடு செய்யப் பெற்று அதன்படி தண்டனைகள் அளிக்கப்படுகின்றன. உரிமையியலுக்கெனவும், குற்றவியலுக்கெனவும் தனித்தனி நீதிமன்றங்கள் உள்ளன. இந்நீதிமன்றங்களில் தீர்ப்பு வழங்குபவர் நீதிபதி ஆவார். வாதி-பிரதிவாதி (வாதி - வழக்குத் தொடுப்பவர், பிரதிவாதி - வழக்கு மறுப்பவர்) பொருட்டு வழக்காடுவதற்கு வழக்குரைஞர்கள் உண்டு. இவர்கள் இப்பணியினைச் செய்வதற்கு ஊதியம் பெற்றுக் கொள்கின்றனர்.

மா.சண்முகசுப்பிரமணியன் என்பவர், "குற்றமான செயல்கள் எவை எவை என்று வகைப்படுத்தி குற்றங்களுக்குரிய தண்டனைகளையும் குற்றம் புரிந்தவர்கள் விசாரிக்கப்படும் முறைகளையும் கூறம் சட்டத்தைக் குற்ற இயல் சட்டம் (Criminal Law) என்று அழைக்கிறோம்"(1) என்று கூறியுள்ளார்.

இந்தியாவில் குற்றவியல் சட்டம் கி.பி.1860 ஆம் ஆண்டில் ஆங்கிலேய அரசால் இயற்றப் பெற்றது. இது இங்கிலாந்தில் கடைபிடிக்கப்பட்ட குற்றவியல் கொள்கைகளின் அடிப்படையில் உருவாக்கப் பெற்றது. இது உருவாக முக்கியக் காரணமாக இருந்தவர் மெக்காலே பிரபு. இவரது அரிய முயற்சியால் இந்திய குற்றவியல் சட்டம் நடைமுறைக்கு வந்தது. இது இந்திய தண்டனைச் சட்டம் என்றும் அழைக்கப்படுகிறது.

சங்ககாலத்துக் குற்றங்கள், தண்டனைகள், தற்காலத்து இடையே குற்றங்கள் தண்டனைகளுடன் ஒன்றுபடுகின்றனவா அல்லது வேறுபடுகின்றனவா என்பதைப் பின்வருபவை தெரிவிக்கின்றன.

### 4.4 அறங்கூறு மன்றமா? நீதி மன்றமா?

வழக்கை விசாரித்துத் தீர்ப்பளித்த மன்றங்கள் அறமன்றங்கள் எனப்பட்டன.

"இயற்றப்பட்ட சட்டங்களும் எழுதப்பட்ட விதிகளும் அந்நாளில் விரிவாக இல்லை. மக்களிடையே எழுந்த வழக்குகளைத் தீர்ப்பதற்கு அறவுணர்வே அருந்துணையாக அன்று இருந்தது. எனவே அறத்தின் அடிப்படையில் இயங்கிய அவைகள் "அறங்கூறவையங்கள்" எனப் பெயர் பெற்றன"(2) என்பது இவண் நோக்கத்தக்கது.

தற்பொழுது வழக்குகளை விசாரிக்கும் மன்றங்கள் நீதிமன்றங்கள் என்றழைக்கப்படுகின்றன. "இன்று சட்டங்களின் அடிப்படையிலேயே வழக்குகள் தீர்க்கப் பெறுகின்றன. மக்களின் உரிமைகளும். கடமைகளும் சட்டங்களால் வகுக்கப்படுகின்றன. ஆதலால் இந்நாளைய வழக்கு மன்றங்கள் கூறுவதை 'அறம்' என்று குறிப்பது பொருத்தமன்று. எனவே, வழக்குகளைத் தீர்த்து நீதி வழங்கும் மன்றத்தை 'நீதிமன்றம்' என்றே இன்று நாம் குறிப்பிடுகிறோம்."(3) மேற்கூறிய கூற்றுக்களின் அடிப்படையில் சங்ககாலத்தில் இருந்தவை அறங்கூறு அவையங்கள் என்றும் தற்காலத்தில் உள்ளவை நீதிமன்றங்கள் என்றும் அழைக்கப் பெற்றன என்பது அறியப்படும்.

### 4.5 வழக்கு

சங்ககாலத்தில் குற்றங்களை உடனுக்குடன் விசாரித்துத் தண்டனை

வழங்கினர். தற்போது அதுபோன்று குற்றங்கள் உடன் கண்டறியப்பட்டு அதற்குரிய தண்டனை வழங்கப்படுவது பெரும்பான்மை இல்லை. மிகவும் காலதாமதமாக விசாரிக்கப்பட்டு தீர்ப்புகள் வழங்கப்படுகின்றன.

## 4.6 நாடு பிடித்தல்

சங்க காலத்தில் ஒரு நாட்டின் மீது மற்றொரு நாட்டினர் போர் தொடுத்துத் தம் நாட்டை விரிவுபடுத்துதல் வழக்கிலிருந்தது. இதனைத் தட்டிக் கேட்டு வன்முறைச் செயலில் ஈடுபடாமல் தடுக்க எவ்வித அமைப்பும் இல்லை.

தற்போது ஒரு நாடு மற்றொரு நாட்டின் மீது அத்துமீறி நுழையும் போது அந்நாடு செய்வது தவறு என்பதைச் சுட்டிக் காட்ட 'ஐக்கிய நாடுகள் சபை' என்னும் அமைப்பு இயங்கி வருகிறது. இவ்வமைப்பு தவறு செய்யும் நாடுகளைத் திருத்துவதற்கு முயற்சி செய்கிறது. சங்க காலத்தில் இல்லாத அமைப்பு தற்காலத்தில் (ஐ.நா. சபை) உள்ளது.

## 4.7 குற்றங்கள் தண்டனைகள் - ஓர் ஒப்பீடு

சங்ககாலத்துக் குற்றங்களையும் அதற்கு வழங்கப்பெற்ற தண்டனைகளையும், தற்காலக் குற்றங்கள், தண்டனைகளுடன் ஒப்பிடும் நிலையில் பின்வரும் செய்திகள் அமைகின்றன. அவை,

1. எதிர்பாராத விளைவு
2. பயிரை அழித்த பசு
3. கற்பழித்தல்
4. கொள்ளையடித்தல்
5. பொய்க்கரி

6. பெண்ணைக் கடத்துதல்

7. தற்கொலை

(i) வடக்கிருத்தல்

(ii) உடன்கட்டையேறுதல்

(iii) மடலேறுதல்

8. விலங்குகளைத் துன்புறுத்துதல்

9. கருச்சிதைத்தல்

10. எரிபரந்தெடுத்தல்

என்ற நிலையில் அமைகின்றன.

### 4.7.1 எதிர்பாராத விளைவு

நன்னன் என்னும் குறுநில மன்னன் தன் நிலப்பகுதியில் ஓர் அரிய மாமரம் ஒன்றை வளர்த்து வந்தான். அது நெடுநாள் கழித்து ஈன்ற ஒரு கனியை அரசர்க்குரிய பொருள் என்று அறியாது ஒரு சிறுமி உண்டு விட்டாள். எதிர்பாராது நிகழ்ந்த இச்செயலுக்கு நன்னன் மிக அதிகமான தண்டனையான மரணதண்டனையை அச்சிறுமிக்கு அளித்தான். இதனால் புலவர்கள் நன்னனை, "பெண் கொலை புரிந்த நன்னன்" (குறுந். 73, 292) என்று குறிப்பிட்டுள்ளனர். சங்ககாலத்தில் எதிர்பாராத விளைவாக இருந்தாலும் அது குற்றமாகக் கருதப்பட்டு அதற்கு அளவுக்கதிகமான தண்டனை விதிக்கப்பட்டுள்ளது. தற்காலத்தில் எதிர்பாராத விளைவு ஒரு விபத்து என்று கருதப்படுகிறதேயன்றி அது குற்றமாகக் கருதப்படுவதில்லை.

ஆற்றிற்குக் குளிக்கச் சென்ற பெண் ஆற்றில் மிதந்து வந்த கனியை

எடுத்து உண்டாளே தவிர அவள் மரத்தின் மேல் ஏறிச் சென்று அக்கனியைப் பறித்துண்ணவில்லை. அவளது செயல் திட்டமிட்டுச் செய்யப்பட்டது அல்ல. இது ஓர் எதிர்பாரத நிகழ்வாகும். இதனைக் குற்றமாகக் கூறுவது தவறு. இதனை, "எவ்விதக் குற்றக் கருத்தும் எண்ணமும் இன்றிச் செய்யும் பொழுது தற்செயலாகவோ, துரதிருஷ்டவசமாகவோ விளையும் செயலே 'எதிர்பாரா விளைவா'கும். அது குற்றமாவதில்லை"(4) என்று குற்ற இயல் சட்டத்தின் 80-ஆம் பிரிவு குறிப்பிடுகிறது.

சங்ககாலத்தில் எதிர்பாராத விளைவு குற்றமாகக் கருதப்பட்டது. தற்காலத்தில் அது குற்றமாகக் கருதப்படவில்லை.

### 4.7.2 பயிரை அழித்த பசு

துளு நாட்டையாண்ட கோசர்கள் வளர்த்த பயிரினை அன்னி என்பவனது பசு புகுந்து மேய்ந்தது. இதனால் சினமுற்ற கோசர்கள் சரியானபடி மாட்டினை மேய்க்காது விட்ட அன்னியின் கண்களைக் குத்திக் கெடுத்தனர். (அகநா. 196, 262). இதனை,

"பாசிலை யமன்ற பயற்றா ஆபுக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்"(5)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

வேலியற்ற பயிரை மாடு மேய்ந்தால் மேய்ப்பவனுக்குத் தண்டனையில்லை. வேலி கட்டிய பயிரை, மாடு மேய்ந்தால் மேய்ப்பவனுக்குத் தண்டம் நூறு பணம் ஆகும். மேய்ப்பவன் இல்லாத பொழுது மாட்டைக் கட்டி வைத்துப் பின் விசாரிக்கப்படும்.

மேற்கூறிய பாடல்களில் வழி கோசர்களது பயிறு விளைந்திருந்த நிலப்பகுதியில் வேலிகட்டி இருந்ததற்கான குறிப்பில்லை. அப்படியே வேலிகட்டிய பயிராக இருந்திருந்தாலும் மேய்ப்பவனுக்குத் தண்டம் நூறுபணம் மட்டுமே விதிக்கப்பட்டிருக்க வேண்டும். சங்ககாலத்தில் மேய்ப்பவனுக்குத் தண்டம் விதிக்காது அவனது கண்களையே குத்திக் கெடுத்த கொடுமை நிகழ்ந்துள்ளது. மனுதர்மம், இச்செயலை, "வேலிகட்டிய பயிர், பாதையோர ஊர்ஓரப் பயிர் இவற்றை மாடு மேய்ந்தால் மேய்ப்பனுக்குத் தண்டம் நூறுபணம். மேய்ப்பனில்லாத போது மாட்டைக் கட்டி வைத்திடுக. வேறு இடங்களில் மாடு மேய்ந்தால் மேய்ப்பவனுக்குத் தண்டம் ஒன்றேகாற் பணம், பயிர் இழப்பு எதுவாயினும் மேய்ப்பனோ மாட்டுக்கு உரியவனோதான் கொடுக்க வேண்டும்"(6) என்று குறிப்பிடுகிறது.

சங்க காலத்தில் பசு பயிரை மேய்ந்த குற்றத்திற்கு அதன் உரிமையாளனது கண் தண்டனையாகக் களையப்பட்டது. இந்திய தண்டனைச் சட்டம் இது குறித்து ஒன்றும் குறிப்பிடவில்லை.

### 4.7.3 கற்பழித்தல்

உலகியல் மரபுப்படி ஓர் ஆணுக்குப் பெருமை சேர்க்கும் செல்வங்கள் அவனது நன்னடத்தை, நற்கல்வி, நற்தொழில் முதலானவை ஆகும். அதுபோன்று ஒரு பெண்ணுக்குப் போற்றத் தகுந்த செல்வமாக விளங்குவது அவளது கற்பாகும். இத்தகு பெருமையுடையதும், விலைமதிப்பற்றதுமான கற்பினைச் சூறையாடுவது ஒரு பெண்ணைக் கொலை செய்வதற்கு நிகரான கொடிய செயலாகும்

சங்க இலக்கியமான அகநானூறு (256) கற்பழித்தலைக் குற்றமாகக்

கருதி அதற்குத் தண்டனை வழங்கிய செய்தியைக் குறிப்பிடுகிறது. தற்போதும் கற்பழித்தல் குற்றமாகக் கருதப்படுகிறது. குற்றவியல் சட்டம் "ஒரு பெண்ணை வஞ்சித்துக் கூடுதல் குற்றமாகும். இந்தக் குற்றத்தை இழைக்கும் ஆண்மகனுக்குப் பத்து ஆண்டுகள் வரை சிறைத் தண்டனையும் அபராதமும் உண்டு"(7) (493-ஆம் பிரிவு) என்று குறிப்பிடப்படுகிறது.

எனவே சங்ககாலத்திலும் தற்காலத்திலும் ஒரு பெண்ணைக் கற்பழித்தல் என்பது குற்றமாகக் கருதப்பெற்று அதற்கு, தண்டனை வழங்கப் பெற்று வருகிறது.

### 4.7.4 கொள்ளையடித்தல்

குற்றவியல் சட்டம் "திருட்டுக் குற்றத்தைச் செய்தற்கென்றோ, திருட்டுக் குற்றத்தைச் செய்யும் பொழுதோ திருடிய பொருளை எடுத்துச் செல்லும் பொழுதோ அல்லது எடுத்துச் செல்ல முயலும் பொழுதோ குற்றம் கைகூடுவதற்கென ஒருவருக்கு மரணம் அல்லது உடற்காயம் அல்லது முறையற்ற தடை இவற்றில் ஒன்றை விளைவித்தல் அல்லது விளைவிக்க முயலுதல் அல்லது மரணம், உடற்காயம், முறையற்ற தடை இவை உடனே நேரலாம் என்ற அச்சத்தை ஏற்படுத்துதல் அல்லது ஏற்படுத்த முயலுதல்"(8) என்று கொள்ளை என்ற சொல்லிற்கு இலக்கணம் தருகிறது.

பாலைநில ஆறலைக் கள்வர்கள் தம் வழிவருவோரது உடைமைகளையும் உயிரையும் பறித்தனர் என்பதனைக் கலித்தொகை,(4:3-5; 6: 2-4; 12:1-4; 15:7-9) பெரும்பாணாற்றுப்படை(39-41) முதலான இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அக்காலத்தில் இது

குற்றமாகக் கருதப்படவில்லை. பாலைநிலத் தொழிலாக ஆறலைத்தல் இருப்பதால் அது குற்றமாகக் கருதப்படாது இருந்திருக்கிறது. இருப்பினும் பிறரது உயிர் உடைமைகளைப் பறித்தல் குற்றமாகும்.ஆநிரை கவர்தலும் கொள்ளை என்னும் குற்றத்தைச் சார்ந்தது. இந்திய குற்றவியல் சட்டத்தின் 392ஆம் பிரிவு "கொள்ளைக் குற்றத்திற்குப் பத்தாண்டு காலம் வரை சிறையும் அபராதமும் தண்டனையாகும்"(9) என்றும் 394-ஆம் பிரிவு "கொள்ளையடிக்கும் பொழுது ஒருவருக்குக் காயம் விளைவித்தால் அதற்கு ஆயுட்காலச் சிறைத்தண்டனை அல்லது பத்தாண்டு வரை தண்டனை"(10) என்றும், 397-ஆம் பிரிவு "கொடிய ஆயுதங்களைப் பயன்படுத்திக் கொண்டு கொள்ளையடித்தல், கொடுங்காயத்தை விளைவித்துக் கொள்ளையடித்தல், கொள்ளையடிக்கையில் மரணம் கொடுங்காயம் இவற்றை விளைவிக்க முயற்சி செய்தல் இக்குற்றங்களுக்கு ஏழு ஆண்டுகளுக்கும் குறையாத காலத்திற்குச் சிறை தண்டனை"(11) என்றும் குறிப்பிடுகிறது.

### 4.7.5 பொய்க்கரி

சான்றோர் அவையில் தன் ஐம்புலனால் அறியப்படாதவொன்றை அறிந்ததாகக் கூறுவது அல்லது அறிந்ததை அறியவில்லை என்று கூறுவது பொய்க்கரி ஆகும். "தாம் எடுத்துக் கொண்ட பிரமாணத்திற்கு அல்லது சட்ட விதிக்குக் கட்டுப்பட்டு மெய்யுரைக்க வேண்டிய ஒருவர் பொய்யுரை அளித்தல் தமக்குப் பொய்யென்று தெரிந்த, அல்லது தாம் பொய்யென்று நம்பும் அல்லது தாம் மெய்யென்று நம்பாத ஒரு பொய்யான உரையை அளித்தல் பொய்ச் சான்றளித்தல் (giving false evidence) என்ற குற்றமாகும்."(12) இது சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்பட்டு தண்டனை வழங்கப்படவில்லை. இருப்பினும் பொய்சாட்சி கூறுவது

தவறு என்னும் பொருள்பட, சான்றோர்கள் பொய்சாட்சி கூறுவதில்லை; பொய்சாட்சி கூறியவன் கால்பட்ட மரம் பட்டுப் போய்விடும் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை"(13)

"கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி"(14)

என்ற அடிகள் சுட்டுகின்றன.

பொய்ச் சான்றிற்குரிய முக்கியமான காரணங்களாக கள், பொருளாசை, அச்சம், போதை, நட்பு, காமம், வெகுளி, குழந்தைத்தனம், அறியாமை முதலானவைகளைக் கூறலாம். மனுதர்மம் பொய்ச்சாட்சி கூறுதல் குற்றம் என்றும், அதற்குரிய தண்டனை நரகம் செல்லுதல் என்றும் குறிப்பிடுகிறது. இதனை, "வழக்காடும் பொருட்டு எவரும் நீதிமன்றம் செல்லற்க, சென்றால் மெய்யே உரைக்க. அறிந்ததை மறைப்பது குற்றம். அறியாததை அறிந்ததாகக் கூறுவதும் குற்றம் தான். அவர்க்கு நரகம் வாய்க்கும்"(15) என்பதன் வழி அறிய முடிகிறது.

தற்போது குற்றவியல் சட்டத்தின் 191-ஆம் பிரிவு பொய் சாட்சியளித்தலைக் குற்றம் என்று கருதி அதற்குத் தண்டனையாக 193-ஆம் பிரிவு ஏழாண்டு சிறை அபராதம் முதலானவற்றைக் கூறுகிறது. "பொய்ச்சான்று அளித்தலும், பொய்ச்சான்று புனைதலும் குற்றங்கள் ஆகின்றன. நீதிமுறையான நடவடிக்கைகளைப் பொறுத்து இக்குற்றங்கள் செய்யப்பட்டால் அதற்கான தண்டனை ஏழு ஆண்டுகள் வரை சிறை, அபராதம்"(16) என்பது நோக்கத்தக்கது.

### 4.7.6 பெண்ணைக் கடத்துதல்

சங்க காலத்தில் பெண்ணை வலிதின் தூக்கிச் சென்று மணம்

முடிக்கும் முறை வழக்கில் இருந்தது. இனக்குழு வாழ்க்கையில் இது போன்ற நிகழ்வுகள் குற்றமாகக் கருதப்படுவதில்லை. இதனைக் கலித்தொகை,

"மையின் மதியின் விளங்கு முகத்தாரை
வெளவிக் கொளலும் அறனெனக் கண்டற்று"(17)

என்ற அடிகளின் வழி குறிப்பிடுகிறது.

தொல்காப்பியர் குறிப்பிடும் எண்வகை மணங்கள் பிரமம், பிரசாபத்தியம், தெய்வம், ஆரிடம், காந்தர்வம், அசுரம், பைசாசம், இராக்கதம் என்பனவாகும். திருமணத்திற்காகப் பெண்ணைக் கடத்திச் சென்று மணம் முடித்தல் இராக்கதம் என்னும் மண முறையாகும். இது சங்க காலத்தில் அறமாகக் கருதப்பட்டது. குற்றமாகக் கருதப்படவில்லை. புறநானூற்றில் தமிழர் பண்பாடு என்னும் நூல் காட்டு நாயக்கர், பணியர், இருளர் ஆகிய பழங்குடிகளிடம் இப்பழக்கம் உள்ளது"(18) என்று குறிப்பிடுகிறது.

தற்காலத்தில் இது குற்றமாகக் கருதப்படுகிறது. இந்திய தண்டனைச் சட்டத்தின் 366-ஆம் பிரிவு குற்றமென்று கூறி அதற்குத் தண்டனை விதித்துள்ளது.

மங்கையர்க்கு அணிகலமாக இருப்பது அவர்களது மங்காத கற்பேயாகும். அதைப் பறிப்பதற்கென்று இழைக்கப்படும் இக்கடத்துதல் என்பதை சட்டம் வன்மையாகக் கண்டிக்கிறது. "இக்குற்றத்திற்குப் பத்தாண்டு காலம்வரை சிறையும் அபராதமும் தண்டனையாக உண்டு."(19)

சங்ககாலத்தில் இத்திருமணமுறை அறமெனக் கருதப்பெற்றது.

தற்காலத்தில் இது குற்றமெனக் கருத்தில் கொள்ளப்பட்டு தண்டனை வழங்கப்படுகிறது.

### 4.7.7 தற்கொலை முயற்சி

ஒவ்வொரு குடிமக்களின் உயிரும் சமுதாயத்தின் ஒப்பற்ற சொத்து ஆகும். இதனைக் காப்பது அரசின் தலையாய கடமை. ஒருவரது. உயிரை மற்றவர் போக்குவது எவ்வாறு சட்டவிரோதச் செயலோ அதுபோல ஒருவர் தன்னுயிரைத் தானே போக்கிக் கொள்வதும் சட்டத்திற்கு முறையாகாத செயலாகும். தற்கொலையில் கொலையுண்டவரே கொலையாளி. அவர்மீது எவ்விதக் குற்றத்தையும் சாற்றுவது இயலாது. தற்கொலைச் செயல் முடிவடைந்து விட்டதெனில் எவரையும் குற்றவாளியெனக் கூறித் தண்டிக்க முடியாது.

சிலர் சில வேளைகளில் தற்கொலை முயற்சியில் தோல்வியடைந்து விடுகின்றனர். இங்ஙனம் இம்முயற்சியில் தோல்வியடைந்தவர்களைச் சட்டம் தண்டனைக்கு உரியவர்களாக்கித் தண்டிக்கிறது.

சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்ட வடக்கிருத்தல் (அகநா. 55; புறநா.63, 66, 214, 215, 216, 217, 218, 219, 220, ), உடன்கட்டையேறுதல் (புறநா. 246, 247); மடலேறுதல் (கலித். 139, 140, 141, குறுந். 14, 17, 173, 276; தொல். 981, 997, 1048; நற்.152) முதலானவற்றைத் தற்கொலை முயற்சியாகக் கருத இடமுண்டு. இவை அக்காலத்தில் மக்கள் முன்னிலையில் நடைபெற்றது.

#### 4.7.7.1 வடக்கிருத்தல்

போரில் புறப்புண்பட்ட புதல்வரால் மனம் நொந்த மன்னர்கள்

வடக்குத் திசை நோக்கி அமர்ந்து உண்ணாது இருந்து உயிர் துறத்தல் வடக்கிருத்தலாகும். (அகநா.55; புறநா.65, 66, 214, 215, 216, 217, 218, 219, 220) இது சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. ஆனால் தற்போது இதனைத் தற்கொலை முயற்சியாகக் கருத இடமுண்டு.

### 4.7.7.2 உடன்கட்டையேறுதல்

சங்க இலக்கியமான புறநானூறு (246, 247) மட்டுமே உடன்கட்டை ஏறுதலைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளது. மதுரைப் பேராலவாயர் என்னும் புலவர் பெருங்கோப்பெண்டு உடன்கட்டை ஏறிய செய்தியைச் சித்தரித்துள்ளார். மேற்கூறிய இரு பாடல்களின்வழி பெருங்கோப் பெண்டைப் புலவர்கள் தீப்பாய வேண்டாம் என்று கூறியிருக்கின்றனரே தவிர; அது குற்றம் என்று குறிப்பிடவில்லை. எனவே அதற்கு அக்காலத்தில் தண்டனை எதுவும் வழங்கப்படவில்லை.

தற்போது உடன்கட்டை ஏறுவது தடை செய்யப் பெற்றுள்ளது. ஆங்கில அரசு இந்தியாவை அடிமைப்படுத்தி ஆண்ட பொழுது பல ஆங்கிலேயர்கள் வரிசைக்கிரமமாக இந்தியாவின் தலைமை ஆளுநர்களாகப் பணிபுரிந்து வந்தனர். அவர்களுள் ஒருவர் வில்லியம் பெண்டிங் பிரபு ஆவார். அவரது ஆட்சிக்காலம் கி.பி. 1828 லிருந்து 1835 ஆகும். இவர் தனது ஆட்சிக்காலத்தில் எண்ணற்ற சீர்திருத்தங்களைச் செய்தார். அவற்றுள் ஒன்று சதி என்னும் உடன்கட்டையை ஒழித்தது ஆகும். இவர் இராஜாராம் மோகன்ராய், துவாரகாநாத் தாகூர் ஆகியோரின் ஒத்துழைப்புடன் உடன்கட்டையை ஒழித்தார். இதனை, "வில்லியம் பெண்டிங் இன்றளவும் இந்தியர்களின் உள்ளத்தில் இருப்பதற்குக் காரணம். அவர் நிறைவேற்றிய மன்பதைச் (சமூக)

சீர்திருத்தங்களே யாகும். உடன்கட்டையேறுதல் என்னும் கொடிய பழக்கத்தை இவர் நிறுத்தினார்"[20] என்னும் வரிகள் உணர்த்துகின்றன. அச்சதியொழிப்பை வைதீக இந்துக்களின் எதிர்ப்பையும் மீறிச் செய்துள்ளார். கோ.தங்கவேலு "1829-இல் ஒரு சட்டத்தைப் பிறப்பித்து உடன்கட்டை ஏறுபவர்களையும், அதற்குத் தூண்டுபவர்களையும் உடந்தையாய் இருப்பவர்களையும் தண்டித்தார்"[21] என்று தமது இந்திய வரலாறு என்னும் நூலில் தெளிவுபடுத்தியுள்ளார்.

சதியொழிப்பிற்கு மற்றுமொரு இன்றியமையாக் காரணமாக இருந்தவர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் இந்தியாவில் தோன்றிய மறுமலர்ச்சி இயக்கத்தின் தந்தையென்று அழைக்கப்படும் இராஜாராம் மோகன்ராய் ஆவார். இவர் பிரம்ம சமாஜம் என்பதனை நிறுவி மக்கள் மத்தியில் பெரும்புகழ் பெற்றவர். பன்னெடுங் காலமாக வழக்கில் இருந்த சதித்திட்டத்தை வில்லியம் பெண்டிங் பிரபுடன் சேர்ந்து ஒழித்தார். இதனால் எண்ணற்ற இன்னலுக்கு உள்ளானார். இந்திய வரலாறு என்னும் நூல் மோகன்ராய் உடன்கட்டை ஏறுதலை எதிர்த்து 1818இல் ஒரு தீவிர இயக்கத்தைத் தோற்றுவித்தார். இது சாத்திரங்களுக்கும் மறைகளுக்கும் மாறானதென்றும், மனைவி இறந்தால் கணவன் உடன்கட்டை ஏறாமலிருக்கும் போது கணவன் இறந்தால் மனைவி மட்டும் உடன்கட்டை ஏறுவது என்ன நியதி என்றும் கேட்டு தத்துவார்த்த ரீதியில் போராடினார்"[22] என்றும், "மோகன்ராய் சதிக்கு எதிராகத் தன் கருத்தை ஏற்பவர்களை ஒன்று திரட்டிக் கொண்டிருந்த போதே 4.12.1829-இல் வில்லியம் பெண்டிங் பிரபுவால் சதித்திட்டம் சட்ட விரோதமாக்கப்பட்டது"[23] என்றும் சுட்டுகிறது. கோ.தங்கவேலு என்பவர் "சட்டம் நிறைவேற்றப்பட்டு உடன்கட்டை ஏறுபவர்களும் அதற்கு

உடந்தையாய் இருப்பவர்களும் கொலைக் குற்றம் புரிந்தவர்களுக்கான தண்டனையைப் பெறும்படி செய்தது"[24] என்று தம் இந்திய வரலாறு என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.

சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படாத உடன்கட்டை ஏறுதலைத் தற்காலத்தில் குற்றமாகக் கருதப்பட்டு கொலைக் குற்றம் புரிந்தோர்க்கு வழங்கப்படும் தண்டனை போல் சதிக்குற்றம் கருதப் பெற்று தண்டனை வழங்கப் பெற்றது.

### 4.7.7.3 மடலேறுதல்

மடலேறுதல் சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. (கலித்.139, 140, 141, குறுந்.14, 17, 173, 276, தொல். 981, 997, 1048, நற்.152) ஆனால் தற்போது மடலேறுதலும் வடக்கிருத்தல் உடன்கட்டை போன்று தற்கொலை முயற்சி என்ற குற்றமாகக் கருத வாய்ப்புண்டு.

வடக்கிருத்தல் குற்றமாகக் கருதப்பெற்றுத் தண்டனை வழங்கப்படவில்லை. ஆனால் தற்போது தற்கொலை முயற்சிக் குற்றமாகக் கருதப்படுகிறது. அதற்குத் தண்டனையாக ஓராண்டு சிறை அல்லது அபராதம் விதிக்கப்படுகிறது. இதனை குற்றவியல்ச் சட்டத்தின் 309-ஆம் பிரிவு "ஏதாவது ஒரு செயலைச் செய்து கொள்ள முயல்பவர் குற்றவாளியாகின்றார். இந்தத் தற்கொலை முயற்சி என்ற இக்குற்றத்திற்கு ஓராண்டுக் காலம் வரை சிறை அல்லது அபராதம் தண்டனையாகும்"[25] என்று சுட்டுகிறது. தற்போது, வடக்கிருத்தல், மடலேறுதல் போன்றவை வழக்கில் இல்லை.

### 4.7.8 விலங்குகளைத் துன்புறுத்துதல்

ஐந்தறிவு படைத்ததும், வாய்பேச முடியாததுமான உயிர்களைத் துன்பப்படுத்துவது துன்புறுத்தலாகும். புறநானூறு பசுவினது மார்பினை அறுத்தவர்க்கு மன்னிப்பு உண்டு என்று கூறுகிறது. இதனை,

"ஆன்முலை யறுத்த அறினி லோர்க்கும்"(26)

என்ற அடி உணர்த்துகிறது. பசுவினது மார்பை அறுத்தல், தாய் தந்தையரைப் பிழைத்தல், மகளிரது கருச்சிதைத்தல் முதலியவற்றிற்கு மன்னிப்புண்டு என்பதன் வழி இவை மூன்றும் குற்றங்களாகக் கருதப்பட்டன என்பது தெரிய வருகிறது. ஆனால் அதற்குத் தண்டனை வழங்கப்படாது மன்னிக்கப்பட்டுள்ளது.

தற்போது விலங்குகளைத் துன்புறுத்தல் என்னும் குற்றத்திற்குத் தண்டனையாக இந்திய தண்டனைச் சட்டத்தின் 428-ஆம் பிரிவு இரண்டாண்டுகள் சிறையையும் 429-ஆம் பிரிவு ஐந்தாண்டுகள் சிறையையும் குறிப்பிடுகின்றன. "இந்திய தண்டனைச் சட்டம் இரண்டு ஆண்டுகள் வரை நீடிக்கக் கூடிய ஒரு கால அளவுக்குச் சிறை தண்டனை வகைகள் இரண்டில் ஒன்றோ அல்லது அபராதமோ அல்லது இரண்டுமோ விதித்துத் தண்டிக்கப்படுதல் வேண்டும்"(27) என்றும் ஐந்து ஆண்டுகள் வரை நீடிக்கக் கூடிய ஒரு கால அளவுக்குச் சிறைத் தண்டனை வகைகள் இரண்டில் ஒன்றோ அல்லது அபராதமோ அல்லது இரண்டுமோ விதித்துத் தண்டிக்கப்படுதல் வேண்டும்"(28) என்றும் சுட்டுகிறது.

### 4.7.9 கருச்சிதைத்தல்

உலக வாழ்வு முடிவின்றி இயங்கிக் கொண்டிருப்பதாகும். இன்றைய சமுதாயத்திலிருந்து நாளைய சமுதாயம் பிறக்கிறது. இன்றைய

நல்வாழ்வின்பயன் நாளை வாழ இருப்பவர்களை நன்கு பெறுதல் ஆகும். அறம் எனப்படுவது இல்லற வாழ்க்கை. அதன் இலக்கு மக்கட்பேறு. சமுதாயம் நன்முறையில் நடைபெற்றியல நன்மக்கட் வேண்டும். இத்தகு இன்றியமையாத குழந்தை பிறக்கும் முன்பு கருவிலேயே சிதைப்பது குற்றமாகும். சங்ககாலத்தில் இத்தகைய செயலைக் குற்றமாகக் கருதினாலும் அதற்குத் தண்டனை வழங்காது; மன்னிப்பு வழங்கப்பட்டுள்ளது. இதனை,

"மாணிழை மகளிர் கருச்சிதைத் தோர்க்கும்"(29)

தற்போது அரசு மகளிரது கருச்சிதைத்தலைக் குற்றமாகக் கருதி அதற்குரிய தண்டனையாக மூன்றாண்டு, ஐந்தாண்டு சிறைத்தண்டனை அல்லது அபராதம் முதலானவற்றை விதிக்கிறது. கருவின் வளர்ச்சியைப் பொறுத்து இத்தண்டனையின் கால அளவுகள் நிர்ணயிக்கப்படுகின்றன. குற்றவியல் சட்டத்தின் 312-ஆம் பிரிவு குறிப்பிடுகிறது. இதனை, "ஒரு பெண்ணின் கருவை வேண்டுமென்றே சிதைத்தல் குற்றமாகும். இதற்கு மூன்றாண்டுக் காலம் வரை சிறை, அபராதம் தண்டனையாகும். கருவுருளும் நிலையிலுள்ள சூலியின் கருவைச் சிதைத்தால் அதற்கு ஏழு ஆண்டுக்காலம் வரை சிறையும் அபராதமும் விதிக்கப்படலாம்"(30) என்பது விளக்கும்.

### 4.7.10 எரிபரந்தெடுத்தல்

பகைவரது ஊரினைத் தீயிட்டுக் கொளுத்துதல் குறித்துச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. அழகு மிகுந்த ஊரினைச் சுட்டுப் பொசுக்குதலை நற்றிணை (14) பதிற்றுப்பத்து (II 5:1-8; 10:20-21; V 8: 10-11; VIII 1: 9-10), புறநானூறு (7, 16) முதலான நூல்கள் சித்தரிக்கின்றன. ஆனால்

அவை இதனைக் குற்றம் என்று கூறவில்லை.

தற்காலத்தில் தீயிட்டுச் சொத்தழித்தலைக் கொடுங்குற்றமெனச் சட்டம் விதிக்கிறது. கடுந்தண்டனையும் அளிக்கிறது. இக்குற்றத்திற்கு "ஆயுட்காலச் சிறைத் தண்டனை உண்டு"[31] என்பதன் வழி உணர முடியும்.

## 4.8 உறவுகளுக்கு இழைக்கும் குற்றங்கள்

உறவுகளுக்கு இழைக்கப்படும் குற்றங்களான

(i) பரத்தமை

(ii) உடன்போக்கு

முதலானவை சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. தற்போது பரத்தமை குற்றமாகக் கருதப்படுகின்றது. உடன்போக்கு குற்றமாகக் கருதப்படவில்லை.

### 4.8.1 பரத்தமை

கணவன் தன் மனைவிக்கு இழைக்கும் குற்றங்களுள் ஒன்றாகக் கருதப்படுவது அவனது பரத்தமை ஒழுக்கமாகும். ஒரு கணவன் தன் மனைவிக்குத் துரோகம் செய்து பிற பெண்களுடன் உறவு கொள்வது மிகவும் கேவலமான செயலாகும். சங்க இலக்கியங்கள் தலைமகனது (கணவனது) பரத்தமை ஒழுக்கத்தைப் பல பாடல்களில் குறிப்பிட்டுள்ளன.

பரத்தையர் வாழக்கூடிய பகுதி பரத்தையர் சேரி என்று அழைக்கப் பெற்றது. இப்பரத்தையர் ஆடல் பாடல்களில் சிறந்தவர்கள். நல்ல அழகும் உடல் வனப்பும் மிக்கவர்கள்.

பரத்தமை என்பதற்கு இலக்கணமாக "இது இழிந்த பெண்கள் பொதுவாகச் செய்யும் குற்றமாகும். பரத்தமை என்பது பணத்திற்காகப் பெண்டிர் ஆடவருடன் உடலுறவு இன்பம் அளிப்பதாகும்"(32) என்பதனைக் குறிப்பிடலாம்.

சங்க இலக்கியம் பரத்தமை ஒழுக்கத்தைக் குற்றமெனக் கூறவில்லை. பரிபாடல் புறநானூறு முதலான நூல்கள் வழி தலைவன் எண்ணற்ற அணிகலன்களைப் பரத்தைக்குக் கொடுத்தது, பரத்தையரைச் சேர்தல் தனக்கு இழுக்கு என்று சோழன் நலங்கிள்ளி கூறியது முதலானவை தெரிய வருகிறது. "சங்க இலக்கியங்களில் மருதத்திணை ஒழுக்கமாகக் கூறப்படும் ஊடலுக்குக் காரணமாக பரத்தமை ஒழுக்கம் இருந்துள்ளது. இதனை அக்காலச் சமுதாயம் ஏற்றுக் கொண்ட போதும் இது பாலியல் குற்றமே"(33) என்ற கருத்து நோக்கத்தக்கது. பாலுணர்வினால் உணர்ச்சி வசப்படுகின்றவர்களின் செயல் பல குற்றங்களுக்குக் காரணமாகிறது. எய்ட்ஸ் **(AIDS - Acquired Immuno Deficiency Syndrome)** போன்ற உயிர்க்கொல்லி நோய்களும் மக்களுக்குப் பரவுகிறது.

தற்போது பரத்தமையானது சமுதாயத்தில் சாதி மத பேதமின்றி எங்கும் பரவியுள்ளது. பரத்தமை இன்றைய சமூகத்தில் பரவலாக மலிந்து விட்டது. எனவே எண்ணற்றோர் பலவித நோய்களுக்கு உள்ளாகி இறக்க நேரிடுகிறது. "பரத்தமைத் தொழிலைச் செய்யக்கூடாது எனச் சட்டம் தடை விதித்து உள்ளது."(34) இந்தியாவில் பம்பாய் (சிவப்பு விளக்குப் பகுதி) கல்கத்தா (சோனாகஞ்ச்) முதலான இடங்களைத் தவிர மற்ற இடங்களில் தடை செய்யப்பட்டுள்ளது. பரத்தமை சட்டத்தால் தடை செய்யப்பட்டால் மட்டும் போதாது. தொடர்புடையவர்கள் தாம் செய்வது

தவறு என்பதனை உணர்ந்தால். பரத்தமைத் தொழிலே வேரொடு அழிந்துவிடும்.

சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்படாத பரத்தமை தற்போது குற்றம் என்று கருதப் பெற்று அது சட்டத்தால் தடை செய்யப்பட்டுள்ளது.

### 4.8.2 உடன்போக்கு

சங்ககாலத்தில் மனமொத்த ஆணும் பெண்ணும் பெற்றோர் விருப்பமின்றி தாமே மணம் செய்து கொண்டு வாழ்தல் உடன்போக்காகும். இவ்வுடன்போக்கு நீதிமுறைப்படி குற்றமாகக் கருதப்படாது இருப்பினும் சமூக முறைப்படி உறவுகளுக்கு இழைக்கும் குற்றமாகக் கொள்ளப்படும். இதற்குத் தண்டனை எதுவும் கிடையாது.

தற்காலத்தில் உடன்போக்கு மேற்கொள்ளும் ஆணும் பெண்ணும் பதினெட்டு வயது நிரம்பியவர்களாக இருந்தால் போதுமானது அவர்கள் உடன்போக்கு மேற்கொள்வதற்குத் தடை கிடையாது. இதனைத் தடுக்கச் சட்டமும் இல்லை. எனவே சங்ககாலத்திலும், தற்காலத்திலும் உடன்போக்குக் குற்றமாகக் கருதப்படவுமில்லை. அதற்குத் தண்டனை வழங்கப்படவுமில்லை.

## 4.9 தொகுப்புரை

- ❄ சங்ககாலத்தில் அறத்தின் வழி குற்றத்திற்குத் தண்டனை வழங்கப்பட்டது. தற்காலத்தில் சட்டப்படி குற்றத்திற்குத் தண்டனை வழங்கப்படுகிறது.

- ❄ சங்ககாலத்தில் நீதி வழங்கும் அமைப்புகள் அறங்கூறு அவையங்கள் என்றும் தற்காலத்தில் அது நீதிமன்றங்கள் என்றும் அழைக்கப் பெறுகின்றன.

- ❄ சங்ககாலத்தில் வழக்குகள் உடனுக்குடன் விசாரித்துத் தீர்ப்பு வழங்கப்பட்டன. தற்போது பெரும்பாலான வழக்குகள் நிலுவையில் உள்ளன.

- ❄ நாடுகள் பிறநாட்டின் மீது போர் தொடங்குவதைத் தடுக்கும் அமைப்பு அக்காலத்தில் இல்லை. தற்போது ஐ.நா.சபை உள்ளது.

- ❄ எதிர்பாராத விளைவு சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்பட்டது. தற்காலத்தில் இது குற்றமாகக் கருதப்படவில்லை.

- ❄ சங்ககாலத்தில் பயிரை மேய்ந்த பசுவினது உரிமையாளனுக்குத் தண்டனையாக அவனது கண்கள் குத்திக் கெடுக்கப்பட்டன (அகநா.196, 262) தற்போது இந்திய தண்டனைச் சட்டம் இதுபற்றி ஒன்றும் கூறவில்லை.

- ❄ சங்ககாலத்தில் கற்பழிப்பு குற்றமாகக் கருதப்பெற்றுத் தண்டனை வழங்கப் பெற்றுள்ளது (அகநா.256). தற்காலத்திலும் இது குற்றமாகக் கருதப்பெற்று (493-ஆம் பிரிவு) பத்தாண்டுகள் சிறையும் அபராதமும் தண்டனையாக விதிக்கப்படுகிறது.

❄ பாலைநிலக் கள்வர்கள் (ஆறலைக்கள்வர்கள்) மக்களது உயிரைப் பறித்தனர். இதனை அக்காலத்தில் குற்றமாகக் கருதவில்லை. ஆனால் தற்போது (392-ஆம் பிரிவு) குற்றமெனக் கருதி பத்தாண்டுகாலம், ஆயுட்காலச் சிறையை தண்டனையாக இந்திய தண்டனைச் சட்டம் குறிப்பிடுகிறது. ஆநிரை கவர்தலாகிய குற்றத்திற்கும் இதே தண்டனை விதிக்கப்படுகிறது.

❄ பொய்க்கரி கூறுதல் சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்பட்டாலும் அதற்குத் தண்டனை வழங்கப்படவில்லை தற்காலத்தில் அது குற்றமாகக் கருதப்பட்டு (191, 193-ஆம் பிரிவு) அதற்குத் தண்டனையாக ஏழு ஆண்டுகள் சிறை, அபராதம் முதலானவை விதிக்கப்படுகிறது.

❄ பெண்ணைக் கடத்தி மணம் புரியும் இராக்கதம் அக்காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. ஆனால் தற்போது இந்திய தண்டனைச் சட்டம் (366-ஆம் பிரிவு) குற்றமென்று கூறி பத்தாண்டுகாலம் சிறையும், அபராதமும் தண்டனையாக அளிக்கிறது.

❄ சங்ககாலத்தில் வடக்கிருத்தல், உடன்கட்டையேறுதல் முதலான தற்கொலை முயற்சிகள் குற்றமாகக் கருதப்படவில்லை. தற்போது (309-ஆம் பிரிவு) தற்கொலை முயற்சியைக் குற்றமாகக் கருதி அதற்குத் தண்டனையாக ஓராண்டு சிறை அல்லது அபராதம் என்று குற்றவியல் சட்டம் கூறுகிறது. உடன்கட்டையேறுதல் என்னும் சதி வில்லியம் பெண்டிங் பிரபு காலத்தில் இராஜாராம் மோகன்ராய் பேராதரவுடன் 4.12.1829 அன்று தடை செய்யப் பெற்றது. கொலைக்

குற்றத்திற்கு என்ன தண்டனையோ அத்தண்டனையே இக்குற்றத்திற்கும் வழங்கப்பட்டது.

❄ ஐந்தறிவு பெற்ற உயிர்களைத் துன்புறுத்துதல் சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்பெற்று (புறநா. 34) அதற்கு மன்னிப்பு அளிக்கப்பட்டுள்ளது. இந்திய தண்டனைச் சட்டம் தற்போது இதனைக் குற்றமாகக் கருதி (*428, 429-ஆம் பிரிவு) இரண்டாண்டு, ஐந்தாண்டுகள் சிறை, அபராதமாக வசூலிக்கப்படுகிறது.

❄ அக்காலத்தில் கருச்சிதைத்தல் குற்றமாகக் கருதப்பட்டதும் அதற்கு மன்னிப்பு அளிக்கப்பட்டுள்ளது. தற்போது அரசு இதனைக் குற்றமாகக் கருதி (312-ஆம் பிரிவு) மூன்றாண்டு, ஐந்தாண்டு சிறை அல்லது அபராதம் விதிக்கிறது.

❄ எரிபரந்தெடுத்தல் சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. தற்போது இந்திய தண்டனைச் சட்டம் (438-ஆம் பிரிவு) குற்றமாகக் கருதி அதற்குரிய தண்டனையாக ஆயுட்காலச் சிறைத் தண்டனையை அளிக்கிறது.

❄ பரத்தமை குற்றமாகச் சங்ககாலத்தில் கூறப்படவில்லை. தற்போது அது சட்டத்தால் தடை செய்யப் பெற்றுள்ளது.

❄ உடன்போக்குச் சங்ககாலத்திலும் தற்காலத்திலும் குற்றமாகக் கருதப்படவில்லை.

# சான்றெண் விளக்கம்

1. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.13.
2. மா.சண்முகசுப்பிரமணியன், சட்டத்தமிழ், ப.38.
3. மேலது, ப.38.
4. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.429.
5. அகநா. 262: 4-6.
6. தமிழ்நாடன், மநுதர்மம், ப.101.
7. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.434.
8. மேலது, ப.178.
9. மேலது, ப.181.
10. மேலது, ப.181.
11. மேலது, ப.181.
12. மேலது, ப.492.
13. குறுந். 184: 1.
14. கலித். 34: 10.
15. தமிழ்நாடன், மநுதர்மம், ப.101.
16. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.434.

17. கலித். 26: 14-15.

18. செ.பழனிச்சாமி, புறநானூற்றில் தமிழர் பண்பாடு, ப.41.

19. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.278.

20. கோ.தங்கவேலு, இந்திய வரலாறு, ப.491.

21. மேலது, ப.492.

22. மேலது, பக்.685-686.

23. மேலது, ப.686.

24. மேலது, ப.686.

25. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.339.

26. புறநா. 34: 1.

27. இராதாகிருட்டிணன் (தொ.ஆ) இந்திய தண்டனைச் சட்டம், ப.129.

28. மேலது, ப.130.

29. புறநா. 34: 2.

30. மா.சண்முகசுப்பிரமணியன், குற்ற இயல் சட்டம், ப.345.

31. மேலது, ப.225.

32. பி.ஆர்.ஜெயராஜன், குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், ப.126.

33. கி.லோகேஸ்வரி, தமிழில் குற்றவியல் நாவல்கள், ப.39.

34. பி.ஆர்.ஜெயராஜன், குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல், ப.128.

# முடிவுரை

"குற்றம் புரிவது எமக்கியல்பு
கொண்டணைத்தல் உமக்கியல்பு"

என அடியார்கள் இறைவனை உருகி வேண்டுவர். எல்லாமுணர்ந்த இறையடியார்களே இங்ஙனம் கூறும் பொழுது சாமானிய மக்கள் குற்றமிழைப்பது தவிர்க்க இயலாதது.

ஆட்சியாளர்களின் கொடுங்கோல் ஆட்சி முறைகளும் சக மனிதர்களின் முறையற்ற இயங்கு நிலைகளும் குற்றம் புரிதலுக்கு இட்டுச் செல்லும் காரணிகளாக அமைகின்றன.

தமிழக வரலாற்றிலும் தமிழ் இலக்கிய வரலாற்றிலும் பொற்காலம் என்று அழைக்கப்படும் சங்க காலத்தில் மக்கள் குற்றங்கள் புரிந்த காரணங்களையும் அவற்றை விசாரிக்கும் அமைப்புகளையும் அவற்றிற்கான தண்டனைகளையும் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

சங்க இலக்கியத்தில் குற்றங்களையும் தண்டனைகளையும் விளக்குமுகமாகக் குற்றவியல் குறித்து அறிஞர்கள், அகராதிகள் வெளிப்படுத்தும் குற்றங்கள் தண்டனைகள் பற்றிய இலக்கண வரையறை சுட்டப்பெற்றுள்ளது.

சங்க இலக்கியத்தில் குற்றம் என்ற சொல்லாட்சி அருகியும் (9) குற்றம் என்ற பொருள் தரும் சொல்லாட்சிகளான, 1. அரலை, 2.ஆசு, 3.கசடு, 4.கறை, 5.செயிர், 6.தா, 7.தீது, 8.துகள், 9.நவை, 10.பழி, 11.பழுது, 12.புகர், 13.புரை, 14.போக்கு, 15.மறு, 16.மாசு, 17,மை, 18,வசை, 19.வடு, 20.வேய்வை முதலானவை மிகுதியாகவும் உள்ளன.

தொல்காப்பியத்தில் எழுத்து, சொல் அதிகாரங்களில் குற்றம் என்ற சொல்லாட்சி இடம்பெறவில்லை. பொருளதிகாரத்தில் இச்சொல்லாட்சி இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் கலித்தொகை மட்டுமே குற்றம் என்ற சொல்லாட்சியைப் பதிவு செய்துள்ளது.

சங்க காலத்தில் 'ஒறுப்பு' என்ற சொல்லாட்சி தண்டனை என்னும் பொருளில் கையாளப் பெற்றுள்ளது.

தலைவன், தலைவி முதலியோரின் பண்பு, புகழைச் சிறப்பிப்பதற்குக் குற்றமற்றவன், குற்றமற்றவள் என்ற அடை பயன்படுத்தப் பெற்றுள்ளது.

குற்றங்களுக்குத் தண்டனை வழங்கிய அமைப்புகளைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. இவ்வமைப்புகள் இருவகையில் விளங்கின.

அரசன் நீதி வழங்கிய அமைப்புகள் அவை, அறங்கூறவையம், நாளவை, அவைக்களம், அவையகம், நாண்மகிழிருக்கை என்பனவாகும்.

சான்றோர், ஊரவை, அமைப்புக்களான மன்றம், பொதியில், அம்பலம் முதலானவற்றில் நீதி வழங்கியதை இலக்கியங்கள் சுட்டுகின்றன. இவ்வமைப்புகளிலுள்ள அவையோரது தேர்வும், இயல்புகளும், சமூக மதிப்புகளும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

அவையோர் துலாக்கோல் போல் ஒருபால் கோடாது நீதி வழங்கிய செய்திகளும், அவர்கள் நீதி வழுவும் போது அவ்வழு அரசனைச் சாரும் என்பதும் சங்க இலக்கியத்தில் பதிவு பெற்றுள்ளன.

நாட்டு மக்கள் அவையோருக்கு நன்மதிப்பு அளித்துள்ளனர். குடும்பப் பிரச்சினைகளையும் இவ்வவையோர் தீர்க்க வேண்டும் என்று கருதியதை அறிய முடிகிறது.

காதலில் தோல்வியடைந்த பெண்கள், அறங்கூறவையத்தில் முறையிட்டுத் தன்னைக் கைவிட்ட ஆண்மகனுக்குத் தண்டனை வாங்கித் தந்த குறிப்பினையும், கணவனை இழந்த கைம்மை மகளிர் மன்றத்திற்குச் செல்வதில்லை என்பதையும் போரின் போது கைப்பற்றப்பட்ட மகளிர் மன்றத்தை மெழுகி, விளக்கேற்றிய செய்திகளையும் அறிய முடிகிறது.

பகை நாட்டின் மீது போர் தொடுத்து வெற்றி பெறும் வேந்தன் அந்நாட்டிலுள்ள மன்றங்களை அழித்ததை இலக்கியங்கள் அறிவிக்கின்றன.

மன்றத்தில் வழக்கு விசாரணையின்போது கருத்துவேறுபாடுகள் ஏற்பட்டமையால் கலந்து கொண்டோரிடையே கூச்சலும் குழப்பமும் நிகழ்ந்து பின் மன்றம் அமைதியுற்றதையும் காண முடிகிறது. இதுபோன்ற நிகழ்வுகள் இன்றும் கிராமங்களிலுள்ள வழக்கு மன்றங்களில் இருப்பதை இங்கு நினைவு கூறலாம்.

மன்றத்தில் பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளான நாட்டியம், குரவைக்கூத்து முதலானவை நடைபெற்றுள்ளன. பொலிவிழந்த மன்றத்தில் கள்வர் கூடியிருந்ததையும், பலிச்சோற்றையுண்ண பேய் மன்றத்தை இடித்துக் கொண்டு எழுந்ததையும், கூகை குழறியதையும் இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

பாழடைந்த பொதியிலில் பேய் உறைந்ததையும், முதியோர் சூதாடியதையும் போர்த்திட்டம் தீட்டியதையும் உணர முடிகிறது.

அம்பலம் என்ற ஊரவையின் அமைப்பைப் பரிபாடல் மட்டுமே சிறப்பிக்கிறது. இவ்விடத்தில் அம்பலம் என்பது கோயில் என்னும் பொருளில் கையாளப் பெற்றிருக்கிறது.

அக்காலச் சமுதாய மக்கள் காதல், வீரம் இவ்விரண்டிற்கும் முதன்மை கொடுத்தமையால் இவ்விரண்டு நிலைகள் தவிர ஏனைய வாழ்வியல் சூழல்களில் குற்றம் புரிவதற்கான சூழல்கள் குறைவாகவே காணப்படுகின்றன.

தமிழ் மன்னராகிய மூவேந்தர் ஆட்சியாலும், மக்களது இயற்கையோடியைந்த வாழ்க்கை முறையாலும், தேவைகளில் தன்னிறைவு பெற்று விளங்கியதாலும் சங்ககாலச் சமுதாயத்தில் குற்றங்கள் அருகிக் காணப்பட்டன. தண்டனைகள் கடுமையானதாக வழங்கப்பட்டன.

நாட்டில் திருட்டு, கொலை முதலிய குற்றங்கள் நிகழா வண்ணம் காவலர்கள் காவல் காத்த செய்தியினையும், சிறை என்ற அமைப்பு சங்ககாலத்தில் இருந்ததனையும் அறிய முடிகிறது.

மன்னன், மக்கள் என்ற பாகுபாடின்றி இரு தரப்பினரும் குற்றம் புரிந்ததை இலக்கியங்கள் உரைக்கின்றன.

தண்டனைகள் உயிரைப் போக்குதல், தலையில் சுடுநீற்றைக் கொட்டுதல், உறுப்புக்களைக் குறைத்தல், விளக்கேற்றுதல், கூந்தலையறுத்தல், பல்லைப் பிடுங்கிப் பதித்தல், யானைக் காலால் இடறுதல் என்னும் நிலைகளில் இருந்ததைச் சங்க இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

அரசாணை மீறுதல் கடுமையான குற்றமாகக் கருதப்பட்டு அதற்குக் கொலைத் தண்டனை வழங்கப் பெற்றது.

மிகையிறை இறுக்கும் வேந்தன் அறினில்லாதவன் என்றழைக்கப்படுதலையும், பொய்க்கரியைச் சான்றோர் வெறுத்தலையும்

பெண்ணை வலிந்து கொண்டு சென்று புரியும் திருமணம் அறமெனப்பட்டதையும், ஆன்முலையறுத்தல், மகளிர் கருச்சிதைத்தல், அந்தணரைப் பிழைத்தல் முதலான மூன்றும் குற்றங்களாகக் கருதப்பட்டதையும், செய்ந்நன்றி மறத்தலாகிய குற்றத்திற்கு மன்னிப்பு கிடையாது என்பதையும்; முரசுக் கட்டிலில் உறங்குதலாகிய குற்றத்திற்குத் தண்டனை கொலையென்பதையும் இலக்கியங்கள் பறைசாற்றுகின்றன.

குற்றம் புரிபவரின் புலமை, சமூக மதிப்பு போன்றவற்றிற்கேற்பவும் மன்னரின் பக்குவத்திற்கேற்பவும் தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளது.

உடன்கட்டையேறுதல், வடக்கிருத்தல், மடலேறுதல் முதலான தற்கொலை முயற்சிக் குற்றங்களும்; பரத்தமை, உடன்போக்கு மண்ணாசை, பதவியாசை முதலான உறவுகளுக்கு இழைக்கப்படும் குற்றங்களும் சங்க காலத்தில் குற்றங்களாகக் கருதப்படவில்லை.

எரிபரந்தெடுத்தல், ஆநிரை கவர்தல் போர் நிலையில் குற்றமாகக் கருதப்படவில்லை.

சங்க காலத்தில் நீதி வழங்கிய அமைப்புகள் அறங்கூறவையங்கள் என்றும் தற்காலத்தில் நீதி வழங்கிய அமைப்புகள் நீதிமன்றங்கள் என்றும் அழைக்கப் பெற்றன.

தற்காலத்திலிருப்பதைப் போல நாடுகளை வன்முறைச் செயலின்றும் தடுக்கும் அமைப்பு அக்காலத்தில் இல்லை. அறமன்றங்களில் வழக்குரைஞர்கள் அக்காலத்தில் இல்லை. தற்காலத்தில் உண்டு.

சங்ககால நீதிமன்ற அமைப்புகளும் அவற்றின் செயல்பாடுகளும் தமிழகச் சிற்றூர்கள் பலவற்றில் இன்றும் நடைமுறையில் உள்ளன. இவற்றைப் பண்டைத் தமிழரின் எச்சமாகக் கொள்ள இடமுண்டு.

சங்க காலத்தில் குற்றங்களுக்கு, தீர்ப்பின் வழி தண்டனைகள் மிக விரைவாக வழங்கப்பட்டுள்ளன. சங்க காலத்தைவிடத் தற்காலத்தில் மக்கள் தொகைப் பெருக்கம் பொருள்வயமான வாழ்க்கை, வறுமை, பொறுமையின்மை, தேவைகளில் தன்னிறைவின்மை, பொறாமை முதலானவை இருப்பதால் குற்றங்கள் பல்கிப் பெருகியுள்ளன. இவற்றிற்குச் சங்க காலத்தைப் போல உடனுக்குடன் தண்டனை வழங்க முடியவில்லை.

எதிர்பாராத விளைவு என்பது சங்க காலத்தில் குற்றமாகவும், தற்காலத்தில் குற்றமில்லையென்றும் கருதப்படுகிறது.

சங்க காலத்திலும் தற்காலத்திலும் கற்பழிப்பு, பொய்சாட்சி, விலங்குகளைத் துன்புறுத்துதல், கருச்சிதைத்தல் முதலானவை குற்றங்களாகக் கருதப்பட்டன.

சங்க காலத்தில் கற்பழிக்கும் குற்றத்திற்குத் தண்டனை வழங்கப் பெற்றதையும், தற்காலத்தில் இக்குற்றத்திற்கு (இ.கு.ச.493) பத்தாண்டுகள் சிறையும், அபராதமும் தண்டனையாக விதிக்கப்படுவதையும் காண முடிகிறது.

பொய்க்கரி சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்பட்டாலும் அதற்குத் தண்டனை வழங்காததையும், தற்காலத்தில் இதற்கு (இ.கு.ச.191, 193) ஏழாண்டுகள் சிறைத்தண்டனையும், அபராதமும் தண்டனையாக அளிக்கப்படுவதையும் அறிய முடிகிறது.

பெண்ணைக் கடத்திச் சென்று மணம்புரியும் இராக்கத மணம் குற்றமாகக் கருதப்படாது ஓர் அறமாகக் கருதப்பட்டதும், தற்காலத்தில் இம்மணம் குற்றமாகக் கருதப்பட்டு அதற்கு (இ.கு.ச.366) பத்தாண்டு காலம் சிறையும் அபராதமும் அளிக்கப்படுவதையும் இலக்கியங்கள் பறை சாற்றுகின்றன.

வடக்கிருத்தல், உடன்கட்டையேறுதல், மடலேறுதல் சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. தற்காலத்தில் இது தற்கொலை முயற்சிக் குற்றமாகக் கருதப்பெற்று, தண்டனையாக (இ.கு.ச. 309-பிரிவு) ஓராண்டு சிறையும், அபராதமும் விதிக்கப்படுகிறது.

எரிபரந்தெடுத்தல் சங்ககாலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை; தற்போது இது குற்றமாகக் கருதப்பட்டு அதற்குத் (இ.கு.ச. 438 பிரிவு) தண்டனையாக ஆயுட்காலச் சிறைத் தண்டனையும் அளிக்கிறது.

பரத்தமை சங்க காலத்தில் குற்றமாகக் கருதப்படவில்லை. தற்போது அது குற்றமாகக் கருதப்படுகிறது. ஆனால் ஒருசில இடங்களில் இன்றும் நடைமுறையில் இருப்பது தெரிய வருகிறது.

உடன்போக்கு சங்க காலத்திலும் தற்காலத்திலும் குற்றமாகக் கருதப்படவில்லை.

மன்னர்களும் அறங்கூறுஅவையத்தார்களும் சமுதாயத்தில் குற்றமிழைத்தவர்களுக்கு உடனடியாகத் தண்டனை வழங்கினர். அறமன்றங்கள் வழக்குகளை விசாரணை செய்து விரைவாகத் தீர்ப்புகள் வழங்கியமையால் மக்கள் குற்றச் செயல்களில் ஈடுபட அஞ்சினர். இதனால் தற்காலத்தைவிட சங்ககாலத்தில் குற்றங்கள் குறைவாக

இருந்துள்ளன. சங்கச் சான்றோர் குற்றங்கள் இல்லாத சமுதாயத்தை உருவாக்குவதையே தமது குறிக்கோளாகக் கொண்டிருந்தனர் எனத் துணியலாம்.

## துணைநூற்பட்டியல்


1. அகத்தியலிங்கம், ச., **சங்க இலக்கியங்கள் செவ்வியல் இலக்கியங்களே**
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.
1997.

2. அறவாணன், க.ப., **அற்றைநாட் காதலும் வீரமும்,**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு, சிதம்பரம்.
2002.

3. இந்திரசித்து, க., **சங்ககாலச் சமயமும் சமுதாயமும்,**
என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்,
உடுமலைப்பேட்டை.
1998.

4. இராசமாணிக்கனார், மா., **பத்துப்பாட்டு ஆராய்ச்சி,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1970.

5. மேலது **தமிழக ஆட்சி,**
பாரி நிலையம்,
59, பிராட்வே, சென்னை. (ஆ.இ).

6. இராதாகிருட்டிணன், ஏடிசி., (தொ.ஆ) **இந்திய தண்டனைச் சட்டம்,**
அக்கவுண்ட் டெஸ்ட் சென்டர்,
1, கான்வென்ட் சந்து,
காமராசர் சாலை,
மதுரை (ஆ.இ).

7. காந்தி, க., **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை.
1980.

8. கிருஷ்ணராஜு, ஆர்.எம்., **சட்டம் என்ன சொல்லுகிறது?**
91, வி.எம்.தெரு,
மைலாப்பூர், சென்னை.
1959.

9. குழந்தை, புலவர்., **தொல்காப்பியர் காலத் தமிழர்,**
பாரி நிலையம்,
சென்னை.
1959.

10. சங்குப்புலவர், தி., **ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள்,**
கழக வெளியீடு,
திருநெல்வேலி.
1955.

11. சஞ்சீவி, ந., **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.
1973.

12. மேலது, **பல்கலைப் பழந்தமிழ்,**
சென்னைப் பல்கலைக்கழக
வெளியீடு,
சென்னை.
1974.

13. சண்முகசுந்தரம், வை., **கொலைக் குற்றமும் மரண தண்டனையும்,** கலைக் கருவூலம், சென்னை. 1991.

14. சண்முக சுப்பிரமணியன், மா., **சட்டத்தமிழ்,** கழக வெளியீடு, சென்னை. 1969.

15. மேலது, **குற்ற இயல் சட்டம்,** கழக வெளியீடு, டி.டி.கே. சாலை, சென்னை. 1994.

16. சண்முகம் பிள்ளை, மு., (ப.ஆ) **குறுந்தொகை மூலமும் உரையும்,** ஓலைச் சுவடித்துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1985.

17. மேலது, **தொல்காப்பியம் பொருளதிகாரம், இளம்பூரணம்,** முல்லை நிலையம், 9, பாரதி நகர் முதல் தெரு, தி.நகர், சென்னை. 1997.

18. சதாசிவ ஐயர், தி., (உ.ஆ) **ஐங்குறுநூறு மூலமும் உரையும்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை.
1999.

19. சாமிநாதையர், உ.வே.., (ப.ஆ) **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,**
லிபர்டி அச்சுக்கூடம்,
சென்னை.
1941.

20. மேலது, **குறுந்தொகை மூலமும் உரையும்,**
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை.
1962.

21. மேலது, **புறப்பொருள் வெண்பா மாலை,**
கபீர் அச்சுக்கூடம்,
சென்னை.
1963.

22. சிதம்பரனார், சாமி., (உ.ஆ) **குறுந்தொகை பெருஞ்செல்வம்,**
இலக்கிய நிலையம்,
சென்னை (ஆ.இ).

23. சுப்பிரமணியன், ச.வே., (உ.ஆ) **தொல்காப்பியம்,**
மணிவாசகர் பதிப்பகம்,
9/7 சிங்கர் தெரு,
பாரி முனை, சென்னை.
1999.

24. மேலது, **பத்துப்பாட்டு மூலம்,**
மெய்யப்பன் தமிழாய்வகம்,
53, புதுத்தெரு,
சிதம்பரம்.
2000.

25. சுப்பிரமணியன், ந., **சங்ககால வாழ்வியல்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்
பிரைவேட் லிமிடெட்.,
41, சிட்கோ இண்டஸ்டிரியஸ்
எஸ்டேட்,
சென்னை.
1986.

26. சுப்புரெட்டியார், ந., **தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,**
பழநியப்பா பிரதர்ஸ்,
திருச்சி.
1963.

27. மேலது, **அகத்திணைக் கொள்கைகள்,**
பாரி நிலையம்,
சென்னை.
1981.

28. செந்துறை முத்து, புலவர்., **தமிழ் நீதி,**
செல்லி நிலையம்,
மயிலாப்பூர், சென்னை.
1964.

29. செயராசன், பி.ஆர்., **குற்றவியல் தத்துவம் மற்றும் தண்டனையியல்,** ஸ்ரீபதிராஜன் பப்ளிஷர்ஸ், 42-சி, மீனாட்சி நகர், அஸ்தம்பட்டி, சேலம். 2002.

30. மேலது, **குற்றவியல் நடைமுறைச் சட்டம்,** ஸ்ரீபதிராஜன் பப்ளிஷர்ஸ், 69/42 மீனாட்சி நகர், அஸ்தம்பட்டி, சேலம். 2002.

31. சோமசுந்தரனார், பொ.வே., **புறப்பொருள் வெண்பாமாலை,** கழக வெளியீடு, சென்னை. 1996.

32. மேலது, ***சிறுபாணாற்றுப்படை,*** கழக வெளியீடு, 154, டி.டி.கே. சாலை, சென்னை. 1996.

33. மேலது, ***குறிஞ்சிப்பாட்டு,*** கழக வெளியீடு, 154, டி.டி.கே. சாலை, சென்னை. 2000.

34. மேலது, ***திருமுருகாற்றுப்படை,*** கழக் வெளியீடு, 154, டி.டி.கே. சாலை, சென்னை. 2001.

35. மேலது, **பொருநராற்றுப்படை,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
2001.

36. மேலது, **பட்டினப்பாலை,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
2001.

37. மேலது, **பெரும்பாணாற்றுப்படை,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
2001.

38. மேலது, **நெடுநல்வாடை,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
2001.

39. மேலது, **முல்லைப்பாட்டு,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
2001.

40. தங்கவேலு, கோ., **இந்திய வரலாறு,**
பழனியப்பா பிரதர்ஸ்,
25, பீட்டர்ஸ் சாலை,
சென்னை.
2002.

41. தமிழ்நாடன், **மநுதர்மம்,**
குயில் பண்ணை,
சேலம்.
2002.

42. துரைசாமிப்பிள்ளை, ஔவை.சு (உ.ஆ) **பதிற்றுப்பத்து மூலமும் உரையும்,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
1995.

43. மேலது, **புறநானூறு ( 1 - 200)**
கழக வெளியீடு,
1/40, பிரகாசம் சாலை, சென்னை.
1999.

44. மேலது, **புறநானூறு ( 201 - 400)**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
1996.

45. தேவநேயன், ஞா., **பழந்தமிழாட்சி,**
கழக வெளியீடு,
சென்னை.
1992.

46. நச்சினார்க்கினியர் (உ.ஆ) **கலித்தொகை,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
1999.

47. நாராயணசாமி ஐயர், அ., **நற்றிணை நானூறு மூலமும் உரையும்,**
கழக வெளியீடு,
154, டி.டி.கே. சாலை, சென்னை.
1952.

48. நாராயண வேலுப்பிள்ளை, எம்., **பத்துப்பாட்டு (2)**
முல்லை நிலையம்,
43, புதுத்தெரு, மண்ணடி,
சென்னை.
1999.

49. மேலது **சங்க இலக்கியம் வழங்கும் பரிபாடல்,**
நற்பவி பிரசுரம்,
தியாகராய நகர், சென்னை.
2001.

50. நாராயணையங்கார், மு.ரா., **தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி,**
மதுரை தமிழ்ச் சங்கம்,
மதுரை.
1960.

51. பரமகுரு, பொன்., **தண்டனை இயல்,**
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை.
1999.

52. பழனிச்சாமி, செ., **புறநானூற்றில் தமிழர் பண்பாடு,** வாணி பதிப்பகம், 402, அளகேசன் சாலை, கோவை. 1989.

53. பாலசுப்பிரமணியன், தி.சு., (இளவழகனார்) **பண்டைத் தமிழர் இன்பியல், வாழ்க்கை,** கழக வெளியீடு, சென்னை. (ஆ.இ)

54. மங்கள முருகேசன், ந.க., **இந்தியச் சமுதாய வரலாறு,** தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை. 1975.

55. மறைமலை அடிகள், **பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை,** மணிவாசகர் பதிப்பகம், 8/7 சிங்கர் தெரு, பாரி முனை, சென்னை. 2001.

56. மேலது, **முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை,** மணிவாசகர் பதிப்பகம், 8/7 சிங்கர் தெரு, பாரி முனை, சென்னை. 2001.

57. மாணிக்கம், வ.சுப., **தமிழ்க் காதல்,** மெய்யப்பன் தமிழாய்வகம், 53, புதுத்தெரு, சிதம்பரம். 2002.

58. முத்துவேலு, மு., **சங்கத்தமிழ் கூறும் சட்டநெறி,** கழக வெளியீடு, 154, டி.டி.கே. சாலை, சென்னை. 2001.

59. ராஜம், எஸ்., **பாட்டும் தொகையும்,** 5, தம்புச்செட்டித் தெரு, சென்னை. 1958.

60. வசந்தா, ஜி., **தஞ்சை மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள் - ஒரு சமுதாய ஆய்வு** தென்றல் பதிப்பகம், தஞ்சாவூர். 2000.

61. வரதராசன். மு., **நெடுந்தொகை விருந்து,** பாரி நிலையம், சென்னை. 1952.

62. மேலது, **குறுந்தொகை விருந்து,** பாரி நிலையம், சென்னை. 1952.

63. விசுவநாதன், அ., **தமிழ்ச் சிந்தனைகள்,** மங்கை பதிப்பகம், காரைக்குடி. 1991.

64. வித்தியானந்தன், சு., **தமிழர் சால்பு,** பாரி புத்தகப் பண்ணை, திருவல்லிக்கேணி, 1971.

65. வேங்கடசாமி நாட்டார், ந.மு., வேங்கடாசலம், ரா., (உ.ஆ) **அகநானூறு, (களிற்றுயானை நிரை)** கழக வெளியீடு, சென்னை. 1945.

66. மேலது, **அகநானூறு, (மணிமிடைபவளம்),** கழக வெளியீடு, சென்னை. 1944.

67. மேலது, **அகநானூறு (நித்திலக்கோவை),** கழக வெளியீடு, சென்னை. 1944.

68. வையாபுரிப் பிள்ளை, எஸ்., **சங்க இலக்கியம்,** பாரி நிலையம், சென்னை. 1967.

## அகராதிகள்


1. அறிஞர் குழு, **நர்மதாவின் தமிழகராதி,** 16/7 ராஜாபாதர் தெரு, பாண்டி பஜார், தி.நகர், சென்னை. 2002.

2. கழகப்புலவர் குழு, **கழகத் தமிழகராதி,** திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட், 154, டி.டி.கே. சாலை, சென்னை-18 2000.


## களஞ்சியங்கள்


1. அருணாசலம், ப. (ப.ஆ) **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம் தொகுதி -மூன்று** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 1988.

2. சாரங்கபாணி, இரா., (ப.ஆ) **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம் தொகுதி -ஒன்று** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 1986.

3. மேலது, **சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம் தொகுதி -இரண்டு** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 1986.

4. பெரியசாமித் தூரன், (ப.ஆ) **கலைக்களஞ்சியம், தொகுதி-ஒன்பது,** தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை. 1963.

5. . . . . . . . . . . . . . . . . . **வாழ்வியற் களஞ்சியம், தொகுதி - ஏழு,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1991.

**கட்டுரைகள்**

1. கிருஷ்ணமூர்த்தி, வெ.,(தொ.ஆ) **பண்டைத் தமிழகத்தில் சட்டமும் நீதியும், ஆய்வுக் கட்டுரைகள் (1)** ஆய்வு வட்ட வெளியீடு, வடபழனி, சென்னை-26. 1995.

**மலர்கள்**

1. வேணுகோபால், பெ., **சங்ககாலச் சமூகநீதி, எட்டாவது உலகத்தமிழ் மாநாட்டு மலர்,** தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர். 1995.

## ஆய்வேடுகள்


1. லோகேஸ்வரி, கி., **தமிழில் குற்றவியல் நாவல்கள்,** முனைவர் பட்ட ஆய்வேடு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. 2004.

2. . . . . . . . . . . . . . **புறநானூற்றில் அறம் ஆராய்ச்சி ஏடு,** தமிழ் முதுகலை வகுப்புத் தேர்வு, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை. 1972.


## ஆங்கில நூல்கள்


1. Meenakshi Sundaram, T.P., **A History of Tamil Literature,** Annamalai University, Annamalai Nagar. 1965.

2. Thani Nayagam, X.S., **Tamil Culture and Civilization,** Asia Publishing House, Bombay. 1970.

3. Udayakumar, K.R., **Let Me Help 'U'**
Muvattupuzha, Ernakulam (Dt),
Kerala.
2005.

DICTIONARY (**அகராதி**)

1. . . . . . . . . . . . . . . . . . . . . **The Oxford English Dictionary, Vol. II C,**
Oxford University Press,
London.

## அட்டவணை - 1
## சங்க இலக்கியத்தில்
## குற்றம் என்ற பொருள் தரும் சொற்கள் குறித்த அட்டவணை

### 1. அரலை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | புறநானூறு | 381 | 14 | புறத்திணை நன்னாகனார் |

### 2. ஆசு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | குறிஞ்சிப்பாட்டு | --- | 17 | கபிலர் |
| 2 | குறுந்தொகை | 108 | 3 | வாயிலான் தேவன் |
| 3 | மேலது | 277 | 1 | ஓரிற்பிச்சையார் |
| 4 | சிறுபாணாற்றுப்படை | --- | 74 | நல்லூர் நத்தத்தனார் |
| 5 | புறநானூறு | 353 | 1 | காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார் |

### 3. கசடு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | பதிற்றுப்பத்து | V4 | 6 | பரணர் |
| 2 | பொருநராற்றுப்படை | ---- | 70 | முடத்தாமக் கண்ணியார் |

## 4. கறை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | பரி. வையை | 10 | 130 | கரும்பிள்ளைப் பூதனார் |
| 2. | பரி. செவ் | 14 | 19 | கேசவனார் |

## 5. செயிர்

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | அகநானூறு | 66 | 3 | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் |
| 2. | மேலது | 75 | 10 | மதுரைப் போத்தனார் |
| 3. | மேலது | 155 | 13 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 4. | மேலது | 205 | 2 | நக்கீரர் |
| 5. | மேலது | 349 | 4 | மாமூலனார் |
| 6. | மேலது | 367 | 16 | பரணர் |
| 7. | ஐங்குறுநூறு | 419 | 1 | பேயனார் |

| | | | | |
|---|---|---|---|---|
| 8. | கலித்தொகை | 20 | 2 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 9. | மேலது | 102 | 19 | சோழன் நல்லுருத்திரன் |
| 10 | மேலது | 105 | 27 | மேலது |
| 11 | மேலது | 105 | 37 | மேலது |
| 12 | திருமுருகாற்றுப்படை | --- | 19 | நக்கீரர் |
| 13 | தொல்காப்பியம் | 1059 | 2 | தொல்காப்பியர் |
| 14 | மேலது | 1147 | 2 | மேலது |
| 15 | நற்றிணை | 72 | 3 | இளம்போதியார் |
| 16 | மேலது | 214 | 8 | கருவூர்க்கோசனார் |
| 17 | மேலது | 269 | 5 | எயினந்தை மகன் இளங்கீரனார் |
| 18 | மேலது | 364 | 12 | கிடங்கில் காவிதிப் பெருங்கொற்றனார் |
| 19 | பட்டினப்பாலை | --- | 280 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |

| | | | | |
|---|---|---|---|---|
| 20 | பதிற்றுப்பத்து | IV 7 | 5 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 21 | மேலது | VI 1 | 26 | காக்கைபாடினியார் |
| 22 | பரி.திரு.வாழ் | 1 | 27 | - - - - |
| 23 | பரி.திரு.வாழ் | 4 | 10 | கடுவன் இளவெயினியார் |
| 24 | புறநானூறு | 3 | 6 | இரும்பிடர்த்தலையார் |
| 25 | மேலது | 210 | 5 | பெருங்குன்றூர் கிழார் |

## 6. தா

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | கட.வாழ். | 16 | பாரதம் பாடிய பெருந்தேவனார் |
| 2 | மேலது | 37 | 3 | வில்லூற்றூர் மூதெயினனார் |
| 3 | மேலது | 212 | 1 | பரணர் |
| 4 | கலித்தொகை | 105 | 8 | சோழன் நல்லுருத்திரன் |
| 5 | திருமுருகாற்றுப்படை | --- | 89 | நக்கீரர் |
| 6 | மேலது | | 164 | மேலது |

| | | | | |
|---|---|---|---|---|
| 7 | மேலது | | 175 | மேலது |
| 8 | தொல்காப்பியம் | 827 | 1 | தொல்காப்பியர் |
| 9 | மேலது | 927 | 1 | மேலது |
| 10 | மேலது | 929 | 1 | மேலது |
| 11 | மேலது | 1020 | 1 | மேலது |
| 12 | மேலது | 1037 | 1 | மேலது |
| 13 | மேலது | 1059 | 5 | மேலது |
| 14 | மேலது | 1187 | 2 | மேலது |
| 15 | நற்றிணை | 261 | 5 | சேந்தம்பூதனார் |
| 16 | மேலது | 271 | 12 | ஆசிரியர் பெயர் தெரியவில்லை |
| 17 | பதிற்றுப்பத்து | II 6 | 14 | குமட்டூர்க் கண்ணனார் |
| 18 | மேலது | IV8 | 14 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 19 | பதிற்றுப்பத்து | IX 1 | 34 | பெருங்குன்றூர் கிழார் |
| 20 | புறநானூறு | 152 | 28 | வன்பரணர் |

| | | | | |
|---|---|---|---|---|
| 21 | மேலது | 373 | 36 | கோவூர்கிழார் |
| 22 | மதுரைக்காஞ்சி | --- | 445 | மாங்குடி மருதனார் |
| 23 | மேலது | --- | 704 | மாங்குடி மருதனார் |

## 7. தீது

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | கலித்தொகை | 26 | 6 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 2 | மேலது | 73 | 7 | மருதன் இளநாகனார் |
| 3 | மேலது | 81 | 33 | மேலது |
| 4 | மேலது | 83 | 25 | மேலது |
| 5 | மேலது | 88 | 15 | மேலது |
| 6 | மேலது | 91 | 7 | மேலது |
| 7 | மேலது | 91 | 16 | மேலது |
| 8 | மேலது | 105 | 6 | சோழன் நல்லுருத்திரன் |
| 9 | மேலது | 134 | 25 | நல்லந்துவனார் |
| 10 | மேலது | 142 | 50 | மேலது |
| 11 | மேலது | 143 | 20 | மேலது |
| 12 | குறுந்தொகை | 106 | 3 | கபிலர் |

| | | | | |
|---|---|---|---|---|
| 13 | குறுந்தொகை | 106 | 3 | கபிலர் |
| 14 | திருமுருகாற்றுப்படை | ---- | 70 | நக்கீரர் |
| 15 | நற்றிணை | கட.வாழ் | 7 | பாரதம் பாடிய பெருந்தேவனார் |
| 16 | மேலது | 201 | 6 | பரணர் |
| 17 | நெடுநல்வாடை | ---- | 89 | நக்கீரர் |
| 18 | பதிற்றுப்பத்து | 7 | 10 | குமட்டூர்க் கண்ணனார் |
| 19 | பரி.திரு.வாழ். | 1 | 39 | ஆசிரியர் பெயர் தெரியவில்லை |
| 20 | புறநானூறு | 47 | 7 | கோவூர்கிழார் |
| 21 | மேலது | 93 | 6 | ஔவையார் |
| 22 | மேலது | 192 | 2 | கணியன் பூங்குன்றனார் |
| 22 | மேலது | 214 | 13 | கோப்பெருஞ்சோழன் |

## 8. துகள்

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 136 | 5 | விற்றூற்று மூதெயினையார் |
| 2 | மேலது | 265 | 16 | மாமூலனார் |
| 3 | மேலது | 288 | 15 | விற்றூற்று மூதெயினையார் |
| 4 | கலித்தொகை | 64 | 15 | கபிலர் |
| 5 | மேலது | 94 | 42 | மருதன் இளநாகனார் |
| 6 | திருமுருகாற்றுப்படை | --- | 26 | நக்கீரர் |
| 7 | தொல்காப்பியம் | 1022 | 15 | தொல்காப்பியர் |
| 8 | நெடுநல்வாடை | --- | 127 | நக்கீரர் |
| 9 | புறநானூறு | 221 | 6 | பொத்தியார் |
| 10 | மேலது | 224 | 6 | கருங்குளவாதனார் |
| 11 | பெரும்பாணாற்றுப்படை | --- | 238 | இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங் கௌசிகனார் |

## 9. நவை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | கலித்தொகை | 12 | 3 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |

## 10. பழி

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | அகநானூறு | 11 | 15 | ஔவையார் |
| 2 | கலித்தொகை | 104 | 8 | சோழன் நல்லுருத்திரன் |
| 3 | குறுந்தொகை | 368 | 2 | நக்கீரர் |
| 4 | தொல்காப்பியம் | 1057 | 4 | தொல்காப்பியம் |
| 5 | மேலது | 1093 | 24 | மேலது |
| 6 | மேலது | 1161 | 2 | மேலது |
| 7 | மேலது | 1164 | 2 | மேலது |
| 8 | மேலது | 1367 | 2 | மேலது |
| 9 | மேலது | 1383 | 1 | மேலது |

| | | | | |
|---|---|---|---|---|
| 10. | மேலது | 1601 | 1 | மேலது |
| 11. | பதிற்றுப்பத்து | 1 | 18 | குமட்டூர்க் கண்ணனார் |
| 12. | மேலது | 1 | 11 | அரிசில்கிழார் |
| 13. | பொருநராற்றுப்படை | --- | 28 | முடத்தாமக்கண்ணியார் |

## 11. போக்கு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | பொருநராற்றுப்படை | --- | 150 | முடத்தாமக் கண்ணியார் |

## 12.புகர்

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | கலித்தொகை | 12 | 16 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 2 | மேலது | 135 | 14 | நல்லந்துவனார் |
| 3 | திருமுருகாற்றுப்படை | --- | 210 | நக்கீரர் |
| 4 | தொல்காப்பியம் | 82 | 3 | தொல்காப்பியம் |
| 5 | மேலது | 369 | 2 | தொல்காப்பியம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 6 | பதிற்றுப்பத்து | IV4 | 6 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 7 | மேலது | VI3 | 18 | காக்கைப்பாடினியார் |
| 8 | மேலது | VIII1 | 20 | அரிசில்கிழார் |
| 9 | மேலது | IX9 | 14 | பெருங்குன்றூர் கிழார் |
| 10. | பரி.திரு.வாழ். | 1 | 45 | ஆசிரியர் பெயர் தெரியவில்லை |
| 11. | மதுரைக்காஞ்சி | --- | 765 | மாங்குடி மருதனார் |

## 13. புரை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1. | தொல்காப்பியம் | 165 | 2 | தொல்காப்பியம் |
| 2 | மேலது | 785 | 1 | மேலது |
| 3 | மேலது | 1027 | 2 | மேலது |
| 4 | மேலது | 1053 | 12 | மேலது |
| 5 | மேலது | 1057 | 31 | மேலது |
| 6 | மேலது | 1060 | 42 | மேலது |
| 7 | மேலது | 1092 | 13 | மேலது |
| 8 | மேலது | 1218 | 1 | மேலது |
| 9 | மேலது | 1371 | 2 | மேலது |
| 10. | மேலது | 1394 | 2 | மேலது |
| 11. | மேலது | 1599 | 2 | மேலது |
| 12. | பதிற்றுப்பத்து | 10 | 13 | கபிலர் |
| 13. | மேலது | பதிற்.பதி.IX | 12 | பெருங்குன்றூர்கிழார் |

| | | | | |
|---|---|---|---|---|
| 14 | பரி. வையை | 10 | 83 | கரும்பிள்ளைப் பூதனார் |
| 15 | புறநானூறு | 42 | 6 | இடைக்காடனார் |

## 14. போக்கு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | சிறுபாணாற்றுப்படை | --- | 118 | நல்லூர் நத்தத்தனார் |
| 2 | பொருநராற்றுப்படை | --- | 86 | முடத்தாமக்கண்ணியார் |

## 15. மறு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 66 | 2 | செல்லூர்க் கோசிகன் கண்ணனார் |
| 2 | கலித்தொகை | 100 | 5 | மருதன் இளநாகனார் |
| 3 | குறுந்தொகை | 247 | 7 | சேந்தம்பூதன் |
| 4 | சிறுபாணாற்றுப்படை | --- | 121 | நல்லூர் நத்தத்தனார் |
| 5 | திருமுருகாற்றுப்படை | --- | 6 | நக்கீரர் |
| 6 | மேலது | --- | 60 | மேலது |
| 7 | மேலது | --- | 91 | மேலது |
| 8 | மேலது | --- | 147 | மேலது |
| 9 | தொல்காப்பியம் | 1021 | 4 | தொல்காப்பியர் |
| 10 | பதிற்றுப்பத்து | | 1 | குமட்டூர்க்கண்ணனார் |
| 11 | மேலது | | 16 | பெருங்குன்றூர்கிழார் |
| 12 | பரி. செவ். | 5 | 46 | கடுவன் இளவெயினனார் |
| 13 | மேலது | 5 | 69 | மேலது |

| | | | | |
|---|---|---|---|---|
| 14 | மேலது | 19 | 92 | நப்பண்ணனார் |
| 15 | பொருநராற்றுப்படை | --- | 227 | முடத்தாமக்கண்ணியார் |

## 16. மாசு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 6 | 13 | பரணர் |
| 2 | மேலது | 16 | 3 | சாலோசனார் |
| 3 | மேலது | 32 | 19 | நல்வெள்ளியார் |
| 4 | மேலது | 114 | 13 | ஆசிரியர் பெயர் இல்லை |
| 5 | கலித்தொகை | 24 | 6 | பாலைபாடிய பெருங்கடுங்கோ |
| 6 | மேலது | 77 | 16 | மருதன் இளநாகனார் |
| 7 | மேலது | 103 | 77 | சோழன் நல்லுருத்திரன் |
| 8 | மேலது | 107 | 31 | மேலது |
| 9 | மேலது | 143 | 45 | நல்லந்துவனார் |
| 10 | குறிஞ்சிப்பாட்டு | --- | 16 | கபிலர் |

| | | | | |
|---|---|---|---|---|
| 11 | மேலது | --- | 182 | மேலது |
| 12 | சிறுபாணாற்றுப்படை | --- | 157 | நல்லூர் நத்தத்தனார் |
| 13 | திருமுருகாற்றுப்படை | --- | 128,138,147 | நக்கீரர் |
| 14 | நற்றிணை | 15 | 7 | அறிவுடை நம்பி |
| 15 | மேலது | 69 | 7 | சேகம்பூதனார் |
| 16 | பதிற்றுப்பத்து | II10 | 28 | குமட்டூர்க்கண்ணனார் |
| 17 | பதிற்றுப்பத்து பதிகம் | VII | 11 | கபிலர் |
| 18 | பரி. திரு.வாழ். | 2 | 31 | கீரந்தையார் |
| 19 | மேலது | 3 | 2 | கடுவன் இளவெயினனார் |
| 20 | மேலது | 3 | 7 | மேலது |
| 21 | மேலது | 3 | 22 | மேலது |
| 22 | பரி. வையை | 6 | 7 | நல்லந்துவனார் |
| 23 | பரி. செவ் | 8 | 127 | மேலது |
| 24 | புறநானூறு | 287 | 11 | சாத்தந்தையார் |

## 17. மை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 136 | 1 | விற்றூற்று மூதெயினார் |
| 2 | ஐங்குறுநூறு | 235 | 1 | கபிலர் |
| 3 | மேலது | 474 | 1 | பேயனார் |
| 4 | கலித்தொகை | 62 | 14 | கபிலர் |
| 5 | மேலது | 81 | 1 | மருதன் இளநாகனார் |
| 6 | மேலது | 85 | 4 | மேலது |
| 7 | மேலது | 85 | 11 | மேலது |
| 8 | மேலது | 142 | 41 | நல்லந்துவனார் |
| 9 | தொல்காப்பியம் | 1063 | 2 | தொல்காப்பியர் |
| 10 | பட்டினப்பாலை | --- | 159 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| 11 | பதிற்றுப்பத்து | 2 | 8 | பாலைக் கௌதமனார் |
| 12 | மேலது | 8 | 11 | காப்பியாற்றுக் காப்பியனார் |

| | | | | |
|---|---|---|---|---|
| 13 | பரி.திரு.வாழ். | 1 | 3 | ஆசிரியர் பெயர் இல்லை |
| 14 | மேலது | 2 | 14 | கீரந்தையார் |
| 15 | மதுரைக்காஞ்சி | --- | 10 | மாங்குடி மருதனார் |

## 18. வடு

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | கலித்தொகை | 29 | 19 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 2 | சிறுபாணாற்றுப்படை | --- | 121 | நல்லூர் நத்தத்தனார் |
| 3 | மேலது | --- | 252 | மேலது |
| 4 | தொல்காப்பியம் | 1034 | 2 | தொல்காப்பியர் |
| 5 | மேலது | 1093 | 39 | தொல்காப்பியர் |
| 6 | பட்டினப்பாலை | --- | 208 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| 7 | பரிபாடல் திருமால் வாழ்த்து | 2 | 24 | கீரந்தையார் |
| 8 | புறநானூறு | 180 | 6 | மதுரைக்குமரனார் |

## 19. வசை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | கலித்தொகை | 26 | 14 | பாலை பாடிய பெருங்கடுங்கோ |
| 2 | தொல்காப்பியம் | 1382 | 2 | தொல்காப்பியர் |
| 3 | மேலது | 1386 | 2 | மேலது |
| 4 | மேலது | 1608 | 1 | மேலது |
| 5 | நற்றிணை | 106 | 4 | தொண்டைமான் இளந்திரையன் |
| 6 | பட்டினப்பாலை | --- | 1 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| 7 | பதிற்றுப்பத்து | 2 | 23 | குமட்டூர்க் கண்ணனார் |
| 8 | மேலது | 8 | 12 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 9 | மேலது | 1 | 16 | பரணர் |
| 10 | புறநானூறு | 359 | 10,11 | காவிட்டனார் |
| 11 | பெரும்பாணாற்றுப்படை | --- | 35 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| 12 | மலைபடுகடாம் | --- | 85 | இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் |

## 20. வேய்வை

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | புறநானூறு | 369 | 20 | பரணர் |
| 2 | பொருநராற்றுப்படை | --- | 17 | முடத்தாமக்கண்ணியார் |

## ஒறுப்பு என்ற சொல்லாட்சி

| வ.எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 342 | 1 | மதுரைக் கணக்காயனார் |
| 2 | கலித்தொகை | 58 | 20 | கபிலர் |
| 3 | குறுந்தொகை | 34 | 1 | கொல்லிக்கண்ணன் |
| 4 | புறநானூறு | 10 | 4 | ஊன்பொதி பசுங்குடையார் |

## அட்டவணை - 2
## சங்க இலக்கியத்தில்
## அறமன்றங்கள் என்ற பொருள் தரும் சொற்கள் குறித்த அட்டவணை
### 1) ‘அவை’

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 93 | 5 | நக்கீரனார் |
| 2 | மேலது | 226 | 14 | பரணர் |
| 3 | மேலது | 331 | 12 | மாமூலனார் |
| 4 | கலித்தொகை | 79 | 4 | மருதன் இளநாகனார் |
| 5 | மேலது | 140 | 22 | நல்லத்துவனார் |
| 6 | மேலது | 144 | 72 | நல்லத்துவனார் |
| 7 | குறுந்தொகை | 276 | 5 | கோழிக்கொற்றன் |
| 8 | தொல்காப்பியம் | 1022 | 17 | தொல்காப்பியர் |
| 9 | நற்றிணை | 90 | 12 | அஞ்சிலஞ்சியார் |
| 10 | மேலது | 167 | 3 | ஆசிரியர் பெயர் இல்லை |
| 11 | மேலது | 400 | 7 | ஆலங்குடி வங்கனார் |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 12 | பதிற்றுப்பத்து | IV 8 | 9 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 13 | மேலது | IX 5 | 9 | பெருங்குன்றூர்கிழார் |
| 14 | மேலது | 39 | 8 | நப்பசலையார் |
| 15 | மேலது | 54 | 3 | மதுரைக்குமரனார் |
| 16 | மேலது | 71 | 7 | பூதப்பாண்டியன் |
| 17 | மேலது | 83 | 3 | நக்கண்ணையார் |
| 18 | மேலது | 157 | 4 | குறமகள் இளவெயினியார் |
| 19 | மேலது | 224 | 4 | கருங்குளவாதனார் |
| 20 | மேலது | 239 | 10 | பெரெயில் முறுவலார் |
| 21 | மேலது | 266 | 8 | பெருங்குன்றூர்கிழார் |
| 22 | மேலது | 283 | 6 | அண்டர் நடுங்கல்லினார் |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 23 | பொருநராற்றுப்படை | ---- | 55 | முடத்தாமக்கண்ணியார் |
| 24 | மேலது | ---- | 188 | முடத்தாமக்கண்ணியார் |
| 25 | மதுரைக்காஞ்சி | ---- | 443 | மாங்குடி மருதனார் |
| 26 | மேலது | ---- | 492 | மாங்குடி மருதனார் |
| 27 | மேலது | ---- | 508 | மாங்குடி மருதனார் |
| 28 | மேலது | ---- | 778 | மாங்குடி மருதனார் |
| 29 | மலைபடுகடாம் | ---- | 39 | இரணிய முட்டத்துப் பெருங்கௌசிகனார் |
| 30 | மேலது | ---- | 77 | இரணிய முட்டத்துப் பெருங்கௌசிகனார் |

## 2. ‘மன்றம்’

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 1 | அகநானூறு | 128 | 1 | கபிலர் |
| 2 | மேலது | 157 | 11 | வேம்பற்றூர்க்குமரனார் |
| 3 | மேலது | 158 | 13 | கபிலர் |
| 4 | மேலது | 301 | 24 | அதியன் விண்ணத்தனார் |
| 5 | மேலது | 321 | 10 | கயமனார் |
| 6 | மேலது | 373 | 2 | பாண்டியன் ஏனாதி நெடுங்கண்ணனார் |
| 7 | மேலது | 377 | 6 | நப்பாலத்தனார் |
| 8 | கலித்தொகை | 58 | 22 | கபிலர் |
| 9 | மேலது | 102 | 39 | சோழன் நல்லுருத்திரன் |
| 10 | மேலது | 103 | 62 | சோழன் நல்லுருத்திரன் |
| 11 | மேலது | 108 | 60 | சோழன் நல்லுருத்திரன் |
| 12 | மேலது | 110 | 20 | சோழன் நல்லுருத்திரன் |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 13 | மேலது | 141 | 10 | நல்லந்துவனார் |
| 14 | குறுந்தொகை | IV 8 | 9 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 15 | மேலது | IX 5 | 9 | பெருங்குன்றூர்கிழார் |
| 16 | மேலது | 39 | 8 | நப்பசலையார் |
| 17 | மேலது | 54 | 3 | மதுரைக்குமரனார் |
| 18 | மேலது | 71 | 7 | பூதப்பாண்டியன் |
| 19 | மேலது | 83 | 3 | நக்கண்ணையார் |
| 20 | திருமுருகாற்றுப்படை | 157 | 4 | குறமகள் இளவெயினியார் |
| 21 | தொல்காப்பியம் | 224 | 4 | கருங்குளவாதனார் |
| 22 | நற்றிணை | 239 | 10 | பேரெயில் முறுவலார் |
| 23 | மேலது | 266 | 8 | பெருங்குன்றூர்கிழார் |
| 24 | மேலது | 283 | 6 | அண்டர் நடுங்கல்லினார் |
| 25 | நெடுநல்வாடை | | | |

| வரிசை எண் | நூற்பெயர் | பாடல் எண் | அடி | ஆசிரியர் |
|---|---|---|---|---|
| 26 | பட்டினப்பாலை | - - - | 69 | கடியலூர் உருத்திரங்கண்ணனார் |
| 27 | மேலது | - - - | 255 | மேலது |
| 28 | பதிற்றுப்பத்து | II 3 | 17 | குமட்டூர்க்கண்ணனார் |
| 29 | மேலது | II 4 | 23 | குமட்டூர்க்கண்ணனார் |
| 30 | மேலது | III 3 | 5 | பாலைக் கௌதமனார் |
| 31 | மேலது | III 5 | 4 | பாலைக் கௌதமனார் |
| 32 | மேலது | IV 5 | 8 | காப்பியாற்றுக் காப்பியனார் |
| 33 | மேலது | V 3 | 26 | பரணர் |
| 34 | புறநானூறு | 34 | 12 | ஆலந்தூர்கிழார் |
| 35 | மேலது | 76 | 4 | இடைக்குன்றூர்க்கிழார் |
| 36 | மேலது | 128 | 1 | உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் |
| 37 | மேலது | 181 | 1 | சோணாட்டு முகையலூர் சிறுகருந்தும்பியார் |